ஸ்ரீ:



திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமடல்

## இனிய எளிய விளக்கம்

ஸ்ரீஉ.பவே. வித்வான் திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி

**ரங்கநாதாசார்யர் ஸ்வாமி**

Copies are available with :

1. **SRI S.S. GOPALAN**

No.57, Velachery Main Road,

Madipakkam, Chennai - 600 091.

Phone : 22580622

2. **SRI. R. SANTHANAM**

No.2/1068, 9th Street, Periyar Nagar,

Madipakkam, Chennai - 600 091.

Phone : 2258 2868

Cell : 9444850694

அச்சிட்டோர் : மணிவாசகர் ஆப்செட் பிரிண்டர்ஸ், சென்னை - 600 021,
தொலைபேசி : 25954528

ஸ்ரீ:

ஸ்ரீமதே நிகமாந்த மஹாதேஶிகாய நம:

# விண்ணப்பம்

அடியோங்களுடைய ஆசார்யர் **ஸ்ரீ உ.ப.வே. வித்வான் திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி ரங்கநாதாசார்யர் ஸ்வாமி** எழுதிய கலியனின் 'திருவெழுகூற்றிருக்கை' 'சிறிய திருமடல்' ப்ரபந்தங்களின் இனிய எளிய விளக்கங்களை ஸர்வஜித் – சித்திரை ரேவதி (14–5–2007) ஸர்வதாரி – சித்திரை ரேவதி (3–5–2008)களில் அன்னாருடைய திருநக்ஷத்ர வைபவங்களின் போது வெளியிட்டோம்.

அதனைத் தொடர்ந்து 'பெரிய திருமடல்' உரையையும் ப்ரசுரிக்க ஆசார்யரின் அனுமதி பெற்று ஸர்வதாரி – கார்த்திகை கார்த்திகை (11–12–2008) மங்கையர்கோன் திருநக்ஷத்ர தினத்தில் வெளியிடுகின்றோம்.

ஆசார்யரின் அநுக்ரஹம் தொடர்ந்து கிடைத்து வருவதைப் பெருமையுடன் எண்ணி அன்னாரைப்

'போற்றி உகப்பதும் புந்தியில் கொள்வதும் பொங்குபுகழ் சாற்றி வளர்ப்பதும்' ஆன அளவேயன்றி வேறு எதற்கும் அடியோங்களுக்கு அருகதையில்லை.

இந்த வெளியீட்டிற்குப் பொருளுதவி செய்த அன்பர்களுக்கு எங்களுடைய க்ருதக்ஞதைகள்.

வழக்கம் போல் இந்த நூலையும் அழகுபட அச்சிட்டுக் கொடுத்து உதவிய Hi-Tech Graphic திரு. மாதவன் மிக்க நலமுடன் இப்பணிகளில் தொடர்ந்து ஈடுபட திவ்யதம்பதிகளின் திருவருளைப் பிரார்த்திக்கிறோம்.

அடியோங்கள்
துவார் பாஷ்யம் ஸ்ரீநிவாஸ கோபாலன்
பரவஸ்து சந்தான கோபாலன்

மடிப்பாக்கம்
சென்னை–91.
11–12–2008



ஸ்ரீ உ.வே. வித்வான் திருவள்ளூர் திருமலை ஈச்சம்பாடி

# ரங்கநாதாசார்யர் ஸ்வாமி

कौण्डिन्य वीररघ्वीश पदपङ्कज षट्पदम्।
रङ्गनाथ गुरूम् वंदे द्राविडाम्नाय देशिकम्।।

## மேற்கோள் நூல்களின் பெயர் சுருக்கப் பட்டியல்

| | | |
|---|---|---|
| அமலனாதி | – | அமலனாதிபிரான் |
| இரண்டாந்திரு | – | இரண்டாந்திருவந்தாதி |
| கட | – | கடவல்லி |
| கீதை | – | ஸ்ரீமத் பகவத் கீதை |
| திருவாய் | – | திருவாய் மொழி |
| திருச்சந்த.விரு | – | திருச்சந்த விருத்தம் |
| திருநெடுந்தாண் | – | திருநெடுந்தாண்டகம் |
| திருவிருத் | – | திருவிருத்தம் |
| தைத். நா | – | தைத்திரீயம் நாராயணவல்லி |
| தைத்.ஆன | – | தைத்திரீயம் ஆனந்தவல்லி |
| நான்முகன் | – | நான்முகன் திருவந்தாதி |
| நாச்.திரு | – | நாச்சியார் திருமொழி |
| ப்ரஹ்ம ஸூத். | – | ப்ரஹ்ம ஸூத்ரம் |
| பாகவ | – | ஸ்ரீமத் பாகவதம் |
| பார | – | ஸ்ரீமஹாபாரதம் |
| பெரியதிரு. | – | பெரிய திருமொழி |
| பெருமாள்திரு. | – | பெருமாள் திருமொழி |
| பெரியாழ்.திரு. | – | பெரியாழ்வார் திருமொழி |
| பெரிய திருவந் | – | பெரிய திருவந்தாதி |
| பு.ஸூ | – | புருஷ ஸூக்தம் |
| முண்டக | – | முண்டகோபநிஷத் |
| மூன்றாந் திரு | – | மூன்றாந்திருவந்தாதி |
| ரங்க.ஸ்த | – | ஸ்ரீ ரங்கராஜ ஸ்தவம் |
| ரா | – | ஸ்ரீமத் ராமாயணம் |
| வி.பு. | – | ஸ்ரீ விஷ்ணு புராணம் |

ஸ்ரீ:



श्रीमान्वेङ्कटनाथार्यः कवितार्किककेसरी ।
वेदान्ताचार्यवर्योमे सन्निधत्तां सदाहृदि ॥

रामानुजदयापात्रं ज्ञान वैराग्यभूषणम् ।
श्रीमद्वेङ्कटनाथार्यं वन्दे वेदान्त देशिकम् ॥

कलयामि कलिध्वंसं कविं लोकदिवाकरम् ।
यस्य गोभिः प्रकाशभिराविद्यं निहतं तमः ॥

## திருமங்கையாழ்வார் அருளிச்செய்த

# பெரிய திருமடல்

### தனியன்

பொன்னுலகில்வானவரும் பூமகளும் போற்றி செய்யும் *

நல்நுதலீர் ! நம்பிநறையூரர் * – மன்னுலகில்

என்னிலைமைகண்டும் இரங்காரேயாமாகில் *

மன்னுமடலூர்வன்வந்து.

---

✪ மன்னியபல்பொறிசேர் ஆயிரவாய்வாளரவின் *

சென்னிமணிக்குடுமி தெய்வச்சுடர்நடுவுள் *

மன்னியநாகத்தணைமேல் ஓர்மாமலைபோல் *

மின்னுமணிமகரகுண்டலங்கள்வில்வீச *

துன்னியதாரகையின் பேரொளிசேர்ஆகாசம் *

என்னும்விதானத்தின்கீழால் * (1) – இருசுடரை

மன்னும்விளக்காகஏற்றி * மறிகடலும்

பன்னுதிரைக்கவரிவீச * (2) – நிலமங்கை

தன்னைமுனநாள் அளவிட்டதாமரைபோல் *

மன்னியசேவடியை வானியங்குதாரகைமீன் *

என்னும்மலர்ப்பிணையலேய்ந்த * (3) – மழைக்கூந்தல்

தென்னனுயர்பொருப்பும் தெய்வவடமலையும் *

என்னும்இவையே முலையாவடிவமைந்த *

அன்னநடையஅணங்கே * (4) – அடியிணையைத்

தன்னுடையஅங்கைகளால் தான்தடவத்தான்கிடந்து * ஓர்

உன்னியயோகத்து உறக்கம்தலைக்கொண்ட

பின்னை * தன்நாபிவலயத்துப் பேரொளிசேர் *
மன்னியதாமரை மாமலர்பூத்து * அம்மலர்மேல்
முன்னம்திசைமுகனைத் தான்படைக்க * (5) – மற்றவனும்
முன்னம்படைத்தனன்நான்மறைகள் * அம்மறைதான்
மன்னும்அறம்பொருளின்பம் வீடென்றுஉலகில் *
நன்னெறிமேம்பட்டன நான்கன்றே * (6) – நான்கினிலும்
பின்னையதுபின்னைப் பெயர்தருமென்பது * ஓர்
தொன்னெறியைவேண்டுவார் வீழ்கனியும்ஊழிலையும் *
என்னும்இவையேநுகர்ந்து உடலம்தாம்வருந்தி *
துன்னும் இலைக்குரம்பைத்துஞ்சியும் * (7) – வெஞ்சுடரோன்
மன்னும்அழல்நுகர்ந்தும் வண்தடத்தினுட்கிடந்தும் *
இன்னதோர்தன்மையராய் ஈங்குஉடலம்விட்டெழுந்து *
தொன்னெறிக்கண்சென்றா ரெனப்படும்சொல்லல்லால் *
இன்னதோர்காலத்து இனையார்இதுபெற்றார் *
என்னவும்கேட்டறிவதில்லை * (8) – உளதென்னில்
மன்னும்கடுங்கதிரோன் மண்டலத்தின்நன்னடுவுள் *
அன்னதோரில்லியினூடுபோய் * (9) – வீடென்னும்
தொன்னெறிக்கண்சென்றாரைச்சொல்லுமின்கள் சொல்லாதே *
அன்னதேபேசும் அறிவில்சிறுமனத்து * ஆங்கு
அன்னவரைக் கற்பிப்போம்யாமே * (10) – அதுநிற்க,
முன்னம்நான்சொன்ன அறத்தின்வழிமுயன்ற *
அன்னவர்தாம்கண்டீர்கள் ஆயிரக்கண்வானவர்கோன் *
பொன்னகரம்புக்குஅமரர் போற்றிசெப்ப *(11) – பொங்கொளிசேர்

கொல்நவிலும்கோளரிமாத் தான்சுமந்தகோலம்சேர் *
மன்னியசிங்காசனத்தின்மேல் * (12) – வாள்நெடுங்கண்
கன்னியரால்இட்ட கவரிப்பொதியவிழ்ந்து * ஆங்கு
இன்னிளம்பூந்தென்றலியங்க * (13) – மருங்கிருந்த
மின்னனையநுண்மருங்குல் மெல்லியலார்வெண்முறுவல் *
முன்னம்முகிழ்த்த முகிழ்நிலாவந்தரும்ப *
அன்னவர்தம்மானோக்க முண்டாங்கணிமலர்சேர் *
பொன்னியல்கற்பகத்தின் காடுடுத்தமாடெல்லாம் *
மன்னியமந்தாரம் பூத்தமதுத்திவலை *
இன்னிசைவண்டமரும் சோலைவாய்மாலைசேர் *
மன்னியமாமயில்போல்கூந்தல் * (14) – மழைத்தடங்கண்
மின்னிடையாரோடும் விளையாடிவேண்டிடத்து *
மன்னுமணித்தலத்து மாணிக்கமஞ்சரியின் *
மின்னினொளிசேர் பளிங்குவிளிம்படுத்த *
மன்னும்பவளக்கால் செம்பொன்செய்மண்டபத்துள் *
அன்னநடைய அரம்பையர்தம்கைவளர்த்த *
இன்னிசையாழ்ப்பாடல்கேட்டுஇன்புற்று * (15) – இருவிசும்பில்
மன்னுமழைதவழும் வாணிலாநீள்மதிதோய் *
மின்னினொளிசேர் விசும்பூரும்மாளிகைமேல் *
மன்னுமணிவிளக்கைமாட்டி * (16) – மழைக்கண்ணார்
பன்னுவிசித்திரமாப் பாப்படுத்தபள்ளிமேல் *
துன்னியசாலேகம் சூழ்கதவம்தாள்திறப்ப *
அன்னம்உழக்க நெரிந்துக்கவாள்நீலச் *

சின்னநறுந்தாதுசூடி * (17) – ஓர்மந்தாரம்

துன்னுநறுமலரால் தோள்கொட்டி * கற்பகத்தின்

மன்னுமலர்வாய் மணிவண்டுபின்தொடர *

இன்னிளம்பூந்தென்றல் புகுந்தீஙகிளமுலைமேல் *

நன்னறுஞ்சந்தனச்சேறுள் புலர்த்த * (18) – தாங்கருஞ்சீர்

மின்னிடைமேல்கைவைத் திருந்தேந்திளமுலைமேல் *

பொன்னரும்பாரம்புலம்ப * (19) – அகங்குழைந்தாங்கு

இன்னவுருவின் இமையாத்தடங்கண்ணார் *

அன்னவர்தம்மானோக்கமுண்டு ஆங்குஅணிமுறுவல் *

இன்னமுதம் மாந்தியிருப்பர் * (20) – இதுவன்றே

அன்னஅறத்தின் பயனாவது * ஒண்பொருளும்

அன்னதிறத்ததே யாதலால் * (21) – காமத்தின்

மன்னும்வழிமுறையே நிற்றும்நாம் * மானோக்கின்

அன்னநடையார் அலரேசஆடவர்மேல் *

மன்னுமடலூரா ரென்பதோர்வாசகமும் *

தென்னுரையில்கேட்டறிவதுண்டு * (22) – அதனையாம்தெளியோம்

மன்னும்வட நெறியேவேண்டினோம் * வேண்டாதார்

தென்னன் பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் *

அன்னதோர்தன்மை அறியாதார் * (23) – ஆயன்வேய்

இன்னிசையோசைக்கு இரங்காதார் * மால்விடையின்

மன்னுமணிபுலம்ப வாடாதார் * (24) – பெண்ணைமேல்

பின்னும்அவ்வன்றிற் பேடைவாய்ச்சிறுகுரலுக்கு *

உன்னியுடலுருகி நையாதார் * (25) – உம்பர்வாய்த்

துன்னுமதியுகுத்த தூநிலாநீள்நெருப்பில் *
தம்முடலம்வேவத் தளராதார் * (26) – காமவேள்
மன்னும்சிலைவாய் மலர்வாளிகோத்தெய்யப் *
பொன்னெடுவீதி புகாதார் * (27) – தம்பூவணைமேல்
சின்னமலர்க்குழலும் அல்குலும்மென்முலையும் *
இன்னிளவாடைதடவத் தாம்கண்துயிலும் *
பொன்னனையார் பின்னும்திருவுறுக * (28) – போர்வேந்தன்
தன்னுடையதாதை பணியால்அரசொழிந்து *
பொன்னகரம் பின்னேபுலம்ப வலங்கொண்டு *
மன்னும்வளநாடு கைவிட்டு * (29) – மாதிரங்கள்
மின்னுருவில்வி(வெ)ண்தேர் திரிந்துவெளிப்பட்டு *
கல்நிறைந்துதீய்ந்து கழையுடைந்துகால்சுழன்று *
பின்னும்திரைவயிற்றுப் பேயேதிரிந்துலவா *
கொன்னவிலும்வெங்கானத்தூடு * (30) – கொடுங்கதிரோன்
துன்னுவெயில்வறுத்த வெம்பரல்மேல்பஞ்சடியால் *
மன்னன்இராமன்பின் வைதேவியென்றுரைக்கும் *
அன்னநடைய அணங்குநடந்திலளே ? * (31)
பின்னும்கருநெடுங்கண் செவ்வாய்பிணைநோக்கின் *
மின்னனையநுண்மருங்குல் வேகவதியென்றுரைக்கும்
கன்னி * தன்இன்னுயிராம் காதலனைக்காணாது *
தன்னுடையமுன்தோன்றல் கொண்டேகத்தான்சென்று * அங்கு
அன்னவனைநோக்காது அழித்துரப்பி * (32) – வாளமருள்
கல்நவில்தோள்காளையைக் கைப்பிடித்துமீண்டும்போய் *

பொன்னவிலும்ஆகம் புணர்ந்திலளே ? * (33) – பூங்கங்கை

முன்னம்புனல்பரக்கும் நல்நாடன் * மின்னாடும்

கொன்னவிலும்நீள்வேல் குருக்கள்குலமதலை *

தன்னிகரொன்றில்லாத வென்றித்தனஞ்சயனை *

பன்னாகராயன் மடப்பாவை * (34) – பாவைதன்

மன்னியநாணச்சம் மடமென்றிவையகல *

தன்னுடைய கொங்கைமுகம்நெரிய * (35) – தான்அவன்தன்

பொன்வரையாகம் தழீஇக்கொண்டுபோய் * தனது

நல்நகரம்புக்கு நயந்துஇனிதுவாழ்ந்ததுவும் *

முன்னுரையில் கேட்டறிவதில்லையே ? * (36) – சூழ்கடலுள்

பொன்னகரம்செற்ற புரந்தரனோடேரொக்கும் *

மன்னவன்வாணன் அவுணர்க்குவாள்வேந்தன் *

தன்னுடையபாவை உலகத்துத்தன்னொக்கும் *

கன்னியரையில்லாத காட்சியாள் * (37) – தன்னுடைய

இன்னுயிர்த்தோழியால் எம்பெருமானீன்துழாய் *

மன்னுமணிவரைத்தோள் மாயவன் * (38) – பாவியேன்

என்னைஇதுவிளைத்த ஈரிரண்டுமால்வரைத்தோள் *

மன்னவன்தன்காதலனை மாயத்தால்கொண்டுபோய் *

கன்னிதன்பால்வைக்க மற்றவனோடுஎத்தனையோ *

மன்னியபேரின்பமெய்தினாள் * (39) – மற்றிவைதான்

என்னாலேகேட்டீரே ? ஏழைகாள் !என்னுரைக்கேன் ? *

மன்னுமலையரையன் பொற்பாவை * (40) – வாள்நிலா

மின்னுமணிமுறுவல் செவ்வாயுமையென்னும் *

அன்னநடையஅணங்கு நுடங்கிடைசேர் *
பொன்னுடம்புவாடப் புலனைந்தும்நொந்தகல *
தன்னுடையகூழைச் சடாபாரம்தான்தரித்து * ஆங்கு
அன்னஅருந்தவத்தி னூடுபோய் * (41) – ஆயிரந்தோள்
மன்னுகரதலங்கள் மட்டித்து * மாதிரங்கள்
மின்னியெரிவீச மேலெடுத்தசூழ்கழற்கால் *
பொன்னுலகமேழும் கடந்துஉம்பர்மேல்சிலும்ப *
மன்னுகுலவரையும் மாருதமும்தாரகையும் *
தன்னினுடனே சுழலச்சுழன்றாடும் *
கொல்நவிலும்மூவிலைவேல் கூத்தன்பொடியாடி *
அன்னவன்தன்பொன்னகலம் சென்றாங்கணைந்திலளே ? *
பன்னியுரைக்குங்கால் பாரதமாம் * (42) – பாவியேற்கு
என்னுறுநோய் யான்உரைப்பக்கேண்மின் * இரும்பொழில்சூழ்
மன்னுமறையோர் திருநறையூர்மாமலைபோல் *
பொன்னியலும்மாடக் கவாடம்கடந்துபுக்கு *
என்னுடையகண்களிப்ப நோக்கினேன் * (43) – நோக்குதலும்
மன்னன்திருமார்பும் வாயும்அடியிணையும் *
பன்னுகரதலமும் கண்களும் * (44) – பங்கயத்தின்
பொன்னியல்காடு ஓர்மணிவரைமேல்பூத்ததுபோல் *
மின்னியொளிபடைப்ப வீழ்நாணும்தோள்வளையும் *
மன்னியகுண்டலமும் ஆரமும்நீள்முடியும் *
துன்னுவெயில்விரித்த சூளாமணியிமைப்ப *
மன்னுமரதகக் குன்றின்மருங்கே * (45) – ஓர்

இன்னிளவஞ்சிக்கொடியொன்று நின்றதுதான் *
அன்னமாய்மானாய் அணிமயிலாய்ஆங்கிடையே *
மின்னாய்இளவேயிரண்டாய் இணைச்செப்பாய் *
முன்னாயதொண்டையாய்க் கெண்டைக்குலமிரண்டாய் *
அன்னதிருவுருவம் நின்றது அறியாதே *
என்னுடையநெஞ்சும் அறிவும்இனவளையும் *
பொன்னியலும்மேகலையும் ஆங்கொழியப்போந்தேற்கு *
மன்னுமறிகடலும்ஆர்க்கும் * (46) – மதியுகுத்த
இன்னிலாவின்கதிரும் என்தனக்கேவெய்தாகும் *
தன்னுடையதன்மை தவிரத்தானென்கொலோ ? *
தென்னன்பொதியில் செழுஞ்சந்தின்தாதளைந்து *
மன்னிவ்வுலகை மனங்களிப்பவந்தியங்கும் *
இன்னிளம்பூந்தென்றலும் வீசும்எரிஎனக்கே *
முன்னியபெண்ணைமேல் முள்முளரிக்கூட்டகத்து *
பின்னும்அவ்வன்றில் பேடைவாய்ச்சிறுகுரலும் *
என்னுடையநெஞ்சுக்கு ஓரீர்வாளாம்என்செய்கேன் ? *
கல்நவில்தோள்காமன் கருப்புச்சிலைவளைய *
கொல்நவிலும்பூங்கணைகள் கோத்துப்பொதவணைந்து *
தன்னுடையதோள்கழியவாங்கி * (47) – தமியேன்மேல்
என்னுடையநெஞ்சே இலக்காகஎய்கின்றான் *
பின்னிதனைக் காப்பீர்தாம்இல்லையே * (48) – பேதையேன்
கல்நவிலும்காட்டகத்து ஓர்வல்லிக்கடிமலரின் *
நல்நறுவாசம் மற்றாரானும்எய்தாமே *

மன்னும்வறுநிலத்து வாளாங்குகுத்ததுபோல் *
என்னுடையபெண்மையும் என்நலனும்என்முலையும் *
மன்னுமலர்மங்கைமைந்தன் * (49) – கணபுரத்துப்
பொன்மலைபோல்நின்றவன்தன் பொன்னகலம்தோயாவேல் *
என்னிவைதான் ? வாளாஎனக்கேபொறையாகி *
முன்னிருந்துமூக்கின்று மூவாமைக்காப்பதோர் *
மன்னுமருந்தறிவீ ரில்லையே ? * (50) – மால்விடையின்
துன்னுபிடரெருத்துத் தூக்குண்டு * வன்தொடரால்
கன்னியர்கண்மிளிரக் கட்டுண்டு * (51) – மாலைவாய்த்
தன்னுடையநாவொழியாது ஆடும்தனிமணியின் *
இன்னிசையோசையும் வந்துஎன்செவிதனக்கே *
கொல்நவிலும்எஃகின் கொடிதாய்நெடிதாகும் *
என்னிதனைக்காக்குமா ? சொல்லீர் * (52) – இதுவிளைத்த
மன்னன்நறுந்துழாய் வாழ்மார்பன் * மாமதிகோள்
முன்னம்விடுத்த முகில்வண்ணன் * (53) – காயாவின்
சின்னநறும்பூந் திகழ்வண்ணன் * வண்ணம்போல்
அன்னகடலை மலையிட்டணைகட்டி *
மன்னனிராவணனை மாமண்டுவெஞ்சமத்து *
பொன்முடிகள்பத்தும் புரளச்சரம்துரந்து *
தென்னுலகம்ஏற்றுவித்தசேவகனை * (54) –ஆயிரக்கண்
மன்னவன்வானமும் வானவர்தம்பொன்னுலகும் *
தன்னுடையதோள்வலியால் கைக்கொண்டதானவனை *
பின்னோரரியுருவமாகி எரிவிழித்து *

கொல்நவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே (55) – வல்லாளன்
மன்னுமணிக்குஞ்சிபற்றிவரவீர்த்து •
தன்னுடையதாள்மேல்கிடாத்தி • (56) – அவனுடைய
பொன்னகலம்வள்ளுகிரால் போழ்ந்துபுகழ்படைத்த •
மின்னிலங்கும்ஆழிப் படைத்தடக்கைவீரனை •
மன்னிவ்வகலிடத்தை மாமுதுநீர்தான்விழுங்க •
பின்னும்ஒரேனமாய்ப் புக்குவளைமருப்பில் •
கொல்நவிலும்கூர்நுதிமேல் வைத்தெடுத்தகூத்தனை •
மன்னும்வடமலையை மத்தாகமாசுணத்தால் •
மின்னும்இருசுடரும் விண்ணும்பிறங்கொளியும் •
தன்னினுடனேசுழல மலைதிரித்து • ஆங்கு
இன்னமுதம் வானவரையூட்டி • அவருடைய
மன்னும்துயர்கடிந்த வள்ளலை • (57) – மற்றன்றியும்
தன்னுருவம்ஆரும்அறியாமல் தானங்கோர் •
மன்னும்குறளுருவின் மாணியாய் • (58) – மாவலிதன்
பொன்னியலும்வேள்விக்கண் புக்கிருந்து • போர்வேந்தர்
மன்னைமனங்கொள்ள வஞ்சித்துநெஞ்சுருக்கி •
என்னுடையபாதத்தால் யானளப்பமூவடிமண் •
மன்னா !தருகென்று வாய்திறப்ப • (59) – மற்றவனும்
என்னால்தரப்பட்டது என்றலுமே • அத்துணைக்கண்
மின்னார்மணிமுடிபோய் விண்தடவ • (60) – மேலெடுத்த
பொன்னார்கனைகழற்கால் ஏழுலகும்போய்க்கடந்து • அங்கு
ஒன்னாஅசுரர் துளங்கச்செலநீட்டி •

மன்னிவ்வகலிடத்தை மாவலியைவஞ்சித்து •

தன்னுலகமாக்குவித்த தாளானை • (61) – தாமரைமேல்

மின்னிடையாள்நாயகனை விண்ணகருள்பொன்மலையை •

பொன்னிமணிகொழிக்கும் பூங்குடந்தைப்போர்விடையை •

தென்னன்குறுங்குடியுள் செம்பவளக்குன்றினை •

மன்னியதண்சேறை வள்ளலை • (62) – மாமலர்மேல்

அன்னம்துயிலும் அணிநீர்வயலாலி •

என்னுடையஇன்னமுதை எவ்வுள்பெருமலையை •

கன்னிமதிள்சூழ் கணமங்கைக்கற்பகத்தை •

மின்னைஇருசுடரை வெள்ளறையுள்கல்லறைமேல்

பொன்னை • மரதகத்தைப் புட்குழியெம்போரேற்றை •

மன்னுமரங்கத்து எம்மாமணியை • (63) – வல்லவாழ்ப்

பின்னைமணாளனைப் பேரில்பிறப்பிலியை •

தொன்னீர்க்கடல்கிடந்த தோளாமணிச்சுடரை •

என்மனத்துமாலை இடவெந்தையீசனை •

மன்னுங்கடல்மல்லை மாயவனை • (64) – வானவர்தம்

சென்னிமணிச்சுடரைத் தண்கால்திறல்வலியை •

தன்னைப்பிறரறியாத் தத்துவத்தைமுத்தினை •

அன்னத்தைமீனை அரியைஅருமறையை •

முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை • (65) – கோவலூர்

மன்னும்இடைகழி யெம்மாயவனை • பேயலறப்

பின்னும்முலையுண்ட பிள்ளையை • (66) – அள்ளல்வாய்

அன்னம்இரைதேர் அழுந்தூரெழுஞ்சுடரை •

பெ.-2

தென்தில்லைச் சித்திரகூடத்துஎன்செல்வனை • (67) –
மின்னிமழைதவழும் வேங்கடத்துஎம்வித்தகனை •
மன்னனை மாலிருஞ்சோலைமணாளனை •
கொல்நவிலும்ஆழிப்படையானை • (68) – கோட்டியூர்
அன்னவுருவிலரியை • திருமெய்யத்து
இன்னமுதவெள்ளத்தை இந்தளூரந்தணனை •
மன்னுமதிள்கச்சி வேளுக்கையாளரியை •
மன்னியபாடகத்து எம்மைந்தனை • (69) – வெஃகாவில்
உன்னியயோகத்துறக்கத்தை • ஊரகத்துள்
அன்னவனை அட்டபுயகரத்தெம்மானேற்றை •
என்னைமனங்கவர்ந்தஈசனை • (70) – வானவர்தம்
முன்னவனை மூழிக்களத்து விளக்கினை •
அன்னவனை ஆதனூராண்டளக்கும்ஐயனை •
நென்னலைஇன்றினை நாளையை • (71) – நீர்மலைமேல்
மன்னுமறைநான்குமானானை • புல்லாணித்
தென்னன்தமிழை வடமொழியை • நாங்கூரில்
மன்னுமணிமாடக் கோயில்மணாளனை •
நல்நீர்த் தலைச்சங்கநாண்மதியை • (72) – நான்வணங்கும்
கண்ணனைக் கண்ணபுரத்தானை • தென்னறையூர்
மன்னுமணிமாடக்கோயில்மணாளனை •
கல்நவில்தோள்காளையைக் கண்டாங்குக்கைதொழுது •
என்நிலைமையெல்லாம் அறிவித்தால்எம்பெருமான் •
தன் அருளும்ஆகமும் தாரானேல் • (73) – தன்னைநான்

மின்னிடையார்சேரியிலும் வேதியர்கள்வாழ்விடத்தும் *
தன்னடியார்முன்பும் தரணிமுழுதாளும் *
கொல்நவிலும்வேல்வேந்தர் கூட்டத்தும்நாட்டகத்தும் *
தன்னிலைமையெல்லாம் அறிவிப்பன் * (74) – தான்முனநாள்
மின்னிடையாய்ச்சியர்தம் சேரிக்களவின்கண் *
துன்னுபடல்திறந்துபுக்கு * (75) – தயிர்வெண்ணெய்
தன்வயிறாரவிழுங்க * கொழுங்கயற்கண்
மன்னுமடவோர்கள் பற்றிஓர்வான்கயிற்றால் *
பின்னும்உரலோடு கட்டுண்டபெற்றிமையும் *
அன்னதோர்பூதமாய் ஆயர்விழவின்கண் *
துன்னுசகடத்தால் புக்கபெருஞ்சோற்றை *
முன்னிருந்துமுற்றத்தான் துற்றிய தெற்றெனவும் *
மன்னர்பெருஞ்சவையுள் வாழ்வேந்தர்தூதனாய் *
தன்னையிகழ்ந்துரைப்பத் தான்முனநாள்சென்றதுவும் *
மன்னுபறைகறங்க மங்கையர்தம்கண்களிப்ப *
கொன்னவிலும்கூத்தனாய்ப் பெயர்த்தும்குடமாடி *
என்னிவன் ? என்னப்படுகின்றஈடறவும் *
தென்னிலங்கையாட்டி அரக்கர்குலப்பாவை *
மன்னனிராவணன்தன் நல்தங்கை * (76) – வாளெயிற்றுத்
துன்னுசுடுசினத்துச் சூர்ப்பணகாசோர்வெய்தி *
பொன்னிறங்கொண்டு புலர்ந்தெழுந்தகாமத்தால் *
தன்னைநயந்தாளைத் தான்முனிந்துமூக்கரிந்து *
மன்னியதிண்ணெனவும் வாய்த்தமலைபோலும். *

தன்னிகரொன்றில்லாத தாடகையை * (77) – ✪ மாமுனிக்காத்

தென்னுலகமேற்றுவித்த திண்திறலும் * மற்றிவைதான்

உன்னியுலவாஉலகறிய ஊர்வன்நான் *

முன்னிமுளைத்தெழுந்து ஓங்கியொளிபரந்த *

மன்னியபூம்பெண்ணைமடல். (78)

## திருமங்கையாழ்வார் திருவடிகளே ஶரணம்.

என்னிலைமையெல்லாம் அறிவித்தால் எம்பெருமான் *

தன்னருளும்ஆகமும்தாரானேல் * – பின்னைப்போய்

ஒண்துறைநீர்வேலை உலகறியஊர்வன்நான் *

வண்டறைபூம்பெண்ணைமடல்.

மண்ணிற்பொடிப்பூசி வண்டிரைக்கும்பூச்சூடி *

பெண்ணைமடல்பிடித்துப் பின்னே * – அண்ணல்

திருநறையூர்நின்றபிரான் தேர்போகும்வீதி *

பொருமுறையால்செல்வம்புரிந்து.

## சீரார் தூப்புல் திருவேங்கடமுடையான் திருவடிகளே ஶரணம்



திருக்கார்த்திகையில் அவதரித்த
ஸ்ரீ கலியன் ஸ்ரீ குமுதவல்லி நாச்சியாருடன்
திருவாலி திருநகரி

ஸ்ரீ :

# பெரிய திருமடல்

திருவுடனமரும் பரிமுகர் திருவடிகள் வாழி
மங்கையர் கோன் மலரடிகள் வாழி
எந்தையிராமாநுசன் இணையடிகள் வாழி
தூப்புலம்மான் தூவடிகள் வாழி.

பெரிய திருமடல் கலியனுடைய கடைசீ ப்ரபந்தமென்று ஸ்வாமி தேசிகன் திருவுள்ளம். பெரியவாச்சான் பிள்ளை முதலிய சில ஆசார்யர்கள் இதனை கடைசீ ப்ரபந்தமாக அவர்கள் கருதும் திருநெடுந்தாண்டகத்திற்கு முந்தையது என்பர். இந்த ப்ரபந்தத்திற்கு தனியன் அருளிச் செய்தவர் பிள்ளை திருநறையூர் அரையர்.

பொன்னுலகில் வானவரும் பூமகளும் போற்றிசெயும்
நன்னுதலீர் நம்பி நறையூரர் – மன்னுலகில்
என்னிலைமை கண்டு மிரங்காரே யாமாகில்
மன்னு மடலூர்வன் வந்து.

நல்நுதலீர் – அழகிய நெற்றியையுடையவர்களே, பொன் உலகில் – பரமபதத்தில், வானவரும் – நித்ய ஸூரிகளும், பூமகளும் – பூவிற் தோன்றிய பெரிய பிராட்டியாரும், போற்றிசெயும் – திருப்பல்லாண்டு பாடும், நம்பி நறையூரர் – பரிபூர்ணரான திருநறையூர் நம்பி, மன்னுலகில் – நித்யமான பூலோகத்தில், என் நிலைமைகண்டும் – என்னுடைய நிலையைக்கண்டும், இரங்காரே யாமாகில் – கருணை புரியவில்லையாகில், வந்து – அவர் இருக்குமிடம் வந்து, மன்னும் மடலூர்வன் – நிலையாக மடல் ஊர்வேன்.

ஆழ்வார் பேச்சாகவே அமைந்துள்ளது இந்த தனியன். மடலிலே ஆழ்வார் நெஞ்சில் ஓடுகிற கருத்தை அருளிச் செய்கிறார். எல்லோராலும் ஸ்தோத்ரம் பண்ணத்தக்க எம்பெருமான், தன் க்ருஷிபலமாக இந்த லீலாவிபூதியில் பரபக்தி, பரஜ்ஞான, பரமபக்திகளையுடைய என்னைப் பெற்றான். என்னுடைய இந்த நிலைகளைக் கண்டும் எனக்கு அருள் செய்யாதொழியில், அநந்யோபாயத்வம் குலையும்படி அதிப்ராவண்யத்தை வெளியிடக் கடவேன் என்கிறார்.

(நன்னுதலீர்) நல்ல நெற்றியையுடையவர்களே! 'வாள் முகத்தீர்' என்றாற்போலே பகவத்பக்தியாகிற ஒளிவீசும் மற்றைய ஆழ்வார்களை. விளிக்கிறார். (பொன்னுலகில் வானவரும்) हिरण्मये परे लोके (முண்டக. 2–2–10) என்றபடி பொன்மயமான பரமபதத்தில் வாழும் நித்யஸூரிகளும், (பூமகளும்) பூவில் வாழும் பெரிய பிராட்டியாரும், (போற்றி செயும்) திருப் பல்லாண்டு பாடும். 'பரதனும் தம்பி சத்துருக்கனனும் இலக்குமனோடு மைதிலியும் இரவும் நன்பகலும் துதிசெய்ய நின்ற இராவணாந்தகனை யெம்மானை' (பெரியதிரு. 2–3–7) என்றபடி. 'பூமகனும்' என்று பாடமானபோது பொன்னுலகான ஸ்வர்கத்தில் வாழும் தேவர்களும், நாபீகமலத்தில் தோன்றிய பிரமனும் என்று பொருள். (நம்பி நறையூரர்) நறையூரரான நம்பி. இங்கு வந்து குணபௌஷ்கல்யம் உண்டாயிற்று.

(மன்னுலகில் என்னிலைமை கண்டும்) என் நிலைமை – என் பெருமை என்று பொருள். இவள் பெருமையாவது என்ன எனில், சப்தாதி விஷயங்களிலே மடுக்கக்கூடிய இந்த உலகில் இருந்தும் எம்பெருமானையே நினைத்திருப்பவள். அவனையே வாய் வெருவுகிறவள். இப்படிப்பட்டவளை 'பேராளன் பேரோதும் பெண்ணை மண்மேல் பெருந்தவத்தள் என்றல்லால் பேசலாமே' (திருநெடுந்தாண். 20) என்பர். எம்பெருமானுடைய க்ருஷிபலமாக

பரபக்தி முதலியவற்றை அடைந்து பெருந்தவத்தள் என்று பேசத்தக்க என் நிலைமை கண்டும். அல்லது என்னுடைய இரங்கத்தக்க தசையைக் கண்டும். இவள் நிலை எப்படி இருக்கிறது எனில், 'தாதாடு வனமாலை தாரானோ என்றென்றே தளர்ந்தாள்'(பெரியதிரு. 5–5–6) என்றிருக்கிறது. இதைக் கண்டும் 'வண்டு திவளும் தண்ணந்துழாய் கொடீர்' (திருவாய். 2–4–5) என்றும் 'இரக்கமெழீர்' (திருவாய். 2–4–3) என்னும் படியும் இருந்தாராகில், (மன்னு மடலூர்வன் வந்து) தாமிருக்கும் வரையிலும் என் மடலூர்தலும் தொடரும். மடலும் கையுமாய் வந்து அவன் கொண்டாடியிருக்கும் குணப்பெருமை எல்லாம் அழிப்பேன். இத்தால் அவன் ஶீக்ரமே அங்கீகரிக்கும்படி அதிப்ராவண்யத்தை வெளியிடுவேன். 'இத்தலையால் வருமது சைதன்ய கார்யம், அத்தலையால் வருமது ஸாதனம்'.

'பெரிய திருமடலாவது – கண்ணாஞ்சுழலையிட்ட ப்ரபந்தம் இன்னமொன்று; போர்சுட்டுப் பொரி கொறிக்கை' என்பது அவதாரிகையின் தொடக்கத்திலுள்ள பெரியவாச்சான்பிள்ளை ஸ்ரீஸூக்தி. தன் ஸ்வரூபத்தையும் பரஸ்வரூபத்தையும் அறியவொட்டாதபடி கண் சுழன்று கிறுகிறுக்க வைத்த சிறிய திருமடலைப் போன்ற மற்றொரு ப்ரபந்தம். நெல்லை அடைய முடியாத ஒருவன் வழியல்லா வழியால் நெற்போரைக் கொளுத்தி அதினின்று தெறிக்கும் நெற்பொரிகளைத் தின்பதற்கு ஒப்பாகும் மடலெடுத்தல் என்பர். ஸ்வரூபத்தையழித்துக் கொண்டு மடலெடுத்துப் பரமபுருஷனை அடைய முயலும் இம்முயற்சி 'போர் சுட்டுப்பொறி கொறிப்பது' என்கிறார். மடலெடுக்கும் நாயகியின் நோக்கம் என்ன எனில், தன் அதிப்ரவ்ருத்தியைக் கண்டு தன்னைச் சேர்ந்தவர்கள் தன்னைக் கைவிடுவர். தன் (நாயகியின்) வாயாலே நாயகனுடைய குணஹாநியைக் கேட்ட அவனைச் சேர்ந்தவர்கள்

அவனைக் கைவிடுவர். கைவிடப்பட்ட தானும் நாயகனும் வேறு போக்கு இல்லாமல் ஒருவழியே போகலாம் என்று நினைக்கிறாள்.

'வாடினேன் வாடி' என்று பெரிய திருமொழியில் தொடங்கி சிறிய திருமடலளவும் பகவத் குணங்களோடு பழகிப் போன இவருக்கு ஆற்றாமை மிகுந்து அதன் காரணமாக வழியல்லா வழியில் சென்றாகிலும் அவனைப் பெறவேண்டும் என்று மயங்கிப் பேசிய பேச்சு இது. சிறிய திருமடல் அவன் குணங்களை நினைவு படுத்தி ஆற்றாமையை அதிகரிக்கச் செய்து விட்டது. அவனோ வரவில்லை. சிறிய போரில் தோற்றவர்கள் பெரும்படை திரட்டிக்கொண்டு பெரிய போரிலே இழிவது போல இப்போது பெரிய திருமடலாகிற இப்ரபந்தத்தை அருளிச் செய்கிறார்.

எம்பெருமானோடு கலந்து பிரிந்த ஒரு பிராட்டி அவனைப் பிரிந்து ஆற்றாமையாலே மடலூர்ந்தாகிலும் காணவேண்டும் என்ற தசையை அடைந்தது போல் அத்தசை தமக்குப் பிறந்து பேசுகிறார்.

மடலூர்வது என்பது இருவருக்கும் தோஷத்தை விளைவிப்பதன்றோ எனில், ஆம். குணத்தைப் பேணியிருந்து பயனைப் பெறாதபோது, தோஷத்தை உண்டாக்கிக் கொண்டாவது பயனைப் பெறுவதே தக்கது என்கிறது இப்ரபந்தம்.

தன்னைப் பற்றிக் கவலைப்படாமல் பகவத் ஸம்ருத்தியைப் பேணினவர்கள் பிராட்டி, பரதாழ்வான், இளைய பெருமாள், நம்மாழ்வார் போன்ற பேறிவாளர்கள். रामस्य दयिता भार्या नित्यं प्राणसमा हिता (ராமனுக்கு ப்ரியமான மனைவி. எப்போதும் உயிரைப் போல் நன்மை பயப்பவள். ரா.பா. 1–26) எனப்பட்டவள் பிராட்டி. அவள் ममैव दुष्कृतं किंचित् महदस्ति न संशयः । समर्थावपि तौ यन्मां नावेक्षेते परन्तपौ ॥ (எதிரிகளை அழிப்பதிலும் எதையும் செய்வதற்கும் சாமர்த்தியம் உள்ளவர்களாகிய ராம, லக்ஷ்மணர்கள் என்னை இதுவரை மீட்காததற்கு காரணம் நான்

செய்த பெரியதொரு குற்றமே என்பதில் ஸந்தேகம் இல்லை. ரா.ஸு. 38–48) என்றாள். स्वप्ने मयायं विकृतोऽद्य दृष्टः शाखामृगः शास्त्रगणैः निषिद्धः। स्वस्त्यस्तु रामाय सलक्ष्मणाय तथा पितुर्मे जनकस्य राज्ञः॥ (அஶோகவனத்தில் திருவடியை எதிர்பாராமல் கண்ட ப்ராட்டி அதனை கனவாக நினைத்துப் பேசிய வார்த்தை: நான் கனவில் குரங்கைக் கண்டதால் ராம லக்ஷ்மணர்களுக்கோ அல்லது என் தந்தையான ஜனகருக்கோ எந்த தீங்கும் நேரக்கூடாது. ரா.ஸு.32–9) என்றாள். தான் கண்ட ஸ்வப்னம் ராம லக்ஷ்மண ஜனகர்களை பாதிக்கக்கூடாது என்பதே அவள் லக்ஷ்யம். ராமன் காட்டுக்கு எழுந்தருளினான் என்பதைக் கேட்ட பரதன் न मन्थरायाः न च मातुरस्याः दोषो न राज्ञो न च राघवस्य (மந்தரை, என் தாயான கைகேயி, அரசரான தஶரதர், ராமபிரான் ஆகியவர்களுடைய பாபத்தினால் ராகவன் வனம் போகவில்லை. அதற்கு நான் செய்த பாவமே காரணம்) என்றான். உத்தர காண்டத்தில் இளைய பெருமாள் வார்த்தை यदि प्रीतिः महाराज यद्यनुग्राह्यता मयि जहि मां निर्विशङ्कः त्वं धर्मं वर्धय राघव (மஹாராஜனே, என்னிடம் அன்புள்ளதாகில், நான் அருளத்தக்கவனாகில் ஸந்தேஹமின்றி என்னைக் கைவிட்டு ப்ரதிஜ்ஞையைக் காத்துக்கொள்வீர். ரா.உ.106.4) பெருமானை விட்டுத்தான் பிரிய வேண்டியிருந்தாலும் ப்ரதிஜ்ஞை தவறினார் என்ற அவச் சொல் வரக்கூடாது என்று நினைத்தான். நம்மாழ்வாரும் 'வளவேழ்' (திருவாய். 1–5) என்ற பதிகத்தில் எம்பெருமானுடைய மேன்மையையும் தம் நீர்மையையும் கண்டு அகலப்பார்க்கிறார். இந்தப் பதிகத்தின் அர்த்தத்தைச் சுருங்கக் கூறவந்த மாமுனிகள் 'வளம் மிக்க மால் பெருமை மன்னுயிரின் தண்மை உளமுற்று அங்கூடுருவ ஓர்ந்து, தளர்வுற்று நீங்க நினை மாறனை மால் நீடிலகு சீலத்தால் பாங்குடனே சேர்த்தான் பரிந்து' என்பர். திருவாய்மொழி ஆயிரத்திலும் எம்பெருமானுடைய குணங்கள் பேசப்படுகின்றன என நிரூபிக்கும் 'த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளி'(16)யில் प्राह नाथं सुशीलं என்றார்

ஸ்வாமி தேசிகன். உயர்ந்தவர் தாழ்ந்தவரோடு ஒரு நீராகக் கலப்பது ஶீலம். இவ்வாறாக அவர்கள் அனைவரும் பரஸம்ருத்தியைப் பாரிக்க இவர் – 'உணர்வெனும் பெரும்பதம் தெரிந்து நாடினேன்' (பெரியதிரு. 1–1–1) என்று பேசும் இவர் – மடலெடுப்பது இவரது பேரறிவுக்குப் பொருத்தமானதோ எனில், இவர் அறிவின் மேல் குற்றமில்லை. எம்பெருமானுடைய வடிவழகும் திருக்கல்யான குணங்களும் இவரை இப்பாடு படுத்துவிக்கின்றன. தஶரதனின் ஸபையில் இருந்தவர்கள் बहवो नृप कल्याणगुणा: पुत्रस्य सन्ति ते (ராஜனே! உம் பிள்ளைக்கு பல நற்குணங்கள் உள்ளன. ரா.அயோ. 2–26) என்றார்கள். ராமனோடு விரோதம் வேண்டாம் என்று வாலிக்கு அறிவுறுத்தும் தாரை धातूनामिव शैलेन्द्रो गुणानामाकरो महान् (தாதுக்களுக்கு மலையரசன் இருப்பிடமாவது போல் குணங்களுக்குப் பெரியதோர் இருப்பிடம் ராமன். ரா.கி.15–21) என்றாள். அயோத்யா நகரவாஸிகளையும் தாரை போன்ற ஸாமான்யர்களையும் ஈடுபடுத்தும் பகவத் குணங்கள், எம்பெருமானிடம் பேரன்பு கொண்ட ஆழ்வாரை ஈடுபடுத்தி வழியல்லா வழியிலும் செலுத்தும் என்பது பொருத்தமே.

மேலும் எம்பெருமானும் பரகாலநாயகியும் तुल्यशीलवयोवृत्तां (ஒழுக்கம், வயது ஆகியவற்றில் ஒத்தவர். ரா.ஸு.16–5) என்கிறபடியே ஒருவருக்கொருவர் பொருத்தமுடையவர்கள். இப்படிப்பட்ட இருவரும் தைவயோகத்தாலே கூடி பின்பு தைவயோகத்தாலே பிரிந்து பரஸ்பரம் வரவு பார்த்திருந்து நெடுங்காலம் வரக்காணாமையாலும் தூது விடுதல் போன்ற த்ருஷ்டோபாயங்களும் நோன்பு நோற்றல் போன்ற அத்ருஷ்டோபாயங்களும் பயன் தராத போது ஆற்றாமை மிகுந்து மடலூர்ந்தாகிலும் காணவேண்டும் என்று துடிப்பது பொருத்தமே. தைவயோகத்தாலே கூடுவது பொருத்தமே. பிரிவது

தைவயோகமாவது – புண்ய பலமாவது – எப்படியெனில், அஶோக வனத்தில் சிறையிருக்கும் பிராட்டி ப்ராணத்யாகம் செய்ய நினைத்த போது சில ஸுபஸூசகங்கள் தோன்ற மிகவும் மகிழ்ந்தாள் என்று சொல்லவந்த வால்மீகி एतैर्निमित्तैरपरैश्च सुभ्रूः संभोधिता प्रागपि साधु सिद्धैः । वातातपक्लान्तमिव प्रनष्टं वर्षेण बीजं प्रतिसंजहर्ष ॥ (ரா.ஸு.29–6) என்கிறார். காற்றாலும் வெயிலாலும் வாடி வதங்கிய விதை மழையினால் முன்னிலும் அழகாக முளைவிடுவது போல் முன்னிலும் பொலிவு பெற்றாள் என்கிறார். பிரிவும் ப்ரீதியை வளர்ப்பதொன்றாகையாலே அதைப் புண்யபலமென்பது பொருத்த முடையதே. स्त्रियो वृद्धास्तरुण्यश्च सायं प्रातः समाहिताः। सर्वान् देवान् नमस्यन्ति रामस्यार्थे मनस्विनः॥ (ராமனுடைய க்ஷேமத்திற்காக ஸ்த்ரீகளும், வயோதிகர்களும், இளைஞர்களும் சேர்ந்து இரண்டு வேளைகளிலும் எல்லாத் தெய்வங்களையும் வழிபட்டனர். ரா.அயோ. 2–52) என்றபடி அவனுக்குப் பரிய வேண்டியிருக்க அவனைத் தூற்றிக் கொண்டு மடலெடுப்பது தகுமோ எனில், தகும். மடலூர்வதாவது என்ன ? உண்ணாமல், குளிக்காமல் தான் காதலித்தவளின் படத்தைக் கையிலேந்தித் திரிவதும், காதல் நோய் முற்றினால் அப்படத்தின் காலில் விழுவதும், விழுந்த பிறகு கரையானரிக்கும்படி அங்கேயே கிடப்பதும், அப்படியே உயிர் விடுவதும் ஆகும். இதெல்லாம் காதலால் வருவது, காதலை வெளிப்படுத்தி வளர்ப்பது. ஆகையால் காதலருடைய ஸ்வபாவத்திற்குப் பொருத்தமானதே.

प्रयोजनमनुद्दिश्य न मन्दोऽपि प्रवर्तते (மூடனுங்கூடப்பயனற்ற செயலில் ஈடுபடமாட்டான்) என்பர். மடலெடுப்பதால் பயனென்ன எனில், இந்த அதிப்ரவ்ருத்தியைக் கண்டு அவன் முகம் கொடுப்பன். அப்படிக் கொடாது போனாலும் காதலை வளர்ப்பதே ஸ்வயம் ப்ரயோஜனம். कामिनो वर्णयन् कामान् लोभं लुब्धस्य वर्णयन् । नरः किं फलमाप्नोति कूपेऽन्धमिव पातयन्॥ (காமுகனின் காமங்களை வர்ணிப்பதாலும், உலோபியின் கருமித்தனத்தை விவரிப்பதாலும், கிணற்றில் குருடனைத்

தள்ளுவது போலே, மனிதன் ஒரு நற்பயனையும் அடைவதில்லை.) இது விடப்ரவிருத்தியாய், அசாஸ்த்ரீயமாய், ஸத்துக்களும் கைவிடுவது ஒன்றாகையாலே ப்ராப்தமல்லவே என்ன, உண்மை. ஸப்தாதி விஷயங்களால் ஏற்படும் காமம் விடத்தக்கதே. இங்கே சொல்லுவது வேதாந்தங்களில் விதிக்கப்பட்ட பகவத் பக்தியை. भक्तिः शृङ्गारवृत्त्या परिणमति (பக்தியே காதலாகப் பரிணமிக்கிறது. த்ரமிடோபநிஷத் தாத்பர்ய ரத்னாவளி– 3) ஆகையால் குற்றமில்லை. व्यवसायादृते ब्रह्मन् नासादयति तत्परम् (அந்தணரே! பக்தியாகிற மனவுறுதியில்லாவிடில் அந்தப் பரவஸ்துவை அடைய மாட்டான். பார. சாந்தி 334–47), परमात्मनि यो रक्तो विरक्तोऽपरमात्मनि सर्वैषणा विनिर्मुक्तो स भैक्षं भोक्तुमर्हति (பரமாத்மாவிடம் எவன் காதல் பூண்டு மற்ற விஷயங்களை வெறுத்து இருக்கிறானோ அவனே ईषणात्रयத்தை– மண்ணாசை, பெண்ணாசை, பொன்னாசை – விட்டு ஸந்யாஸம் பண்ணிக்கொள்ளக் கடவன் – பார்ஹஸ்பத்ய ஸ்ம்ருதி), यदिच्छन्तो ब्रह्मचर्यं चरन्ति (எந்த பரமாத்ம வஸ்துவை ஆசைப்பட்டு பெண்ணாசையை விட்டிருக்கின்றனரோ. கட. 2–15) என்றிப்படி ப்ரமாணங்கள் பகவத் பக்தியாகிற துணிவையே காமம் என்கின்றன. ஸந்யாஸதர்மத்தை ஆளவந்தார் மடல் என்று அருளிச் செய்தார். காரணம் உற்றார் உறவினர் எல்லாரையும் துறந்து செயல்படுவதால்.

பெரிய திருமடலில் முதலில் தர்மார்த்த மோக்ஷங்களை இகழ்வது ஏன் எனில், இகழ்வதில் நோக்கமில்லை. தாம் மேற்கொண்ட காம புருஷார்த்தம் சிறந்தது என்பதில் தாத்பர்யம். இதை नहि निन्दान्याय என்பர். சித்ரகூடத்திலிருந்து திரும்பிவந்து ராஜ்யமாள வேண்டும் என்று பெருமாளை பரதன் ப்ரார்த்திக்க, பெருமாள் பித்ருவசன பாலனமே முக்யமென்று மறுக்க, உடனிருந்த ஜாபாலி என்ற மஹர்ஷி சார்வாக மதத்தை ஒட்டி சில அதர்மங்களைச் சொன்னார். இப்படி நாஸ்திகவாதம் பேசின அவரை जाबालिः ब्राह्मणोत्तमः (அந்தணர் தலைவரான ஜாபாலி. ரா.அயோ.108–1) என்று வால்மீகி

கொண்டாடினார். காரணம், ராமனிடம் உள்ள அன்பின் மிகுதியால் இப்படிச் சொன்னாரேயன்றி அவர் உண்மையில் நாஸ்திகர் அல்ல. அவர் சொல்வதைப் பார்ப்போம் सचापि कालोऽयमुपागतः शनैः यथा मया नास्तिक वागुदीरिता। निवर्तनार्थं तव राम कारणात् प्रसादनार्थं च मयैतदीरितम्॥ (நான் நாஸ்திகன் அல்ல. நீ திரும்பி வருவதற்காகவும் உன்னை சந்தோஷப் படுத்துவதற்காகவும் இதைச் சொன்னேன். ரா.அயோ. 109–39) வஸிஷ்டர் जाबालिरपि जानीते लोकस्यास्य गतागतिं। निवर्तयितु कामस्तु त्वामेतद्ववाक्यमुक्तवान्॥ (ஜாபாலிக்கும் லோக நடைமுறை தெரியும். நீ திரும்பி வருவத்ற்காகவே இதைச் சொன்னார். ரா.அயோ.110–1,2) என்றார். அதுபோல் ஆழ்வாருக்கும் காமபுருஷார்த்தத்தைப் புகழ்வதிலேயே நோக்கம்.

பெண்கள் மடலூரார் என்று இலக்கணம் கூறுகிறதே – 'கடலன்ன காமத்தராகிலும் மாதர் மடலூரார் மற்றையார் மேல்' என்று இது விதிநிஷேத வசனமன்று. रागतः ப்ராப்தமாகையால் தோற்றார் மடலூர்வர். அத்தனையே.

இப்படி மடலூர்ந்தார் ஆர் என்னில், சக்ரவர்த்தித் திருமகனும் பிராட்டியுமே. மடலூர்தல் என்பது ஆற்றாமை மிக்கு வழியில்லா வழி சென்றாகிலும் அபிமதத்தை அடையப் பார்ப்பது தானே. பிராட்டியைக் காணாது துடித்த பெருமாள் सदेवगन्धर्वमनुष्यपन्नगं जगत् सशैलं परिवर्तयाम्यहम् (தேவர், கந்தர்வர், மனிதர், பாம்புகள் முதலியவற்றோடு கூடியதான உலகை மலைகளோடு கூட நான் தலைகீழாக்குவேன். ரா.ஆ.64–78) என்றார். अशोक शोकापनुद शोकोपहतचेतसं। त्वन्नामानं कुरु क्षिप्रं प्रियासन्दर्शनेन मां॥ (ஶோகத்தைப் போக்கும் அஶோகமரமே! என் காதலியைக் காட்டுவதன் மூலம், துன்புற்ற மனத்தையுடைய என்னை விரைவில் உன் பெயரையுடையவனாகச் – அஶோகனாக, ஶோகமற்றவனாக – செய்வாயாக. ரா.ஆ.60–17) என்றும் சொன்னார். असूर्यपश्यै ஆன பிராட்டி या न शक्या पुरा द्रष्टुं भूतैराकाशगैरपि। तामद्य

सीतां पश्यन्ति राजमार्गगतां जनाः ॥ (எந்த தேவியானவள் ஆகாசத்தில் ஸஞ்சரிக்கும் ஜீவராசிகளாலும் காணமுடியாதவளாயிருந்தாளோ, அந்த ஸீதையை இன்று ராஜவீதியிலுள்ள எல்லா ஜனங்களும் காண்கிறார்கள். ரா.அயோ.33–8) என்று சொல்லும்படி ராமன்பின் நடந்தாள். இவரே 'மன்னனிராமன் பின் வைதேவி என்றுரைக்கும் அன்னநடைய அணங்கு நடந்திலளே' என்கிறார். ஆக ஆற்றாமை மிக்கவர் மடல் ஊர்வர். வாஸவதத்தை முதலானோர் விஷயத்தில் கண்டோம்.

மேலே சொன்ன உதாஹரணங்களில் மடலூர்ந்தவர்கள் பிராட்டியும் வாஸவதத்தையும். இருவருமே ராஜகுலத்தவர். பரகாலநாயகி அப்படிப்பட்டவள் அன்றே எனில், பெருமானுடையவும் பிராட்டியினுடையவும் கடைக்கண் நோக்காலே ராஜபுத்ரிகளுக்குள்ள பெருமை இவளுக்கும் உண்டாயிற்று. स श्लाघ्यः स गुणी धन्यः स कुलीनः स बुद्धिमान्। स शूरः स च विक्रान्तः यं त्वं देवि निरीक्षसे ॥ (எவனை ஸ்ரீதேவியாகிற தேவரீர் கடாக்ஷிக்கிறீரோ, அவனே சிறந்தவன், அவனே குணவான், அவனே பாக்யசாலி, அவனே நற்குடிப்பிறந்தவன், அவனே அறிவாளி, அவனே சூரன், அவனே வீரன். வி.பு.1–9–131), 'தேசும் திறலும் திருவும் உருவமும் மாசில் குடிப்பிறப்பும் மற்றவையும் பேசில் வலம் புரிந்த வான்சங்கம் கொண்டான் பேரோத நலம்புரிந்து சென்றடையும் நன்கு' (மூன்றாந்திரு. 10), 'குலந்தரும் செல்வம் தந்திடும் அடியார் படுதுயராயினவெல்லாம் நிலந்தரம் செய்யும் நீள் விசும்பருளும் அருளொடு பெருநிலமளிக்கும் வலந்தரும் மற்றும் தந்திடும் பெற்றதாயினும் ஆயினசெய்யும் நலந்தரும்' (பெரியதிரு. 1–1–9) என்றபடி எல்லாமே வந்து சேரும்.

எம்பெருமானைப் பிரிந்து விரஹத்தாலே வாடின மாலை போலே இருக்கும் இப்பிராட்டியின் நிலையைக் கலியனது பாசுரம்

விளக்குகிறது. 'துளம்படு முறுவல் தோழியர்க்கருளாள் துணைமுலை சாந்து கொண்டணியாள் குளம்படு குவளைக் கண்ணிணை யெழுதாள் கோலநன்மலர் குழற்கணியாள் வளம்படு முந்நீர் வையமுன்னளந்த மாலென்னும் மாலின மொழியாள்' (பெரியதிரு. 2–7–2). இப்படி இருக்கும் இவள் காதல் மிகுந்து மடலூரத்துணிந்தாள். மற்றவர்களாயின் அவர்கள் முகம் கோபத்தால் காட்டுத்தீ தூவினார்ப்போல் கொடூரமாயிருக்கும். ஆனால் இவள் முகம் குளித்து விருந்துண்டவர் முகம் போலக் குளிர்ந்து அதிகப் பொலிவுடன் விளங்கியது. இதைக் கண்ட தோழி இவள் மடலூரப் போவதை உணர்ந்தாள். பீமஸேனன் ஒரு முறை ஸௌகந்திக வனம் சென்றான். வழியில் ஹனுமன் ராமபஜனம் செய்து கொண்டு உட்கார்ந்திருந்தார். பீமஸேனன் ஹனுமனுடைய பெருமையை அறியாமல் 'வழிவிடு' என்று அதட்டினான். அதற்குத் திருவடி சொன்னார் 'வயதான என்னால் நகரமுடியவில்லை. என் வாலை நகர்த்தி விட்டுப்போ' என்று. தன் பலத்தினால் கர்வம் கொண்ட பீமஸேனன் எவ்வளவு முயன்றும் வாலை நகர்த்த முடியவில்லை. அவரை ஹனுமன் என்று அறிந்து வணங்கினான். அப்போது பீமஸேனன் சொன்ன வார்த்தை **निर्गुण: परमात्माऽसौ देहं ते व्याप्य तिष्ठति । तमहं ज्ञान विज्ञेयम् नावमन्ये न लंघये ॥** (நாணேறிடாத வில்லையுடைய பரமபுருஷனான இந்த ராமபிரான் உன்திருமேனியை வ்யாபித்து விளங்குகிறார், அறிவினால் அறியத்தக்க அவரை நான் அவமதிக்கவும் மாட்டேன், தாண்டவும் மாட்டேன். பார.ஆர. 149–8) இங்கு 'நிர்குண' என்றால் குணங்களே இல்லாத பரமாத்மா என்று பொருளல்ல. 'பெருமாள் கையும் வில்லும் உள்ளே நிழலிடா நின்றதீ' என்பது பெரிய வாச்சான் பிள்ளையின் ஸ்ரீஸூக்தி. ஹனுமானின் திருமேனியில் கையும் வில்லுமான ராமனின் உருவம் புலப்பட்டது போல, தோழியும் இவள் முகத்தில் மடலேற வேண்டும் என்ற உறுதியைக் கண்டாள். இது தகாத செயல் என்று எடுத்துச்

சொன்னாள். பெருமாளும் பிராட்டியும் விவாஹாநந்தரம் அயோத்தியிலே இருந்தபடியை வால்மீகி तया स राजर्षिसुतोऽभिरामया समेयिवानुत्तमराजकन्यया । अतीव रामः शुशुभेऽतिकामया विभुः श्रिया विष्णुरिवामरेश्वरः ॥ (ராஜ ருஷியான தசரதனின் புத்திரனான அவ்விராமபிரான், அழகியவளும் சிறந்த ராஜகந்யையுமான ஸீதையோடு கூடி, மிக விரும்பப்படும் ஸ்ரீதேவியோடு தேவதேவனான விஷ்ணு பகவான் விளங்குவது போலே மிகவும் விளக்க முற்றான். ரா.பா. 77–31) என்றார். பெருமாளோ ராஜருஷியான தசரதன் பிள்ளை. இவளோ उत्तमराजकन्या. மஹருஷிகளும் கொண்டாடும் படியான பெருமையுடைய விதேஹராஜபுத்ரி. அவன் रमयति. இவளோ अभिरामा அழகியவள். ஆக, இருவருடைய குடிப்பிறப்பும், அழகும் ஒத்திருந்தது என்கிறார். உன்னுடைய மடலெடுக்கும் துணிவு உன்னுடைய நற்குடிப்பிறப்பு முதலானவற்றிற்குப் பொருந்தாது. அவனுடைய ஆபிஜாத்யாதிகளுக்கும் பொருந்தாது. நாட்டாரும் உன்னைப் பழியிடுவர். மாதா பிதாக்களும் கைவிடுவர். ஆகையால் மடலூர நினைப்பதைக் கைவிடு என்று தோழி சொன்னாள். அதற்குத் தலைவி பராங்குச நாயகியின் நிலையிலே நின்று பேசுகிறாள். 'என் செய்யும் ஊரவர்கவ்வை தோழீ இனி நம்மை' (திருவாய். 5–3–2) என்று அவர்கள் சொல்லும் பழிக்கு அஞ்சாமலும் தாய் முதலானோரைத் துறக்கவும் துணிந்து 'யாம் மடலூர்ந்தும் எம்மாழியங்கைப் பிரானுடை தூமடல் தண்ணந்துழாய் மலர் கொண்டு சூடுவோம்' (திருவாய். 5–3–10) என்று மடலூர்வது தவிர தனக்கு ஒரு புருஷார்த்தமில்லை என்று சொன்னாற்போல பரகாலநாயகியும் தன் துணிவை வெளியிடுகிறாள் பெரிய திருமடலில்.

மடலூரத்துணிந்த தலைவி மடலூராமல் தோழிக்குப் பதில் சொல்லிக் கொண்டிருப்பதேன் எனில், மடலெடுப்பேன் என்றவுடன் முகம் கொடுப்பனோ என்ற எண்ணம். இவன் ப்ராயோபவேசம்

பண்ணியும் ஶரணமடைந்தும் கூட முகம் கொடாத கடல், चापमानय सौमित्रे (லக்ஷ்மணா வில்லைக் கொண்டு வா. ரா.யு.21–22) என்று மிரட்டிய உடனே வந்து தோன்றினாற்போல் கடல் வண்ணனான இவனும் 'மடல்' என்றவுடன் முகம் கொடுப்பனோ என்ற எண்ணம். 'யாம் மடலூர்ந்தும்' என்று தன் துணிவைச் சொன்ன நம்மாழ்வார் அடுத்த பாசுரத்தில் 'இரைக்கும் கருங்கடல் வண்ணன் கண்ணபிரான் தன்னை' (திருவாய். 5–3–11) என்று கடல் போன்ற இயல்பு உடையவன் என்று அருளிச் செய்தார். ஆக இவளுக்கும் மடல் எடுப்பேன் என்று சொன்னவுடன் முகம் காட்டுவான் என்ற நம்பிக்கை. 'அக்கடல் பட்டது பட்டு அவன் வந்து தோன்றுமென்று பலகைப் புறத்தே பகட்டுகிறாள்' என்பது இங்கேயுள்ள வ்யாக்யான ஸ்ரீ ஸூக்தி. அதாவது பலகைக்குப் பின்னாலே (மறைவிடத்திலே) இருந்து மிரட்டுவாரைப் போலே மிரட்டுகிறாள். தோழி இவள் சொல்வதைக் கேட்டுக் கொண்டு இருப்பது ஏன் எனில், இவள் சொல்லி முடிப்பதற்குள் அவன் வந்துவிடுவன் என்ற எண்ணத்தால் இவளைச் சொல்லச் சொன்னாள்.

இனி மடலின் அநுபவம்.

**மன்னிய பல்பொறிசேர் ஆயிரவாய் வாளரவின்**

**(மன்னிய)** வாழ்ந்திடுக பல்லாண்டென்கிறாள். பிராட்டியை பாணிக்ரஹணம் செய்து கொடுக்கும் போது பெருமாளும், பிராட்டியுமான அந்த சேர்த்தியிலே भद्रं ते (உனக்கு மங்களம் உண்டாகும். ரா.பா.73–27) என்றான் ஜனகன். திருவிருத்தம் தொடங்கும் போதே 'செழுநீர்தடத்துக்கயல் மிளிர்ந்தாலொப்ப சேயரிக்கண் அழுநீர் துளும்ப அலமருகின்றன வாழியரோ முழுநீர் முகில் வண்ணன்' (திருவிருத் – 2) என்கிறார் நம்மாழ்வார். மாரீச வதமானவுடன் பிராட்டியைத் தேடிக் கொண்டு ஆஶ்ரமம் வந்த

மப -3

ராமனை பிரிவிலே கண்ட ஜடாயு 'ஆயுஷ்மந்' என்று வாழ்த்தினார். **यामोषधिमिवायुष्मन् अन्वेषसि महावने । सा देवी मम च प्राणा रावणेनोभयं हृतम् ॥** (நெடுங்காலம் வாழ்வாய்! பெருங்காட்டில் அருமருந்தைப் போலே நீ எவளைத் தேடுகிறாயோ அந்ததேவியும் என்னுயிருமாகிய இரண்டும் ராவணனாலே அபஹரிக்கப்பட்டது. ரா.ஆ. 67–15). அதுபோலவே ப்ரபந்தம் தொடங்கும் போதே 'மன்னிய' – வாழ்ந்திடுக என்கிறாள். 'தன் வாக்கில் புகர்தானேயறிகையாலே என் வாக்கிலே அகப்படாதே என் காலிலே விழுந்து பிழைத்திடுக என்கிறாள்' என்பது இங்குள்ள வ்யாக்யான பங்க்தி. அதாவது தன் வாக்கின் ஶக்தியை அவள் அறிவளாகையாலே தன் வாக்கிலே ஏதாவது க்ரூரமாக வருமானால் அது அப்படியே நடந்துவிடும். அவ்வாறு நடக்க இடம் கொடாமல் என்னிடம் சமாதானமாகப்போ. அதுவே பிழைக்கும் வழி என்கிறாள். **(பல் பொறி)** பல புள்ளிகளை உடையவனாயிருக்கிறான் வாளரவு. பொன்னிலே ரத்னத்தை அழுத்தினாற் போலே வைத்தகண் வாங்கமுடியாதபடி இருக்கும் அழகு. **(சேர்)** திருவனந்தாழ்வானின் திருமேனியில் புள்ளிகள் சேர்ந்திருப்பது விரஸமாயிராமல் சேர்ப்பாலும் கண்ட சர்க்கரையும் சேர்ந்தாப் போல் ஸரஸமாயிருக்கை. **(ஆயிரவாய்)** பெருமானின் ஸௌகுமாரமான திருமேனி ஸ்பர்ஶத்தாலே ஆநந்தம் மேலிட்டு, அந்த ஆநந்தப் பெரு வெள்ளத்துக்கு ஆயிரம் வடிகால்கள் வெட்டி விட்டாற்போலே இருக்கிற ஆயிரம் முகங்கள். **(வாள் அரவின்)** வாள் – ஒளி. பகவத் ஸ்பர்ஶத்தாலே ஒளி விஞ்சி இருக்கிறது. திருமேனியைத் தீண்டப் பெற்றதால் ஒளி விஞ்சுமோ எனில், ராமனைக் காட்டிற்கு அனுப்பவேண்டும் என்ற கைகேயி சொற்கேட்ட தஶரதன் வார்த்தை **अहं पुनर्देवकुमाररूपं अलंकृतं तं सुतमाव्रजन्तं । नन्दामि पश्यन्नपि दर्शनेन भवामि दृष्ट्वैव पुनर्युवेव ॥** (தேவகுமாரனைப் போன்ற உருவினனும் அலங்கரிக்கப் பெற்றவனும் என்னை நோக்கி வருகின்றவனுமான மைந்தன் ராமனை உட்கண்ணால்

கண்டவுடனே உகக்கிறேன். கட்கண்ணால் கண்டாலோவெனில் மறுடியும் வாலிபனாகவே ஆகிவிடுகிறேன். ரா.அயோ. 12–104) देवकुमाररूपं தேவகுமாரனைப் போல ஸ்வபாவத்திலேயே அழகுடையவன். अलंकृतं அவனுக்கு அலங்காரமும் பண்ணினால் கேட்கவும் வேண்டுமோ! இயற்கையழகோடும் செயற்கையழகோடும் கூடியவன். तं அந்த ராமனை चन्द्रकान्ताननं रामं अतीव प्रियदर्शनं (ரா.அயோ.3–29) என்று முன்னே சொன்னது நெஞ்சிலே ஓடுகிறது. आव्रजन्तं என்னிருப்பிடம் தேடிவருபவனை. கைம்மாவின் நடை போல் மென்னடையும் मत्तमातङ्गगामिनं (ரா.அயோ. 3–28) நினைவு வருகிறது. दर्शनेन மாநஸ ஸாக்ஷாத்காரத்தால் पश्यन्नपि பார்த்தாலும் கூட नंदामि மகிழ்கிறேன். दृष्ट्वा च பார்த்து விட்டாலோ पुनः युवेव भवामि ப்ராயம் அறுபதாயிரம் ஆனாலும் மறுபடியும் வாலிபனாகவே ஆகிறேன் என்றான் தஶரதன். கண்ணனைக்கண்ட வஸுதேவனும் महोत्सवमिवासाद्य पुत्राननविलोकनात् । युवेव वसुदेवोऽभूत् विहायाभ्यागतां जराम् ॥ (மைந்தன் முகம் காணப் பெறுகையாலே பெரு விழாவைப் பெற்றது போலே வந்தடைந்த கிழத்தனத்தைவிட்டு வஸுதேவர் வாலிபராகவே ஆனார்) என்றபடி பரமபுருஷனைக் கண்ணாலே கண்ட தஶரதனும் வஸுதேவனும் வாலிபப்புகரைப் பெற்றார்கள் என்றால் தீண்டின திருவனந்தனுக்குச் சொல்லவும் வேண்டுமோ.

**சென்னி மணிக்குடுமி தெய்வச் சுடர் நடுவுள் மன்னிய நாகத் தணை மேல் ஓர் மாமலை போல் மின்னு மணி மகர குண்டலங்கள் வில்வீச துன்னிய தாரகையின் பேரொளி சேர் ஆகாசம் என்னும் விதானத்தின் கீழால்**

சென்னி – படங்களில் விளங்குகிற, மணி – மாணிக்கங்களிலிருந்து, குடுமி – கொழுந்துவிட்டு ஓங்குகிற , தெய்வச்சுடர் நடுவுள் – அப்ராக்ருதமான ஒளிக் கதிர்களின் நடுவே, மன்னி – பொருந்தி, அ நாகத்து அணைமேல்– அந்தத்

திருவனந்தனாகிற ஶயனத்தின் மேல், ஓர் மாமலைபோல் – விலக்ஷணமான கருமலை போல் பள்ளிகொண்டு, மின்னுமணி மகர குண்டலங்கள் வில் வீச – ரத்நங்கள் பொருந்திய மகரகுண்டலங்கள் வானவில் போல் ஒளி வீச. துன்னிய தாரகையின் பேரொளி சேர் ஆகாசம் என்னும் – நெருங்கிய நக்ஷத்ரங்களின் நிறைந்த வெளிச்சம் நிரம்பிய ஆகாஶமாகிற, விதானத்தின் கீழால் – மேற்கட்டியின் கீழே.

**(சென்னி மணிக்குடுமி தெய்வச்சுடர் நடுவுள்)** திருவனந்தாழ்வானின் படத்திலுள்ள ரத்நங்கள் கொழுந்து விட்டு ப்ரகாஶிக்கின்றன. அப்ராக்ருதமான அந்த ஒளிக் கற்றையின் நடுவில் பள்ளிகொண்டிருக்கிறான் எம்பெருமான். **(மன்னிஅ நாகத்தணைமேல்)** ஆதிஶேஷன் திருமேனியின் இனிமையாலே தட்டி எழுப்பினாலும் உணராதபடி மெய்மறந்து உறங்குகிறான். **(ஓர் மாமலைபோல்)** அஞ்ஜன கிரிபோல படிந்திருக்கிறான். **(மின்னுமணி மகர குண்டலங்கள் வில்வீச)** திருமேனி நிறமோ கறுப்பு. அதாலே ஏற்பட்ட இருட்சிக்குக் கைவிளக்குப் போலே மகரகுண்டலங்களின் ஒளி. மின்னும் ரத்நங்களையுடைய மகர குண்டலங்கள். **(துன்னிய தாரகையின் பேரொளி சேர் ஆகாசம் என்னும் விதானத்தின் கீழால்)** ஆகாஶம் போல் இருக்கிற முத்துப் பந்தல் அல்லது ஆகாஶமாகிற முத்துப்பந்தல். **भक्तप्रिय त्वयि तया परिवर्धमाने मुक्ता वितान विततिः तव पूर्वमासीत् । हारावलिः परमथो रशना कलापः तारागणः तदनु मौक्तिक नूपुरश्रीः ॥** (அடியவர்களுக்குப் பிரியமானவனே! தேவரீர் அப்படி வளரும் போது நக்ஷத்ர ஸமூஹங்களானது முதலிலே முத்து மயமான மேல் கட்டியாக இருந்தது. பிறகு கழுத்தில் முத்து மாலையாக ஆயிற்று. பிறகு இடுப்பில் காஞ்சீ பூஷணமாக ஆயிற்று. பிறகு முத்துமயமான சலங்கையின் ஶோபையையுடையதாக ஆயிற்று. ஸ்ரீ தேஹளீஶஸ்துதி: –10 ) என்றார் ஸ்வாமி தேஶிகனும்.

**இருசுடரை மன்னும் விளக்காக ஏற்றி மறிகடலும் பன்னு திரைக்கவரி வீச நிலமங்கை தன்னை முனநாள் அளவிட்ட தாமரை போல் மன்னிய சேவடியை**

இருசுடரை—திருக்கைகளிலுள்ள திருவாழி திருச்சங்குகளை, மன்னும் விளக்காக ஏற்றி— என்றும் அணையாத விளக்காக ஏற்றி வைத்துக் கொண்டு, நிலமங்கை தன்னை முனநாள் அளவிட்ட – முன்னொரு நாள் பூமிப் பிராட்டியை அளந்த, தாமரை போல் மன்னிய சேவடியை – திருவடித்தாமரையை நோக்கி, மறிகடலும் பன்னு திரைக்கவரி வீச – அலையெறியும் கடலரசன் பரப்பின அலைகளாகிற சாமரங்களை வீசப்பெற்றும்.

**(இருசுடரை மன்னும் விளக்காக ஏற்றி)** சக்கரத்தாழ்வானும் பாஞ்சஜந்யமும், இவர் அவதரித்துப் போனவிடமெங்கும் கூடப் போமவர்கள். அவர்களை நிலையான விளக்காக ஏற்றி என்று பொருள். **सुदर्शनं भास्कर कोटितुल्यम्** (பஞ்சாயுத ஸ்தோத்ரம் –1) என்று சொல்லப்பட்டவன் திருவாழியாழ்வான். 'சந்திரமண்டலம் போல் தாமோதரன் கையில் அந்தரமொன்றின்றி ஏறி அவன் செவியில்' (நாச்.திரு.7–4) என்று சொல்லப்பட்ட பாஞ்சஜந்யத்தை சந்த்ரனாகக் கொள்ளலாம். ஸ்வாமி தேஶிகனும் இவர்களை சந்திர ஸூர்யர்களாகச் சொன்னார். **नीलाचलोदित निशाकर भास्कराभे शान्ताहिते सुरपते तव शंखचक्रे** (ஹே தேவநாதனே! இந்திர நீல மலையில் உண்டாயிருக்கிற சந்த்ரனையும் ஸூர்யனையும் போன்ற காந்தியுடையவைகளும் விரோதிகளை நாஶம் செய்கின்றவைகளுமான தேவரீருடைய திருச்சங்கும் திருவாழியும். ஸ்ரீ தேவநாயக பஞ்சாஶத்–30) நம்மாழ்வாரும் 'நேமியும் சங்கும் இரு கைக்கொண்டு பன்னெடுஞ்சூழ் சுடர் ஞாயிற்றோடு பால்மதி ஏந்தி ஓர் கோல நீல நன்னெடுங்குன்றம் வருவதொப்பான்' (திருவாய். 8–2–10) என்றார். இருசுடர் என்பதற்கு ஸுதர்ஶன

பாஞ்சஜந்யங்கள் என்று ஏன் பொருள் கொள்ளவேண்டும் எனில், தற்போது ப்ரளயகாலத்தில் கண்வளர்ந்தருளுகிறபடியைச் சொல்லுகிறது. நான்முகனையே படைக்காத போது சந்த்ரஸூர்யர்கள் இருக்க முடியாதாகையாலே இவ்வாறு பொருள் கொண்டோம். அல்லது சந்த்ரஸூர்யர்களைக் குறிக்கும் இருசுடர் என்ற சொல் திருக்கையில் ஆழ்வார்களை லக்ஷணையாலே குறிப்பதாகக் கொள்ளலாம். ஆழ்வார் பிற்காலத்தில் அவதரித்தவராகையாலே தமக்கு முற்பட்ட காலத்திலிருந்த சந்த்ரஸூர்யர்களைச் சொல்லக் குறையில்லை. **(மறிகடலும் பன்னு திரைக்கவரி வீச)** எம்பெருமான் திருவனந்தாழ்வான் மேல் கண் வளர்ந்தருளும் அழகைக் கண்டு, ஆநந்தம் மேலிட்ட கடல் கீழ்மண் மேல் மண்ணாகும்படி அலையெறிகிறது. அப்படிப்பட்ட கடல் தன்னுடைய பரம்பின அலைகளாகிற சாமரத்தை வீச, பெரும் அலையாய் வந்து முறிந்த திவலைகள் திருவடிகளிலே மோதி கால் பிடிப்பது போன்றிருக்கிறது. அப்படி ஸுகமாக உறங்குகிறான். மன்னிய சேவடியை பன்னுதிரைக்கவரி வீச என்று அந்வயித்தால் திருவடிக்குச் சாமரம் வீசுகிறது என்று பொருள். **(நிலமங்கை தன்னை முனநாள் அளவிட்ட தாமரைபோல்)** அந்தத் திருவடி எப்படிப்பட்டது என்கிறார். பூமி என்று பெயர் வரக்காரணம் அது பரந்திருப்பதாலே என்றது வேதம். **भूमिर्भूम्ना** (பூஸூக்தம்) அளவிடமுடியாதபடி பரந்திருப்பது பூமி. அதனை அன்றலர்ந்த ஒரு தாமரையாலே அளந்துகொண்டான். மென்மை, குளிர்த்தி, நிறம், மணம், அழகு இவற்றிலே சிறிது ஒத்திருப்பதாலே தாமரையை உபமானமாகச் சொல்லிற்று. முனநாள் – ஒருகால் என்னாமல் முனநாள் என்றதின் தாத்பர்யம் த்ரிவிக்ரமனாய் பூமியை அளந்தது பலயுகங்களுக்கு முன்பு நிகழ்ந்ததானாலும் இவளுக்கு பாவனாப்ரகர்ஷத்தாலே சில நாட்கள் முன்பு நடந்ததாகத் தோன்றுகிறது. அளவிட்ட தாமரைபோல் – திருவடிகள் இப்போது

சிவந்திருப்பதைக் கொண்டு இத்திருவடிகளே முன் உலகளந்தவை என்று மூதலிக்கலாம்படி உள்ளன. **(மன்னிய சேவடியை)** – தாமரையைத் திருவடிகளுக்கு ஒரு போலியாகச் சொன்னது அத்தனையே. சிறிது நேரம் கழிந்தால் தாமரையின் நிறம், மணம் முதலியவை எல்லாம் மாறிவிடும். திருவடி அப்படியில்லை. செவ்வி மாறாத திருவடிகள்.

**வானியங்கு தாரகைமீன் என்னும் மலர்ப் பிணையலேய்ந்த**
**மழைக்கூந்தல் தென்னனுயர் பொருப்பும் தெய்வ**
**வடமலையும் என்னு மிவையே முலையா வடிவமைந்த**

வானியங்கு தாரகை மீன் என்னும் –ஆகாஶத்தில் இயங்குகிற– ஸஞ்சரிக்கிற தாரகைகளும் நட்சத்திரங்களும். அஸ்வினீ முதலான நட்சத்திரங்கள் தாரகை. மற்றவை மீன்கள் அல்லது தாராகணங்கள். மலர்ப்பிணையல் ஏய்ந்த – கதம்ப மாலையை அணிந்தவளாய், மழைக்கூந்தல் – மேகங்களாகிற கூந்தல் உடையவளாய், தென்னனுயர் பொருப்பும் தெய்வ வடமலையும் என்னுமிவையே முலையா – திருமாலிருஞ்சோலை மலையையும் திருவேங்கடமலையையும் முலையாக உடையவளாய். வடிவு அமைந்த– பொருத்தமான ரூபத்தையுடையவளாய்.

**(வானியங்கு தாரகைமீன் என்னும் மலர்ப்பிணையல் ஏய்ந்த மழைக்கூந்தல்)** ஆகாஶத்தில் ஸஞ்சரிக்கும்படியான நட்சத்திர தாராகணங்களாகிற கதம்பமாலையால் அலங்க்ருதமாய், அதை உள்ளேயடக்கும்படி ச்ரமஹரமாயிருக்கிற மேகமாகிற கூந்தலை உடையவளாயிருக்கை. **(தென்னனுயர் பொருப்பும் தெய்வவடமலையும் என்னும் இவையே முலையா)** பாரத தேஶத்தின் தெற்குப் பகுதியை ஆண்ட அரசர்கள் தென்னன் எனப்பட்டனர். அவர்கள் மூவர் – சேர சோழ பாண்டியர். இவர்கள் மூவரும்

தங்களதாக அபிமானித்திருந்த உயர்ந்த மலை திருமாலிருஞ்சோலைமலை. தெய்வ வடமலை எனப்படுவது திருவேங்கடம். இதன் தெய்வத்தன்மையாவது ஸம்ஸாரிகளும் எளிதில் வந்து அடையலாம்படி இருக்கை. 'மந்திபாய் வடவேங்கடமாமலை வானவர்கள் சந்தி செய்ய நின்றான்' (அமலனாதி. 3) என்று மந்திகளும் வானவரோடு ஒக்க ஆஶ்ரயிக்கலாம்படி இருக்கும் மலை. 'போதறிந்து வானரங்கள் பூஞ்சுனைபுக்கு ஆங்கலர்ந்தபோது அரிந்து கொண்டேத்தும்' (இரண்டாந்திரு. 72) என்றபடி குரங்குகளும் ஆஶ்ரயிக்கும்படி இருப்பன் வேங்கடவன். இந்த இரண்டு மலைகளும் முலையாக விளங்கும் பூமிப்பிராட்டி. இவற்றிலும் பெரியதான மேரு, இமயம் முதலிய மலைகளிருக்க, இவ்விரண்டு மலைகளைச் சொன்னதேன் எனில், காதலன் விரும்பி விடாமல் பற்றியிருப்பதன்றோ முலைகளின் லட்சணம். பூமிப் பிராட்டிக்கு மலைகளை முலையாகச் சொன்னது புராணம் **पर्वतस्तनमण्डला** என்று. மண்மடந்தையின் நாயகனான எம்பெருமான் திருமாலிருஞ்சோலையிலும் திருவேங்கடத்திலுமன்றோ நித்யவாஸம் செய்கிறான். 'தென்கொள்திசைக்குத் திலதமாய் நின்ற திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம் கைவிடான்' (திருவாய். 10–7–4) என்றும் 'பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை' (திருவாய். 3–3–8) என்றும் இவற்றை எம்பெருமான் பற்றி விடாதே இருக்குமிடங்களாகச் சொன்னமையால் இவற்றை பூமிப்பிராட்டியின் முலைகள் என்றார்.

திருமாலிருஞ்சோலை மலையின் பெருமையை நினைத்து வால்மீகி இதனைச் சித்ரகூடத்திற்கு உபமானமாகச் சொன்னார். எங்கு எனில் சித்ரகூடத்தை அணுகின பரதன் வாக்யம். **सुभगः चित्रकूटोऽसौ गीरिराजोपमो गिरिः । यस्मिन् वसति काकुत्स्थः कुबेर इव नन्दने ॥** (ரா.அயோ. 98–12) **कृतकार्यमिदं दुर्गं वनं व्यालनिषेवितम् । यदध्यास्ते महातेजाः रामः शस्त्रभृतां वरः ॥** (ரா.அயோ. 98–13) (இந்த சித்ரகூடமலை மலைகளுக்கு அரசன் போன்று

பெருமை மிக்கது. காரணம் என்னவெனில், எதில் ராமபிரான், குபேரன் நந்தவனத்தில் வஸிக்குமாப் போலே வஸிக்கிறானோ). गिरिराजोपमो गिरि: என்ற விடத்தில் திருமாலிருஞ்சோலைமலை என்று பெரியமடல் வ்யாக்யாதாவின் அபிப்ராயம். இங்குள்ள பெரிய வாச்சான் பிள்ளையின் ஸ்ரீ ஸூக்தி 'இந்த சித்ரகூடத்தினத்தனை வீறுடையாரில்லை. கண்ணுக்கு அழகியதாயிருக்கச் செய்தே விருப்பமில்லாதன சில உண்டிறே. அங்ஙனல்லவிறே இதின்படி. திருமுலைகளோடொக்கச் சேர்க்கலாம் काकुत्स्थ: यस्मिन् वसति நல்லது கண்டால் விடமாட்டாமல் விருப்பத்தைப் பண்ணியிருக்கிறார். यद्यास्ते महातेजा: कुबेर इव नन्दने துஷ்டஸத்வ ப்ரசுரமான இந்த ப்ரதேஶத்திலே குபேரனானவன் தன் பூந்தோட்டத்தை விடாதே வர்த்திக்குமாப் போலே விடாதே வர்த்திக்கிறார். அப்படிப்பட்ட சித்திரகூடத்தோபாதி வீறுடையாரில்லை'. இந்த ஶ்லோகத்திற்கு வயாக்யானம் செய்த கோவிந்தராஜர் சொல்லுகிறார் असौ चित्रकूट : सुभग: भाग्यशाली गिरिराजोपमश्च हिमवत् पर्वतसदृश: । यद्वा गिरिराजोपम: - गिरिराजोऽपि श्रीनिवास सान्निध्य स्थानभूतो वेंकटाचल: ( இந்தச் சித்திரகூடமலையானது மங்களகரமானது. பாக்யஶாலி. கிரிராஜனாகிய இமயமலைக்கு ஒப்பானது. அல்லது ஸ்ரீநிவாஸன் ஸாந்நித்யம் கொண்ட திருவேங்கடமலைக்கும் ஒப்பானது என்னலாம்.) மாஹேஸ்வரதீர்த்தரும் गिरिराजोपम: हिमवत् सदृश: என்றார். திலகரும் இவ்வாறே சொல்லுகிறார். ராமாயணத்துக்கு வ்யாக்யானம் செய்த மூவரும் गिरिराज: என்ற சொல்லுக்கு हिमवान् என்று அர்த்தம் பண்ண இவர் மட்டும் திருமாலிருஞ்சோலைமலை என்றது என் எனில், ராமன் விரும்பி வசிக்குமிடமாதலால் என்று காரணம் சொன்னார். ராமன் இமயமலையில் வாஸம் செய்ததாக எங்கும் காணவில்லை. ஆக ராமன் வஸிப்பதால் பெருமை பெற்றதாகச் சொல்லும் சித்ரகூடத்திற்கு இமயமலை உபமானமாகாது. திருமாலிருஞ்சோலைமலை ஆகுமோ எனில் திருவேங்கடமலையில்

போல் திருமாலிருஞ்சோலைமலையிலும் பகவத் ஸாந்நித்யம் மாறாதே இருப்பது. அவனாக அவற்றை நாடிவந்து நித்ய வாஸம் பண்ணுகிறான் என்பது 'திருமாலிருஞ்சோலை நங்கள் குன்றம் கைவிடான்', 'பரன் சென்று சேர் திருவேங்கட மாமலை' என்ற ப்ரமாணங்களால் தெரிகிறது. ஆகையால் **गिरिराज:** என்றது திருமாலிருஞ்சோலை என்று சொன்னது பொருத்தமுடையதே. **(வடிவு அமைந்த)** வடிவும் பொருந்தி இருக்கும்படி அமைந்திருக்கிறது.

**அன்ன நடைய அணங்கே அடியிணையைத் தன்னுடைய அங்கைகளால் தான் தடவத்தான் கிடந்து ஓர் உன்னிய யோகத்து உறக்கம் தலைக் கொண்ட பின்னைத் தன்னாபி வலயத்துப் பேரொளி சேர் மன்னிய தாமரை மாமலர் பூத்து அம்மலர்மேல் முன்னம் திசைமுகனைத் தான் படைக்க மற்றவனும் முன்னம் படைத்தனன் நான் மறைகள்**

**(அன்ன நடைய அணங்கே)** அன்னம் போன்ற நடையுடையவள். நாயகனுக்கு முன்னே நாலடி நடந்தால் அவன் இந்த நடைக்கே அடிமையாகி வேறொன்றை நெஞ்சாலும் நினைக்க முடியாதவனாயிருப்பன். அணங்கு – 'சூருமணங்கும் தெய்வப் பெண்ணே' என்ற நிகண்டுப்படி தெய்வப் பெண்ணைக் குறிக்கும். அப்ராக்ருதமான ஸ்வபாவத்தையுடையவள். பிராட்டியைப் பற்றிச் சொல்லும் வால்மீகி **तस्य भूयो विशेषेण मैथिली जनकात्मजा । देवताभि : समा रूपे सीता श्रीरिवरूपिणी ॥** (ஜனகன் மகளாகிய மைதிலி ராமனுக்கும் விசேஷமாக தேவதைகளைப் போன்றவள். பெரியபிராட்டியைப் போன்றவள். ரா.பா. 77–30) என்றார். **प्रयाणां भरतादीनां भ्रातॄणां देवता च या । रामस्य च मन:कान्ता सा कथं विनशिष्यति ॥** (பரதன் முதலிய மூன்று தம்பிமார்க்கும் எந்தப் பிராட்டியானவள் தெய்வமாயிருந்தாளோ, ராமனுக்கும் மனத்துக்கினியவளாயிருந்தாளோ அவள் எப்படி

நம்ப்பாள். ரா.ஸு. 55–26) என்பது ஹனுமனுடைய வார்த்தை. இலங்கையை எரியூட்டிய ஹனுமனுக்கு பெரிய தவறு செய்து விட்டோம் என்ற எண்ணம் வந்தது. இலங்கை முழுவதும் எரிந்து போன நிலையில் பிராட்டிக்கும் ஆபத்து நேர்ந்திருக்குமோ என்று ஹனுமனின் எண்ணம். பிறகு அவர் தேற்றிக்கொள்ளுகிறார். பிராட்டியிடம் நெருப்பு ஒன்றும் செய்ய முடியாது என்று தன்னைத்தானே சமாதானம் பண்ணிக் கொள்ளும் பேச்சு இது. ராமன் முதலிய நால்வருக்கும் ஆஶ்ரயணீயை பிராட்டி என்பது அவர் வார்த்தை. பூமிப்பிராட்டியும் தெய்வப் பெண்ணாகையாலே அணங்கு என்றார்.

**(அடியிணையை)** அப்ராக்ருத ஸ்வபாவமுள்ள இவளும் தொட அஞ்சும் படியான மென்மையான திருவடிகள். **(தன்னுடைய அங்கைகளால்)** ஸர்வேஶ்வரனும் வேண்டிப் பெற வேண்டிய தன் அழகிய திருக்கைகளாலே. 'மதுசூதன் வந்து என்னைக் கைத்தலம் பற்ற' (நாச். திரு. 6–6) என்று ஆண்டாள் கூறினாள். **(தான்தடவ)** தான் என்பது எதற்கு ? திருவடியை வருடினால் உயிர் தரிக்கும், இல்லையேல் தரிக்காது என்னுமளவுக்கு ஆற்றாமையுடையவள். தன்பேறாக வருடுகிறாள். பிராட்டிமார் ப்ரார்த்திப்பதும் இதுதானே. 'கேசவ நம்பியைக் கால் பிடிப்பாளென்னும் இப்பேறு எனக்கருள் கண்டாய்' (நாச். திரு. 1–8). தாரக வஸ்துவைப் பிறரைப் பருகவிட்டு தான் உயிர் வாழ முடியுமோ. தனக்குத் தாரகமான பாதஸேவையைத் தானே செய்கிறாள். ஆக பன்னுதிரைக்கவரி வீசவும் பூமிப்பிராட்டி திருவடி வருடவும் கண்வளர்கின்றான் எம்பெருமான். **(தான் கிடந்து)** **स्वतस्सर्वज्ञ**னாய் (இயற்கையிலேயே எல்லாமறிபவனாய்) ஒன்றாலே ஒரு காலுஷ்யமின்றிக்கே இருக்கக் கடவ அவன் இவளுடைய ஸ்பர்ஶ ஸுகத்தாலே இரண்டுமறியாதே கிடந்து உறங்கா நிற்கும்.

**(ஓர் உன்னிய யோகத்து உறக்கந்தலைக் கொண்ட பின்னை)** உன்னுகை – அநுஸந்திக்கை, நினைத்தல். மற்ற ஸம்ஸாரிகளுக்கு முன்பே நெஞ்சு இருண்டிருக்கும். புலன்களாலே சிறிது அறிவைப் பெறுவர். வெளியேயுள்ள பொருள்களை உணர்வர். இவர்களுக்கு உறக்கம் வந்தபோது வெளிப்பொருள்களும் மறைந்து போய் ஒரே இருட்டுமயமாகிவிடும். ஆனால் எம்பெருமானுக்கு அப்படியல்ல. **पश्यत्यचक्षुः** என்றது உபநிஷத். கண்களைக் கொண்டு காண்பவனல்லன் அவன். ஆக அவன் கண்ணை மூடுவது மனதில் ஓடும் நினைவுகளை வளரச் செய்யும். யோகத்துறக்கம் – விழிதுயில். ரஜஸ், தமஸ்களாலே வந்த உறக்கமன்று. 'உறங்குவான் போல் யோகு செய்த பெருமானை' (திருவாய். 5–4–11) என்றார் நம்மாழ்வார். லோகரக்ஷண சிந்தையோடு கண்வளர்ந்தருள்வன். தலைக்கொண்ட பின்னை – மேற்கொண்ட பிறகு. அந்தந்தக் காலங்கள் வரும்போது வேறொரு முயற்சி இல்லாமலே அந்தந்தப் பூக்கள் மலர்வது போல் ஸ்ருஷ்டிக்க வேண்டிய காலம் வந்தவாறே உணர்கிறான் எம்பெருமான். இனி அவனால் ஸ்ருஷ்டிக்காமல் இருக்க முடியாது. அப்படி அவன் ஸ்ருஷ்டித்தவைகளைச் சொல்லுகிறது மேலே. **(தன்னாபிவலயத்து)** **भूवलय** என்பது பூமியின் பெருமையைச் சொல்வது போல் பூமண்டலத்துக்குக் காரணமான நாபியின் பெருமையைச் சொல்லுகிறது. **(பேரொளி சேர் மன்னிய தாமரை மாமலர் பூத்து)** இத்தாமரையின் கார்யமான லோகம் முழுவதும் சேர்ந்தாலும் இதன் ஒளிக்கு ஈடாகாது என்னும்படி மிகச் சிறந்த ஒளியையுடைய தாமரை. மன்னியதாமரை மாமலர் – நிலைத்து நிற்பது. உலகில் கார்யமான வஸ்துக்கள் உண்டாக உண்டாக காரணமான வஸ்து குறைந்து கொண்டே வந்து கடைசீயில் இல்லாமலே போய்விடுகிறது. குயவன் மண்ணைக் கொண்டு குடங்கள் செய்யச் செய்ய மண் குறைந்து கொண்டே வருகிறது. கடைசீயில் மண் இல்லாமலே போய்விடுகிறது. ஆனால்

எம்பெருமானுடைய திருவுந்தியில் தோன்றிய தாமரை மலர் பல உலகுகளைப் படைத்த பின்பும் குறைவதும் இல்லை. இல்லாமல் போவதும் இல்லை. அதனாலேயே மன்னிய தாமரை மாமலர் என்றார். அப்படியில்லாமல் மன்னிய என்பதை பேரொளிக்கு விஶேஷணமாக்கில் தாமரையின் பேரொளி நித்யமானது என்று பொருள்.

**(அம்மலர் மேல் முன்னம் திசைமுகனைத்தான் படைக்க)** ஒரு பூவிலே நான்கு பூக்கள் தோன்றினாற்போலே ஸ்ருஷ்டிகாலத்தில் சதுர்முகனைப் படைக்க. **(மற்றவனும்)** ஸ்ருஷ்டிக்கப்பட்ட உடன் இவன்தானோ ஸர்வேஶ்வரன் என்று எம்பெருமானுக்குப் போலியாகச் சொல்லும்படி வளர்ந்தான். **तस्मात् विराड्जायत विराजो अधि पूरुषः । स जातो अत्यरिच्यत पश्चात् भूमिमथो पुरः ॥** (அந்த விஷ்ணுவிடமிருந்து ப்ரஹ்மாண்டம் உண்டாயிற்று. அதில் பிரமன் உண்டானான். அந்த நான்முகன் பிறந்த மாத்திரத்தில் பூமியைப் பக்கங்களிலும், கீழும் மேலும் ஆக்ரமித்தான். பு.ஸூ. 15) என்று வேதம் அவன் வளர்ச்சியைப் பேசுகிறது.

**(முன்னம் படைத்தனன் நான்மறைகள்)** இந்த வாக்யத்தைப் பார்த்தால் முதல் முதலில் பிரமனே வேதங்களை உண்டாக்கினான் என்று தோன்றுகிறது. இவ்வாறு சொல்வது ஶாஸ்த்ர விருத்தம். வேதங்கள் அபௌருஷேயமானபடியாலே ஸர்வேஶ்வரனும் கூட அவற்றை உண்டாக்கவில்லை. தூங்கிஎழுந்தவன் தூங்குவதற்கு முன்பு நடந்தவைகளை நினைத்துச் சொல்லுவது போல யோகநித்ரையிலிருந்து விழித்த எம்பெருமான் முன் கல்பத்திலிருந்தபடியே வேதாக்ஷரராஶிகளை ஸ்மரித்து நான்முகனுக்குச் சொன்னான் என்பது அல்லவோ வைதிகர்களின் கொள்கை. மேலும் **यो वै ब्रह्माणं विदधाति पूर्वं यो वै वेदांश्च प्रहिणोति तस्मै** (எவனொருவன் பிரமனை முன்னம் படைத்தானோ எவன்

அவனுக்கு வேதங்களை உபதேசித்தானோ. (தைத்.நா.) என்ற வேத வசனத்தோடும் விரோதிக்கும். இப்படி வேத வைதிக விரோதமில்லாமல் 'மற்றவனும் முன்னம் படைத்தனன் நான்மறைகள்' என்ற ஆழ்வார் ஸ்ரீ ஸூக்தியை நிர்வஹிப்பது எப்படி எனில் 'இன்னான் தன் தந்தையிடமிருந்து படைத்தபொருள் இன்னது' என்ற உலகவழக்கு உள்ளது. அதுபோலவே 'பிறந்து படைத்த செல்வம்' என்கிறார்கள் பிதுரார்ஜிதத்தை. இவ்விடங்களில் படைத்த என்பதற்கு பெற்ற என்ற பொருள் கொள்ளுகிறோம். அது போலவே நான்முகனும் ஸ்ருஷ்டி காலத்தில் எம்பெருமானிடமிருந்து நான்மறைகளைப் பெற்றான் என்று கொண்டால் விரோதமில்லை.

**அம்மறைதான் மன்னும் அறம் பொருள் இன்பம் வீடு என்று உலகில் நன்னெறி மேம்பட்டன நான்கன்றே**

அந்த வேதங்கள்தான் அறம், பொருள், இன்பம், வீடு என்று லோகத்திலே சொல்லப்படும் நான்கு நல்ல வழிகளிலே அடங்கியது. அதாவது மேலே சொன்ன நான்கு புருஷார்த்தங்களையே அறிவிப்பது. அறம் என்றது தர்மத்தை. அதற்கு மன்னும் என்ற விசேஷணமிட்டதன் கருத்து, இது அர்த்தம் என்ற புருஷார்த்தத்தாலே ஸாத்யமாயிருப்பதோடு காமம், மோக்ஷம் என்ற புருஷார்த்தங்களுக்கு ஸாதனமாயும் இருப்பது என்று காட்ட.

**நான்கினிலும் பின்னையது பின்னைப் பெயர் தரும் என்பது**

**(நான்கினிலும்)** இவை நான்கினிலும் கடைசியிலே சொல்லுகிற மோக்ஷ புருஷார்த்தம். **(பின்னையது)** பிறகு பிறகு என்றே போவது அது. அத்தை இச்சரீரத்தோடே பெற்று அறிவார் இல்லை. ஆசைப்பட்ட இந்த ஶரீரத்தை விட்டு வேறொரு ஶரீரத்தைப் பெற்று வெகுதூரத்திலுள்ள ஒரு தேஶத்திலே போய் எப்போதோ

அநுபவிக்கும் மோக்ஷமும் ஓர் அநுபவமாகுமோ ? அதுவும் ஏதோ சில வேத வசனங்களும் அதைப் பின்பற்றின வைதிகர்களான ருஷிகள் சொல்லக் கேட்டது மட்டுமே. போய் அறிந்து வந்தவர் ஒருத்தருமில்லை. **(பின்னைப் பெயர் தருமென்பது)** வேறு ஶரீரத்தைத் தரும் என்பது. ஒருவன் தவம் செய்ய பலனை இன்னொருத்தன் அநுபவிப்பது போன்றது இது. பின்னைப் பெயர்தரும் – பின்னர் என்றும் பெருமையையே தரும்.

**ஓர் தொன்னெறியை வேண்டுவார்**

**(ஓர்)** ஸம்ஸாரத்தை ஒழித்து ஒப்பற்ற ஸுகமயமாய் இருக்கும் மோக்ஷத்தை விரும்புபவர். **(தொல்நெறி)** பழையதான மோக்ஷம். நெறி என்பதற்கு வழியென்று பொருள். அச்சொல் வழியால் அடையப்படும் இடத்தையும் குறிக்கும். அல்லது வழியென்று பொருள் கொண்டாலும் தவறில்லை. போமிடம் உத்தேஶ்யமானால் அதையடையும் வழியும் உத்தேஶ்யமன்றோ. **गतिचिन्तन** (போகும் வழியை நினைப்பது)மும் வேண்டுமன்றோ. **(வேண்டுவார்)** மோக்ஷத்தையும் ஒரு பொருளாக எண்ணி அதை விரும்புபவர்களும் இருக்கிறார்களே. **करस्थमुदकं त्यक्त्वा धनस्थमभिवांछति** (கையில் கனியிருக்க துரட்டிப் பழத்துக்கு அண்ணாந்து பார்ப்பதே) என்றார் போலே இதையும் விரும்புகிறார்களே என்று தமக்கு அதில் ஆதரம் இல்லை என்று காட்டுகிறார்.

இனி மோக்ஷ புருஷார்த்தத்தை விரும்புகிறவர்கள் அநுஷ்டிக்கும் ஸாதனமுண்டே; அதன் தீமையைப் பாருங்கள் என்கிறார்.

**வீழ்கனியும்ஊழிலையும் என்னும்இவையேநுகர்ந்து**
**உடலம்தாம்வருந்தி துன்னும் இலைக் குரம்பைத்துஞ்சியும்**
**வெஞ்சுடரோன் மன்னும் அழல்நுகர்ந்தும்**
**வண்தடத்தினுட்கிடந்தும் இன்னதோர் தன்மையராய்**

ஈங்குஉடலம்விட்டெழுந்து தொன்னெறிக்கண்சென்றா ரெனப்படும் சொல்லல்லால் இன்னதோர்காலத்து இனையார் இதுபெற்றார் என்னவும்கேட்டறிவதில்லை

**(வீழ்கனியும்)** தானே விழுந்து பசையற்ற கனியையும். **(ஊழிலையும்)** ஊழ் என்பது உதிர்தலையும் பழமையையும் குறிக்கும். அதாவது முளையிலேயே உதிர்ந்து சருகான இலைகளையும் முற்றிப் பழுத்து விழுந்து சருகான இலைகளையும். **(என்னும் இவையே நுகர்ந்து)** சருகு இலைகளையும் பசையற்ற கனிகளையும் தின்றன்றோ தவத்தை அநுஷ்டிப்பது. இவையே நுகர்ந்து என்ற விடத்தில் ஏகாரத்தினால் இரண்டு விரதங்களுக்கு இடைப்பட்ட காலத்திலும் சுவை மிக்க உணவை உண்டறியார் என்பது தோற்றுகிறது. நுகர்ந்து – ரஸித்து புஜித்து. ஸாத்யமாகிற மோக்ஷத்திலே இவர்கள் வைத்த பேரன்பு அதன் ஸாதனத்திலும் வ்யாபிக்கிறது. தவத்திற்கு ஸாதனமான சருகிலை தின்னும் போது அதையே பரம போக்யமாக ரஸித்து உண்பர். **(உடலம் தாம் வருந்தி)** – அபிமதமான (இனிய) அர்ச்சாவதாரத் திருமேனிகளைக் கண்டு இங்கே அநுபவிக்கக் கூடிய உடம்பை வருந்தச் செய்து. தாம்வருந்தி – உடலுக்குத் துன்பம் பிறவற்றால் வருதல் கண்கூடு. வினைப்பயனாய் ஆதிவ்யாதிகளால் உடல் வருந்துகிறது. பாபங்களின் பயனாய் நரகத்தில் யமபடர்களால் துன்பப்படுகிறது. அப்படியில்லாமல் தம் உடலைத் தாமே வருத்திக் கொள்வார் உண்டோ. **(துன்னுமிலைக் குரம்பைத் துஞ்சியும்)** நெருங்கிய இலைகளாலான பர்ணஶாலைகளில் துயின்றும், இலைகளிலே படிந்த புழுதி கண்ணிலே புக்கு துன்புறுத்தும்படி துயின்றும். இவர்கள் தூக்கம் மரணத்திற்கு ஒப்பானதால் துஞ்சியும் என்றார். **(வெஞ்சுடரோன் மன்னும் அழல் நுகர்ந்தும்)** உஷ்ணகிரணனான ஸூர்யனுடைய கிரணங்களையே உணவாகக் கொண்டும். கிரணங்கள் என்னாமல் அழல் என்றது நெருப்பை.

வெளியில் மட்டும் உஷ்ணமாயில்லை, உடலின் உள்ளே சென்றாலும் உஷ்ணமாயிருப்பதாலே மன்னும் அழல் என்றார். இவர்கள் நீரும் பருகுவதில்லை. ஸூர்யகிரணங்களே இவர்களுக்கு உண்ணுஞ்சோறும் பருகும் நீரும். **(வண்தடத்தினுட் கிடந்தும்)** வண்மை மிக்க குளங்கள். தன்னை அண்டினவர்களுக்கு இன்பத்தை வாரி வழங்கக் காத்திருக்கிறது குளம். அதிலே கோடைகாலத்திலே அபிமத விஷயங்களோடே ஜலக்ரீடை பண்ணி போது போக்கலாமாயிருக்க அவ்வாறு செய்யாமல் குளிர்காலத்தில் நீர்க் காக்கை போலே குளங்களிலே மூழ்கி உடலில் பாசி படியும் படியாகக் கிடந்தும். இத்தனை கடினமான தபஸ்ஸைச் செய்து. **(இன்னதோர் தன்மையராய்)** இப்படிப் பட்ட ஸ்வபாவங்களை உடையவராய். கஷ்டங்களை அநுபவித்து அநுபவித்து அதுவே ஸ்வபாவமாகிவிட்ட இவருக்கு செய்த தவத்தின் பயனாய் பெரிய இன்பம் வந்தாலும் ரஸிக்குமோ ? **(ஈங்கு உடலம் விட்டெழுந்து)** நெடுநாளாக உடனிருந்து பழகியதால் உடலம் எனப்பட்டது ஶரீரம். இதைத்தானாகவே அபிமானித்திருந்தார் இவ்வளவு நாட்களாய். இந்த உடல் இருந்தது நினைத்தபடி அநுபவிக்கத்தக்க இவ்வுலகில். அத்தகைய உடலை விட்டுப் போய்.

**(தொன்னெறிக்கண் சென்றார் எனப்படுஞ்சொல்லல்லால்)** – பழையதான மோக்ஷத்திற்குச் சென்றார்கள் என்ற சொல்லைக் கேட்கிறோமேயன்றி. **(இன்னதோர் காலத்து)** ஏதாவது ஒரு காலத்திலே. **(இனையார் இது பெற்றார் எனவும் கேட்டறிவதில்லை)** யாராவது ஒருவர் மோக்ஷமாகிய பயனைப் பெற்றார் என்று அவர் வாயால் கேட்டறியவில்லை. **शुको मुक्तः वामदेवो विमुक्तः** (ஶுகர் முக்தியடைந்தார், வாமதேவர் முக்தியடைந்தார்) என்று ஶப்தப்ரமாணம் வாயிலாகக் கேட்டதுண்டே தவிர ப்ரத்யக்ஷமாக மோக்ஷம் சென்ற ஒருவர் சொல்லக் கேட்டதில்லை. ருஷிகளும்

பெ-4

மற்றவர் மோக்ஷமடைந்தார் என்று சொல்லுகிறார்களே தவிர 'நான் போனேன் இன்ன அநுபவத்தைப் பெற்றேன்' என்று சொன்னவர் ஒருவருமில்லை.

**உளதென்னில் மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின்**
**நன்னடுவுள் அன்னதோரில்லியினூடு போய் வீடென்னும்**
**தொன்னெறிக்கண் சென்றாரைச் சொல்லு மின்கள்**

**(உளதென்னில்)** நான் இல்லவே இல்லை என்று சொல்லுகிற மோக்ஷம் ஒருவேளை உண்டு என்ற பக்ஷத்தில். ஆழ்வார் திருவுள்ளத்தாலே அப்படியிருப்பதொரு புருஷார்த்த மில்லை. **अग्निना सिंचेत्** (நெருப்பினாலே நனைக்கக்கடவன்) என்றாற்போலே அது விருத்தமான பேச்சாகும். **तुष्यतु दुर्जनः** என்ற ந்யாயத்தாலே அப்படியொரு மோக்ஷம் உண்டென்றாலும் அதன் அழகை அவர்களே சொல்லக் கேளுங்கள் என்கிறார். **(மன்னும் கடுங்கதிரோன் மண்டலத்தின் நன்னடுவுள்)** முக்தன் போகவேண்டிய வழியைக் கேட்டாலே அது வேண்டாம் என்ற எண்ணம் தோன்றும். ஸூர்ய மண்டலத்தின் நடுவிலே போகவேண்டுமாம். ஸூர்யன் எப்படிப்பட்டவன். நித்யமாய், அணையக் கூடாதபடி வெம்மையான கிரணங்களையுடையவன். நூறாயிரம் யோஜனைகளுக்கு அப்பாலிருக்கும் போதே அவனுடைய வெப்பம் தாங்க முடியவில்லை. அவனருகே செல்ல முடியுமோ ? அது மட்டுமின்றி அம்மண்டலத்தின் நடுவே போகமுடியுமோ ? யோஜியுங்கள். **(அன்னதோர் இல்லியினூடுபோய்)** அப்படிப் போகும் போது வழியாவது விசாலமாயிருக்கிறதோ எனில், இல்லை. சிறிய த்வாரத்தின் வழியே போகவேண்டுமாம். அதைச் சிறிய த்வாரம் என்று சொல்லலாமே தவிர இவ்வளவு சிறியது என்று அளவிட்டுச் சொல்ல முடியாது. ஆகையால் அன்னது என்றார். முக்தன் பரமபதம் செல்லும்போது பகவத் ஸம்பந்தமாகிற அவனுடைய ராஜகுலப்

பெருமை தோன்றும்படி 'முடியுடை வானவர் முறை முறை எதிர்கொள்ள' (திருவாய். 10-9-8)ப் போவனாம். பகவத் ஸம்பந்தம் உடையவன் என்று சொல்லப்படுகிற இவனுக்கு ஶரீரத்தை விடும் ஸமயத்தில் மட்டுமே பகவான் முகம் காட்டுவனாம். **हार्दानुगृहीत: शताधिकया** (ஹ்ருதயத்திலிருக்கும் பரமாத்மாவால் அநுக்ரஹிக்கப்பட்டவனாய் வழியறிந்து முக்தஜீவன் நூற்றியொன்றாவது நாடிவழியாக மேலே செல்கிறான் - ப்ரஹ்மஸூத். 4-2-16) என்ற ஸூத்ரப்படி உள்ளத்தே உறையும் மால் நூற்றியொன்றாவதான மூர்த்தந்ய நாடியைக் காட்டித் தருவனாம். ஸ்தூலஸ்தூணாமதனத்தின் போது நோவு படாமல் தன் மடியிலே இட்டுக் காப்பனாம். ஶரீரத்தை விட்டு வெளிவந்த முக்தாத்மாவை ஆதிவாஹிகர் எனும் வழி நடத்துவோர் கையிலே காட்டிக் கொடுப்பதோடு தானும் முன்னே கைவிளக்குப் பிடித்துக் கொண்டு போவனாம் என்றெல்லாம் சொல்லுகிறீர்கள். **(வீடென்னும் தொன்னெறிக்கண் சென்றாரைச் சொல்லுமின்கள்)** பழையதான அந்த பரமபதத்தில் நான் போனேன், இன்னது கண்டேன், இன்னது அநுபவித்தேன் என்று கண்டு வந்த ஒருவரைக் காட்டிச் சொல்லுங்கள். அப்படி ஒருவர் சொன்னால் அதை ஏற்கலாம்.

**சொல்லாதே அன்னதே பேசும் அறிவில் சிறுமனத்து ஆங்கு**
**அன்னவரைக் கற்பிப்போம் யாமே அது நிற்க**

**(சொல்லாதே)** ஆனால் நீங்கள் அப்படிச் செய்யவில்லை. சிறந்த ப்ரமாணங்களான ப்ரத்யக்ஷ அநுமானங்களைச் சொல்லாமல். **(அன்னதே பேசும்)** எதைக் கேட்டாலும் ஶுகர் மோக்ஷம் போனார், வாமதேவர் மோக்ஷம் போனார் என்று வசனம் படிக்கிறீர்கள். வேறில்லை. **(அறிவில்)** மூடர்கள் அவர்கள். மற்றவர்கள் சொல்வதைப் பின் சொல்லும் அறிவிலிகள். **मूढ : परप्रत्ययनीय बुद्धि:** என்றான் காளிதாஸன். அவர்கள் விவேகமில்லாத அறிவு கேடர்கள்.

(அறிவில் சிறுமனத்து) இப்போது அறிவில்லாமல் போனாலும் பிற்காலத்திலாவது அறிவு வளரத்தக்க வகையில் பரந்த மனமாவது படைத்திருக்கிறார்களோ எனில், அதுவுமில்லை. குறுகிய மனமுடையவர்கள். (ஆங்கு அன்னவரைக் கற்பிப்போம் யாமே) இப்படிப்பட்ட அறிவிலிகளுக்குக் கற்பிக்கவேண்டிய கடமை நமக்கு வந்து சேர்ந்ததே. இது என்ன கஷ்ட காலம். மடலைக் கையிலே வைத்துக் கொண்டு வீதியின் இருபுறமும் நெருங்கி நிற்கும் மக்கள் பார்க்கும்படி திருவத்யயனோத்ஸவத்தில் நம்பெருமாளைப் போலே உலாவித்திரிய வேண்டிய நமக்கு இந்த அறிவிலிகளுக்குக் கற்பிப்பதும் ஒரு பாரமாவதே. (அது நிற்க) இப்போது அதை விடுக.

இனி அறத்தின் வழி நின்றவர் பெரும் பேறுகளைச் சொல்லுகிறார்.

> **முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற**
> **அன்னவர்தாம் கண்டீர்கள் ஆயிரக்கண் வானவர் கோன்**
> **பொன்னகரம் புக்கு அமரர் போற்றி செப்ப**

நான்கு புருஷார்த்தங்கள் என்று முன்பு சொன்னேன். மன்னும் அறம் பொருள் இன்பம் வீடு என்று. இதைச் சிலர் தவறாகப் புரிந்து கொண்டு விட்டார்கள். அறம் என்பதற்கு மன்னும் என்ற அடைமொழியைக் கண்டு அதுவே நிலையான புருஷார்த்தம் என்று எண்ணிக் கொண்டார்கள். அர்த்தத்தைவிட நீண்ட நாட்கள் நீடிக்கக்கூடியது என்பதாலும் தானே ஸாத்யமாயும் மற்ற புருஷார்த்தங்களுக்கு ஸாதனமாயும் இருக்கிறது என்பதாலும் 'மன்னும் அறம்' என்றேன். என் அபிப்ராயத்தைப் புரிந்து கொள்ளாமல் அறமே மேலான நிலையான புருஷார்த்தம் என்று கொண்டனர் சில அறிவு கேடிகள். அது நிலையில்லாதது மட்டுமின்றி பயங்கலந்ததாயும் இருப்பதால் அல்பாஸ்திரமான புருஷார்த்தம். அல்பமாயும் அஸ்த்திரமாயும் இருக்குமோ என்னில்,

न केवलं द्विजश्रेष्ठ नरके दुःखपद्धतिः । स्वर्गेऽपि पातभीतस्य क्षयिष्णोर्नास्ति निर्वृतिः ॥
(அந்தணர் தலைவரே! நரகத்தில் மாத்திரம் துன்ப வரிசைகள் உள்ளன என நினைக்க வேண்டாம். புண்ணியம் குறைந்து கொண்டே வரும் மனிதனுக்கு ஸ்வர்கத்திலிருக்கும் போதும் எப்போது கீழே விழுவோமோ என்னும் பயமுள்ளதாகையாலே ஆநந்தமில்லை) என்கிறது விஷ்ணு புராணம் (6–5–50). ஸ்வர்கம் புண்ணியத்தின் பயன். புண்ணியம் அழிந்தால் ஸ்வர்கமாகிற பயனும் போய்விடும். ஸ்வர்க ஸுகம் பெறப்பெற அதை விளைவிக்கும் புண்ணியம் குறைந்து கொண்டே வருகிறது. ஆகையால் புண்ணியம் குறையக்குறைய எப்போது ஸ்வர்கத்திலிருந்து கீழே விழுவோமோ என்ற பயம் ஸ்வர்கத்திலுள்ளவர்களுக்கும் உண்டு. ஆகையால் ஆநந்தம் இல்லை. இவ்விஷயத்தை மனதில் பதிய வைப்பதற்காக அறத்தின் பயனைப் பற்றித் தெளிவாகச் சொல்லுகிறேன், கேளுங்கள்.

**(முன்னம் நான் சொன்ன அறத்தின் வழி முயன்ற)** முன்பு நான் சொன்ன அறத்தை ஶாஸ்த்ரோக்தமாக அநுஷ்டித்தவர்கள். அறத்தின் வழி என்றதாலே அறமாகிற ஜ்யோதிஷ்டோமாதிகளை அநுஷ்டிப்பது மிகவும் கடினம் எனத்தெரிகிறது. அதை அநுஷ்டிக்கும் போது கரணம் தப்பினால் மரணமாயிருக்கும். மந்த்ரங்களை உச்சரிக்கும்போது ஸ்வரத்திலே பிழை ஏற்பட்டாலும் அங்கங்களிலே ஏதாவது ஒரு குறைபாடு உண்டானாலும் ப்ரஹ்ம ராக்ஷஸனாய்ப் பிறப்பன். **(அன்னவர்தாம் கண்டீர்கள்)** அந்த அறத்தை இத்தனை சிரமப்பட்டுச் செய்த அவர்கள் பெறும் பயன் என்ன எனில். **(ஆயிரக்கண் வானவர் கோன்)** தேவர்கள் எல்லாரும் ஸம்ஸாரிகளாயிருந்து ஒரு ஸுக்ருத விசேஷத்தாலே தேவ பதவியை அடைந்தவர்கள். இங்கிருந்து சென்ற அவர்களுக்குத் தலைவனாயிருக்கும் இந்த்ரன். அவனும் அந்த தேவலோக ஸுகத்தை ஆயிரம் கண்கொண்டு அநுபவிக்க வேண்டும்படி

அளவிற் பெரியதான ஸுகம். **(பொன்னகரம் புக்கு)** பொன் என்பதற்குச் சிறந்தது. ஆசைப்படத்தக்கது என்ற பொருள்கள் உண்டு. தேவலோகத்திலே ஶ்லாக்யமான நகரமான, 'இதில் வஸிப்பதே பேரின்பம்' என்று நினைக்கலாம்படியுள்ள அமராவதி என்ற நகரம் அடைந்து. **(அமரர் போற்றி செப்ப)** 'முடியுடைவானவர் முறைமுறை எதிர்கொள்ள' (திருவாய். 10–9–8) என்றும் 'மருதரும் வசுக்களும் தொடர்ந்து எங்கும் தோத்திரம் சொல்லினர்' (திருவாய். 10–9–7) என்றபடியும் முக்தாத்மாவைக் கொண்டாடுவது போல் இவனையும் கொண்டாடுகின்றனர் தேவர்கள். எவ்வாறு கொண்டாடுகிறார்களெனில், பூலோகத்தில் அர்த்தபரராய் (பொருளிலே ஈடுபாடு உடையவராய்) இருந்த போதும், இந்த ஸ்வர்கத்தில் பெறப்போகும் காமபுருஷார்த்தத்தை விரும்பி, இதைப்பெறுவதற்காக உடல் வருந்தி ஸாதனாநுஷ்டானம் பண்ணின மஹாத்மாக்களன்றோ இவர்கள் என்று கொண்டாடுகிறார்கள்.

மேலும் அவர்கள் அடையும் ஸுகம் எப்படிப்பட்டதெனில்,

> **பொங்கொளிசேர் கொல்நவிலும் கோளரிமாத்தான்சுமந்த**
> **கோலஞ்சேர் மன்னிய சிங்கா சனத்தின்மேல்**

**(பொங்கொளி சேர்)** இவ்வுலகில் உள்ள பொருள்களின் ஒளி நாள் செல்லச் செல்ல மழுங்கும். ஸ்வர்காநுபவம் புண்ணியத்தின் பலமாகையால் நாள் செல்லச் செல்ல ஒளி மழுங்காதது மட்டுமல்ல, ஒளி விஞ்சியும் நிற்கும். **(கொல் நவிலும் கோளரிமா)** கொல்வதற்காக எழுந்திருந்து பாயுமாப் போலே என்று சொல்லலாம்படியான சிங்கங்கள். கோள் அரிமா – வலிதான சிங்கம். **(தான் சுமந்த)** உயிருள்ள ஸிம்ஹம் சுமப்பது போலே சுமந்து நிற்கின்றன சிற்பமான ஸிம்ஹங்கள். **(கோலம் சேர்)** அழகிய. **(மன்னிய சிங்காசனத்தின் மேல்)** நிலையான சிங்காசனத்தின் மேல்.

அதாவது ஸாம்ஸாரிகமான போகங்கள் உடனே அழிபவை. அவ்வாறு இல்லாமல் இன்னும் சிறிது காலம் நீடிப்பதாகும் ஸ்வர்கஸுகம். ஆக இங்குள்ள ஸிம்ஹாஸனம் பின்னும் நாலுநாள் உட்காரலாம்படி இருக்கும்.

இனி அங்குள்ள அப்ஸரஸ்ஸுகளுடன் அநுபவிக்கும் இன்பத்தைப் பேசுகிறது.

**வாள்நெடுங்கண் கன்னியராலிட்ட கவரிப்பொதியவிழ்ந்து ஆங்கு இன்னிளம்பூந்தென்றலியங்க மருங்கிருந்த மின்னனைய நுண்மருங்குல் மெல்லியலார் வெண்முறுவல் முன்னம் முகிழ்த்த முகிழ்நிலா வந்தரும்ப அன்னவர்தம் மானோக்கமுண்டு**

**(வாள் நெடுங்கண் கன்னியர்)** வாள் வீச்சாலே எதிரிகளை வீழ்த்துவது போல ஒரு கண்ணோக்காலேயே ஒருவரை வீழ்த்தவல்லவர்கள். நெடுங்கண் – காலதத்வமுள்ளவரையிலும் அநுபவித்தாலும் போதாது என்று சொல்லும் படியான கண்ணழகையுடையவர்கள். அப்படிப்பட்ட, **(கன்னியராலிட்ட கவரிப் பொதியவிழ்ந்து)** ஸ்த்ரீகளாலே இடப்பட்ட சாமரையின் திரள்கள் அவிழ்ந்து. **(ஆங்கு இன்னிளம்பூந்தென்றல் இயங்க)** அவ்விடத்தில் இனிய மந்தமான பூக்களின் மணத்தைச் சுமந்து வரும் தென்றல்காற்று வீச. **(மருங்கிருந்த)** அருகிலே சில தேவதா ஸ்த்ரீகள் இருக்கிறார்கள். இவர்கள் அருகில் ஏன் இருக்கிறார்கள் எனில், 'கிண்ணகத்தை எதிரிடவொண்ணாதாற்போலே போக்யதையின் மிகுதியாலே நெருக்க வொண்ணாதே அருகே இருக்க வேண்டியவராய்'. **(மின்னனைய நுண்மருங்குல்)** மின்னலைக் கண்டவர் அது நுண்ணியதாய் இருப்பதைப் பார்த்து தன்மேல் விழுந்து விடக் கூடாதே என்று நினைப்பர். அந்த மின்னலும் போலி என்று சொல்லும்படியான மெல்லிய இடையை உடையவர்கள்.

**(மெல்லியலார்)** மென்மையே ஸ்வபாவமாக உடையவர்கள். **(முன்னம் முகிழ்த்த)** முதலிலேயே வெளிப்படுத்திய. **(வெண்முறுவல் முகிழ்நிலா வந்தரும்ப)** வெளுத்த முறுவலாகிய இளநிலா வந்து பரவ. அடுத்ததாக சோலையிலே பூக்கொய்தலைச் சொல்லப் போகிறார். அதை முன்னாலேயே தெரிவிப்பது போல் இருக்கிறது இவர்களுடைய இளமுறுவல். **(அன்னவர்தம் மான் நோக்கம் உண்டு)** அப்படிப்பட்டவர்களின் மான் போன்ற நோக்கை அநுபவித்து.

அடுத்தபடியாக சோலையிலே பூக்கொய்து விளையாடுவதைத் தெரிவிக்கிறது. புண்ய பலத்தாலே நினைத்தபோதே கண்முன்பு தோன்றும் சோலை.

> **ஆங்கு அணிமலர்சேர் பொன்னியல் கற்பகத்தின் காடுடுத்த மாடெல்லாம் மன்னிய மந்தாரம் பூத்த மதுத்திவலை இன்னிசை வண்டமருஞ் சோலைவாய் மாலைசேர் மன்னிய மாமயில்போல் கூந்தல் மழைத்தடங்கண் மின்னிடை யாரோடும் விளையாடி**

**(ஆங்கு)** அப்போதிலே. **(அணிமலர்சேர்)** அவ்வுலகிற்கு அலங்காரமான மலர்கள் நிரம்பியிருக்கை. **(பொன்னியல் கற்பகத்தின்)** அது பொன்னகரமாகையாலே அங்குள்ள கற்பக மரங்களும் பொன்மயமாய் இருக்கின்றன. பொன் போலே ஆசைப்படத்தக்கது என்று கருத்து. **(கற்பகத்தின் காடுடுத்த)** சோலைக்கு விசேஷணம். கற்பகக்காடுகளாலே சூழப்பட்ட சோலை. **(மாடெல்லாம் மன்னிய மந்தாரம் பூத்த மதுத்திவலை)** பக்கங்களிலெல்லாம் நிலைபெற்ற பாரிஜாத மரங்களின் பூக்களிலுள்ள தேன்துளிகளில். **(இன்னிசை வண்டமரும் சோலைவாய்)** இன்னிசை எழுப்புகிற வண்டுகள் அமர்ந்திருக்கும்

சோலை. வண்டுகள் கூட்டம் கூட்டமாகத் தேன்துளிகளிலே அமர்ந்திருக்கும். அவைகளின் சிறகுகளின் இன்னிசையாலே அவைகள் இருப்பதை அறியலாம். அப்படிப்பட்ட சோலையிலே.

இனி அவர்களின் கூந்தலின் வர்ணனை. **(மாலைசேர்)** பூ மாலைகளால் அலங்கரிக்கப்பெற்ற கூந்தல். **(மன்னிய மாமயில் போல் கூந்தல்)** இயற்கையிலேயே அமைந்திருக்கும் பெரிய மயில் தோகை போன்ற கூந்தலையுடையவர்கள். **(மழைத்தடங்கண்)** மேகம் போலே குளிர்ந்தும் கறுத்தும் இருக்கும் விசாலமான கண்களையுடையவர்கள். **(மின்னிடையாரோடும் விளையாடி)** மின்னல் போன்ற இடையை உடைய பெண்களோடு விளையாடி.

இனி தேவஸபையில் கொலுவிருக்கும் ப்ரகாரத்தைச் சொல்லுகிறது.

> **வேண்டிடத்து மன்னு மணித்தலத்து மாணிக்க மஞ்சரியின் மின்னினொளிசேர் பளிங்கு விளிம்படுத்த மன்னும் பவளக்கால் செம் பொன் செய் மண்டபத்துள் அன்ன நடைய அரம்பையர்தம் கைவளர்த்த இன்னிசை யாழ்ப்பாடல் கேட்டு இன்புற்று**

**(வேண்டிடத்து)** தாங்கள் விரும்பிய இடத்திலே. **(மன்னு மணித்தலத்து)** நிலைநிற்கும் மணிகள் பதிக்கப் பெற்ற தரையையுடையதாயும். **(மாணிக்க மஞ்சரியின்)** மாணிக்கங்களைக் கோர்த்து பூந்தோரணமாகக் கட்டியிருக்கை. **(மின்னின் ஒளிசேர்)** அத்தோரணங்களின் மின்னும் ஒளி சேர்ந்த மண்டபம். **(பளிங்கு விளிம்படுத்த)** ஸ்படிகக் கற்களாலே கொடுங்கைகள் அமைக்கப் பெற்ற. **(மன்னும் பவளக்கால்)** ஆடுவார் சாய்ந்திருக்கை என்பது வ்யாக்யான பங்க்தி. அதாவது மேனகை, திலோத்தமை, ஊர்வசி, ரம்பை முதலிய நடன மாதர்கள் சாய்ந்திருக்கையாலே விளங்கி

நிற்கும் பவளத்தூண்கள், அவற்றையுடைய மண்டபம். **(செம்பொன்செய் மண்டபத்துள்)** பதினாறு மாற்றுள்ள ஆணிச்செம்பொன்னால் செய்யப் பெற்ற மண்டபத்தில். **(அன்னநடைய அரம்பையர் தம்கை வளர்த்த)** அன்னம் போன்ற நடையுடைய தேவஸ்த்ரீகள், செடிகளை நீரூட்டி வளர்ப்பது போல் தங்கள் கைகளாலே வளர்த்த இசை. **(இன்னிசை)** மநுஷ்ய கானத்திலும் சிறந்த தேவகானம். **(யாழ்ப் பாடல் கேட்டு இன்புற்று)** அப்படிப்பட்ட இசையையுடைய வீணையின் பாடலைக் கேட்டு அதன் இனிமையை அநுபவித்து. மண்டபத்தின் விசேஷணங்கள் ஆறு. மன்னுமணித்தலத்து, மாணிக்க மஞ்சரியின், மின்னின் ஒளி சேர், பளிங்கு விளிம்படுத்த, மன்னும் பவளக்கால், செம்பொன் செய். இனி தேவப்பெண்களோடு இவன் சிற்றின்பம் அநுபவிக்கும்படியைப் பேசுகிறது.

> **இருவிசும்பில் மன்னு மழைதவழும் வாணிலா நீள்மதிதோய் மின்னினொளிசேர் விசும்பூரும் மாளிகை மேல் மன்னு மணிவிளக்கை மாட்டி மழைக்கண்ணார் பன்னுவிசித்திரமாப் பாப்படுத்த பள்ளிமேல் துன்னிய சாலேகம் சூழ்கதவந் தாள்திறப்ப**

**(இரு விசும்பில்)** விசாலமான தேவலோகத்தில். **(மன்னு மழை தவழும்)** மழைக்காலத்தில் மட்டுமின்றி எப்பொழுதும் மேகங்கள் படிந்து இருக்கும் மாளிகை. 'உயிரளிப்பான் மாகங்களெல்லாம் திரிந்து நன்னீர்கள் சுமந்து நுந்தம் ஆகங்கள் நோவ' (திருவிருத். 32) என்று நம்மாழ்வார் பணித்தபடி, மேகங்கள் நீரைச் சுமந்து கொண்டு விசாலமான ஆகாய வீதியிலே திரிகின்றன. எதற்காக? உயிரளிப்பான்– பிராணிகள் எல்லாம் உயிர் வாழ்வதற்காக. இப்படித் திரிவதாலே அவற்றின் உடலிலே ஏற்படும் இளைப்பைப் போக்கிக் கொள்ள, மாளிகைகளின் மேல் தங்குகின்றன. **(வாணிலா நீள்மதி**

**தோய்)** ஒளி பொருந்திய நிலவையுடைய சந்த்ரன். அவன் தன் இனிமையாலே நீண்டிருப்பதாலே நீள்மதி என்றார். மேகங்களை போலே சந்த்ரனும் இந்த மாளிகையிலே படிந்திருப்பன். **(மின்னின் ஒளிசேர்)** மின்னலைப் போன்ற ஒளியுடைய மாளிகை. **(விசும்பூரும் மாளிகை மேல்)** மேகங்களும் சந்த்ரனும் தங்கிய இடங்கள் பள்ளம் என்னலாம்படி உயர்ந்த மாளிகை. ஆக மாளிகைக்கு நான்கு அடைமொழிகள். மன்னு மழை தவழும், வாணிலா நீள்மதி தோய், மின்னின் ஒளி சேர், விசும்பூரும் என்பன. **(மன்னு மணி விளக்கை மாட்டி)** மணியை மன்னும் விளக்காக மாட்டி என்று அந்வயம். அதாவது ஒளியில் சிறந்த மாணிக்கக்கற்களை அழுக்கறக் கடைந்து அவற்றை நிலை விளக்காப் பொருத்திவைத்து. மேலே படுக்கையின் வர்ணனை. **(மழைக்கண்ணார்)** மேகம் போலே கறுத்தும் குளிர்ந்தும் இருக்கும் கண்களையுடையவர்கள். அவர்கள் ஒரு முறை உற்றுப் பார்த்தாலும் காலமுள்ள வரையில் கண்ணின் குளிர்த்தி வவ்வலிடச் செய்யும். **(பன்னு விசித்திரமாப் பாப்படுத்த பள்ளி மேல்)** பன்னு என்பது பள்ளி என்பதுடன் சேரும். விசித்திரமாகப் பரப்பின படுக்கை. படுக்கை விரித்திருக்கும் அழகைக்கண்டால் காலமெல்லாம் அதையே கொண்டாடும்படி இருக்கும். **(துன்னிய சாலேகம் )** 'தழைகளும் தொங்கலும் ததும்பியெங்கும் தண்ணுமையெக்கம் மத்தளி தாழ்பீலி,குழல்களும் கீதமுமாகியெங்கும் கோவிந்தன் வருகின்ற கூட்டங்கண்டு, மழைகொலோ வருகின்றதென்று சொல்லி மங்கை மார் சாலகவாசல் பற்றி' (பெரியாழ். திரு. **3–4–1**) என்று பெரியாழ்வார் பாசுரம். சாலேகம் **– जालक** : துளையுள்ளது. நெருங்கிய துளைகளையுடைய ஜன்னல். அதாவது பெருங்காற்று வீசாமலும் காற்றே இல்லாதபடியும் இராமல் அளவாகக் காற்றை உட்புகச் செய்யும் துளைகளையுடைய ஜன்னல். **(சூழ்கதவம்)** ஜன்னலை மூடியுள்ள கதவு. **(தாள் திறப்ப)** காற்று வேண்டினபோது தானே திறந்துகொள்ள.

மேலே, ஜன்னல் வழியே உள்ளே புகும்தென்றல் காற்றை வர்ணிக்கிறார். காற்றை ஒரு மஹா புருஷனைப் போலப் பேசுகிறார்.

> அன்ன முழுக்க நெரிந்துக்க வாணீலச் சின்ன நறுந்தாது
> சூடிஓர் மந்தாரம் துன்னு நறுமலரால் தோள்கொட்டி
> கற்பகத்தின் மன்னு மலர்வாய் மணிவண்டு பின்தொடர
> இன்னிளம் பூந்தென்றல் புகுந்தீங்கு

**(அன்ன முழக்க நெரிந்துக்க வாணீலச் சின்ன நறுந்தாது சூடி)** அரசர்கள் தலையிலே பூச்சூடுவர். அதற்கு வளையம் என்று பெயர். தென்றலும் வளையம் சூடி வருகிறது. அழகிய நீலோத்பலங்களின் (கருநெய்தல்) சிறிய நறும் தாதைச் சூடிவருகிறது. நீர் நிலைகளில் உள்ள கருநெய்தல் பூக்களில் அன்னங்கள் ஏறித்துகைக்கின்றன. அதனாலே பூவிலுள்ள தேனும் கண்ணமும் தாதுவும் ஒன்றாய்க் குழம்பிப் பொடியாகின்றன. அப்பொடியைத் தென்றல் தலையாலே தாங்கி வருகிறது. **(ஓர் மந்தாரம் துன்னு நறுமலரால் தோள்கொட்டி)** அரசர்கள் தோள்களில் மாலைகள் மிளிரும். அதுபோல் தென்றல் மந்தார மலர்களாலே நெருங்கத் தொடுத்த மாலையைச் சுமந்து வருகிறது. **(கற்பகத்தின் மன்னு மலர்வாய் மணிவண்டு பின் தொடர)** அரசர்கள் போகுமிடமெல்லாம் துதிபாடகர்கள் துதிபாடிக்கொண்டு பின் செல்வார்கள். அதுபோலவே, தென்றலை அழகிய வண்டுகள் பின் தொடர்கின்றன. கற்பக மலர்களிலே மிகுதியாய்த் தேன் இருப்பது கண்டு அங்கேயே நித்ய வாஸம் பண்ணும் வண்டுகளும்கூட அவற்றை மறந்து தென்றலின் இனிமையிலே மயங்கி அதன்பின் செல்கின்றன. அவற்றின் ரீங்காரம் வந்திவைதாளிகர்களின் துதி போன்றிருக்கிறது. தலையிலும் தோளிலும் மாலையைச் சூடித் துதிப்பவர்கள் பின் தொடர அரசர்கள் நுழைவது போல் தென்றல் நுழைகிறது. **(இன்னிளம் பூந்தென்றல் புகுந்து ஈங்கு)** தொடுவதற்கு இனியதாய்,

மந்தமாய் பூக்களின் நறுமணத்தையுடைய தென்றல் ஜன்னல் வழியே இவர்கள் இருக்குமிடத்தில் புகுகிறது.

புகுந்த தென்றல் காற்று செய்வது என்ன ?

> இளமுலைமேல் நன்னறுஞ் சந்தனச் சேறுள் புலர்த்தத் தாங்கருஞ் சீர் மின்னிடைமேல் கை வைத்து இருந்து ஏந்து இளமுலைமேல் பொன்னரும்பாரம் புலம்ப அகங்குழைந்தாங்கு இன்னவுருவின் இமையாத் தடங்கண்ணார் அன்னவர் தம் மானோக்க முண்டு ஆங்கு அணிமுறுவல் இன்னமுதம் மாந்தியிருப்பர் இதுவன்றே அன்ன அறத்தின் பயனாவது

**(இளமுலை மேல் நன்னறுஞ் சந்தனச் சேறுள் புலர்த்த)** முற்றும் துறந்த முனிவர்களையும் தன் வலையிலே விழப்பண்ணும் இளமையுடைய மார்பு. அதின் மேலே பூசப்பெற்றிருக்கிறது சந்தனக்குழம்பு. மிக்க மணமுள்ளது. அந்தச் சந்தனக் குழம்பை படிப்படியாக உலரச் செய்கிறது உள்ளே புகுந்த தென்றல். **(தாங்கருஞ்சீர் மின்னிடைமேல் கைவைத்திருந்து)** அப்பெண்கள் தங்கள் இடையைக் கைகளாலே தாங்கிக் கொண்டு இருக்கிறார்கள். ஏன் ? அது தாங்கருஞ்சீர் மின்னிடையாகையாலே. பருத்த மார்பகங்களின் பாரத்தைத் தாங்க முடியாததாய் இடை இருக்கிறது. சீர் – அழகுடையது, மின் போல் நுண்ணியது. இப்படி தன் பர்த்தாவுக்குத் தன்னை பூர்ணமாக அநுபவிக்கக் கொடுத்துக் கொண்டிருக்கின்றனர். **(ஏந்திள முலை மேல் பொன்னரும்பு ஆரம் புலம்ப)** மார்பகங்களின்மேல் பொற்காசுக்களைக் கோத்துச் செய்த ஆரம் ஒலிக்கும்படி. ஸம்போகத்தை மறை முகமாகப் பேசுகிறார். **(அகங்குழைந்து)** அந்த இன்பத்திற்கு மனம் குழைந்து உடன்பட்டு. **(ஆங்கு)** அந்த தேவலோகத்தில். **(இன்னவுருவின்**

**இமையாத்தடங்கண்ணார்)** இன்னவுரு – உலையிலிட்டு உருக்கி எடுத்த பொன் போலே விவரிக்க முடியாதபடி அழகாயிருக்கை. இமையாத்தடங்கண்ணார் – வைத்த கண் வாங்க ஒண்ணாத போக்யதையுடைவர். **(அன்னவர்தம் மானோக்கமுண்டு)** அப்படிப்பட்ட பெண்களின் மான் போன்ற நோக்கம், அதாகிற உணவை உண்டு. அவ்வுணவு உண்டபின். **(ஆங்கு அணிமுறுவல்)** அவர்கள் புன்முறுவல் பூக்க. **(இன்னமுதம் மாந்தி)** இனிய அமுதம் போன்ற அதரபானத்தைப் பண்ணி, தாஹத்தைத் தணித்துக் கொள்வர். **(இருப்பர்)** இன்பம் மிகுதியாய் இருப்பதாலே இதனை விட்டு அகலமாட்டாமை தோற்றுகிறது. **(இதுவன்றே அன்ன அறத்தின் பயனாவது)** இவ்வளவு சிரமப்பட்டு அனுஷ்டிக்கும் அறத்தின் பயன் எவ்வளவு சிறியது. சிரமத்திற்குத் தக்க பயனில்லை.

மேலே அர்த்தம் (பொருளும்) பயனில்லை என்கிறார்.

**ஒண்பொருளும் அன்ன திறத்ததே**

சிறந்ததான பொருளும் அப்படிப்பட்டதே. அதாவது அல்பமாயும் அஸ்திரமாகவும் இருப்பது. ஒண்பொருள் என்றது ஏன் எனில், பரம்பொருளான எம்பெருமானைக் காட்டிக் கொடுக்கும் ஆசார்யர்களையும் பொருளுக்காகச் சிலர் கைவிடுவர், அவர்கள் பொருளையே ஒளிபொருந்திய ஒன்றாக நினைத்திருப்பதாலே. அவர்கள் நினைவாலே சொன்ன வார்த்தை. தன் நினைவாலே அன்று.

**ஆதலால் காமத்தின் மன்னும் வழிமுறையே நிற்றும்நாம்**

அறமும் பொருளும் காமத்தைப் பெறுவதற்கே என்று தெரிவதால், நாம் காம புருஷார்த்தத்தையே கைக்கொள்வோம். இங்கே ஆழ்வாருடைய திருவுள்ளத்தைச் சற்றே உற்று நோக்கவேண்டும். காமத்தில் என்னாமல் காமத்தின் மன்னும் வழிமுறை என்றார்.

அதாவது தாழ்ந்ததான இதரவிஷயமான காமமன்று இவர் கைக்கொண்டது. அறம் பொருள் இவைகளைப் போலே அதையும் கைவிட்டார். மன்னும் வழி இவர் பெற்றது. நிலை நின்ற காமமான பகவத்பக்தி இவர் கைக்கொண்டது. நாம் – காமத்தைத் தவிர மற்றவற்றைக் கைவிட்ட நாம்.

மேலே மடலூரல் பற்றிய தமிழர் கொள்கையைக் கூறி, தாம் அதனை ஆதரிக்கவில்லை என்கிறார்.

**மானோக்கின் அன்ன நடையார் அலரேச ஆடவர் மேல்**
**மன்னு மடலூராரென்பதோர் வாசகமும் தென்னுரையில்**
**கேட்டறிவதுண்டு அதனையாம் தெளியோம் மன்னும்**
**வடநெறியே வேண்டினோம் வேண்டாதார்**

பெண்கள் ஆடவர்மேல் மடலூரக் கூடாது என்ற தமிழர் கட்டியிருக்கும் வரம்பை அநுவதிக்கிறார். **(மானோக்கின் அன்ன நடையார்)** பெண்கள் என்று சொல்ல வேண்டியவர் மான் நோக்கின் அன்ன நடையார் என்கிறார். அதாகிறது மானினுடையது போன்ற இவர்கள் நோக்கம், அன்னத்தினுடையது போன்ற நடை இவை ஒவ்வொன்றுக்குமே ஆடவர் மடலெடுக்க வேண்டியிருக்கும். **(அலரேச)** பிறர்பழி சொல்லும்படியாக. **(ஆடவர்மேல்)** தலைமகன் மேலே. **(மன்னு மடலூரார்)** உயிரை நிலைக்கச் செய்யும் மடல் ஊரமாட்டார்கள். பெண்கள் ஆடவர்களால் வேண்டப்படுபவர்கள் ஆகையால் அவர்கள் மடலூர வேண்டியிருக்காது என்பதும், ஆண்கள் பழிச்சொல்லுக்கு ஆளானாலும் பெண்கள் அவ்வாறு ஆகக்கூடாது என்பதும், தலைவனுக்கு ஶேஷமாயிருக்கும் தலைவி அவனுக்கு பழிவிளைக்கக்கூடாது என்பதும், தலைமகளுக்கு உயிரைக் காட்டிலும் தன் ஸ்வரூபம் உயர்ந்தது என்பதும் தமிழர் கருத்து. **(என்பதோர் வாசகமும்)** இக்கருத்தைச் சொல்லும் வாக்யம் ஒன்றை. ஓர் என்பது இகழ்ச்சி. காதலின் பெருமையை

அறியமாட்டாத இதுவும் ஒரு வாசகமே என்ற இகழ்ச்சி. **(தென்னுரையில் கேட்டறிவதுண்டு)** தமிழில் கேட்டுள்ளோம். இது வெறும் உரையே தவிர, பொருள் பொதிந்தது இல்லை. தமிழில் திவ்ய ப்ரபந்தங்களையருளிச் செய்கிற இவ்வாழ்வார் தமிழை இகழலாமோ. 'செந்திறத்த தமிழோசை வடசொல்லாகி' (திருநெடுந்தாண். 4) என்று தமிழை பகவத் ஸ்வரூபமாகப் பார்ப்பவரன்றோ இவர் எனில், மடலெடுப்பதில் தமக்குள்ள உத்வேகத்தாலே வந்த வார்த்தை. தாம் மடலெடுக்க இடந்தராததால் ஏற்பட்ட வருத்தம் இப்படிப் பேச வைத்தது. ஆழ்வார் மடலெடுப்பேன் என்று சொன்னாரேயொழிய அவ்வாறு செய்யவில்லை. அதனாலே தமிழ் மொழியும் தமிழ்ப் பண்பும் காப்பாற்றப்பட்டது. **(அதனையாம் தெளியோம்)** அதனைத் தெளிவுடையதாக நாம் கருதமாட்டோம். எனக்குப் பொருந்தாது அது. **(மன்னும் வடநெறியே வேண்டினோம்)** வடநெறி – மடலெடுக்கையே புருஷார்த்தம் என்று ப்ரதிபாதிக்கும் ஸ்ரீமத் ராமாயணாதிகள். **(வேண்டாதார்)** வடநெறியை வேண்டாமல் தென்னுரையைப் பின்பற்றுபவர்கள். காமம் இன்னது என்பதையே அறியாதவர்கள். எப்படிப்பட்டவர்கள் என்று சொல்லுகிறாள் மேலே.

> **தென்னன் பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் அன்னதோர் தன்மை அறியாதார் ஆயன்வேய் இன்னிசையோசைக்கு இரங்காதார் மால்விடையின் மன்னு மணிபுலம்ப வாடாதார் பெண்ணைமேல் பின்னும் அவ்வன்றில் பெடைவாய்ச் சிறுகுரலுக்கு உன்னி உடலுருகி நையாதார்**

**(தென்னன் பொதியில் செழுஞ்சந்தனக்குழம்பின் அன்னதோர் தன்மை அறியாதார்)** அவர்கள் சந்தனத்தின் தன்மையறியாதவர்கள். சந்தனம் எங்கிருந்தோ வந்ததன்று. நம் தமிழ் நாட்டிலேயே பொதிகை மலையில் மிகுதியாக உண்டாவது.

அப்படியிருந்தும் சந்தனம் என்ற ஒரு தாவரம் உண்டு என்று கூட அறியாதவர்கள். செழும் சந்தனக் குழம்பு – முற்றும் துறந்த முனிவரையும் மயக்க வல்லது. 'துரும்பு எழுந்தாடவும் பண்ணவற்று'. அதாவது இதைப் பூசினால் ஒரு துரும்புக்கும் எழுந்தாடக் கூடிய சக்தியைத் தரவல்லது சந்தனம். அன்னதோர் தன்மை அறியாதார் – பிரிந்தவர்க்குச் சந்தனக் குழம்பு பூசினால் உடலைக் கொப்பளிக்கச் செய்யும் என்பதை அறியமாட்டார்கள். 'சொல்ல வாய்வேந்தன்மையறியாதார்' சந்தனம் என்று வாயால் சொன்னாலும் வாய் வெந்து போம்படியான தன்மையை அறியமாட்டார்கள்.

**(ஆயன் வேய் இன்னிசை ஓசைக்கு இரங்காதார்)** ப்ராஹ்மணர்க்கு வேதமும் பாணர்க்குப் பாட்டும் போல ஆயர்க்குக் குழல். இவை மூன்றும் கேட்போரை மெய்மறக்கச் செய்யும். ஆயர்களின் குழலோசையைக் கேட்ட உடன், ஐயோ நம் காதலனோடு இருந்து கேட்கப் பெற்றிலோமே என்று நெஞ்சம் கரைய வேண்டாவோ. அப்படி இல்லாமல் வேயின் இன்னிசை கேட்டும், காதலன் நினைவு வாராமல், அதையே தாலாட்டாக நினைத்து உறங்கவல்ல கல்நெஞ்சினர் அவர்கள். ப்ரஹ்மாஸ்த்ரம் போலே தப்பாத அந்த இசைக்கும் ஈடுபடாத அரஸிகர்கள் அவர்கள். இன்னிசை ஓசை என்பானேன் ? ஓசை – அம்பு. இன்னிசை – விஷம். விஷம் தடவிய அம்பு. இசை எப்படி விஷமாகும் எனில், அவனுடைய இன்சொற்களை நினைவூட்டி வருத்துகையாலே.

**(மால்விடையின் மன்னு மணிபுலம்பவாடாதார்)** மால் என்பதற்கு ப்ரேமம் என்றும் ஒரு பொருள். மால்விடை – பசுவினிடம் காதல் கொண்ட எருது. அதன் கழுத்தில் கட்டின மணி இடைவிடாமல் ஒலிக்க அவ்வொலியைக் கேட்டு நெருப்பிலிட்ட தளிர்போலத் துவளாதவர்கள். எருதின் கழுத்து மணி கேட்டால் ஏன் வாடவேண்டும் எனில், எருதைக் கண்டு பசு தன் இசைவைக்
பை–5

காட்டாமலிருந்தாலும் எருது தானே மேல் விழும். இங்கு நிலைமை வேறுவிதம். இவள் அவனுடைய வரவுக்கு ஆசைப் பட்டிருந்தும் அவன் வாராமையாலே வந்த துக்கம்.

**(பெண்ணைமேல் பின்னும் அவ்வன்றில் பெடைவாய்ச் சிறு குரலுக்கு உன்னி உடலுருகி நையாதார்)** பெண்ணை என்பது பனை. பனைமரத்தின் மீது அன்றில் பறவைகள் வாழும். அப்பறவைகள் புணரும்போது அவற்றின் வாயலகுகள் ஒன்றோடொன்று பின்னிப் பிணைந்திருக்கின்றன. அப்போது பேடையின் வாயிலிருந்து சிறு குரலாக வெளிப்படுகிறது. ப்ரணயத்தாலே குரல் இளைத்திருக்கிறது. அக்குரலைக் கேட்டவுடன் தன் காதலனோடு தான் சேர்ந்து இருந்தது நினைவுக்கு வர வேண்டாவோ. உன்னி – நினைத்துப் பார்த்து. உடலுருகி நையாதார் – ஶரீரம் கரைந்து குலையாதவர்கள். இன்னும் சிலவும் சொல்கிறாள்.

**உம்பர் வாய்த் துன்னு மதியுகுத்ததூநிலா நீள்நெருப்பில்**
**தம்முடலம் வேவத்தளராதார் காமவேள் மன்னுஞ்சிலைவாய்**
**மலர்வாளி கோத்தெய்யப் பொன்னெடு வீதி புகாதார்**
**தம்பூவணைமேல் சின்ன மலர்க்குழலும் அல்குலும்மென்**
**முலையும் இன்னிளவாடை தடவத்தாம் கண்துயிலும்**
**பொன்னனையார் பின்னுந் திருவுறுக**

**(உம்பர் வாய்த் துன்னு மதியுகுத்ததூநிலா நீள்நெருப்பில் தம்முடலம் வேவத்தளராதார்)** தலைமகனில்லாத போது நிலவிலே படுக்கவல்லவர்கள். உம்பர்வாய் – ஆகாஶத்திலே. துன்னுமதியுகுத்த – நெருங்கிய கிரணங்களையுடைய சந்த்ரன் வெளியே விட்ட. தூநிலா – தூய நிலவாகிற. நீள் நெருப்பில் – அணையாத நெருப்பில். எரிபொருளைச் சாம்பலாக்கிய பின்பும் தான் அணையாத நெருப்பு. தம் உடலம் வேவத்தளராதார் – தம்

ஶரீரம் வெந்து போம்படி உருக்குலையாதவர்கள். மதியுகுத்த – சந்த்ரனும் சூடு பொறுக்காமல் தன்னைப் போலவே நீள்நெருப்புக் கிரணங்களைத் தன்னிடம் வைத்துக் கொள்ளாமல் வெளியே சிந்துகிறான் என்று நினைக்கிறாள். நெருப்பு உலகிலுள்ளது. இது நீள் நெருப்பு. நெருப்பையே நிலவென்று சொல்லலாம்படி இருக்கிறது. கேவலாக்நி தஹிப்பது ஶரீரத்தையிறே. ஆத்மாவைத் தஹிக்கும் இதை நீள்நெருப்பு என்கிறாள். அது நீருக்கு அவியும். நீர்வண்ணனே வந்தாலொழிய அவியாது இது. தம்முடலம் வேவ – இரவல் உடம்பல்லவே தளராமலிருக்க. 'உணர்வுமுயிருமுடம்பும் மற்று உலப்பிலனவும் பழுதேயாம் உணர்வை' (திருவாய். 8–8–3) பெற்றிருப்பவர்கள் அல்லவே. உடம்பைப் பேணியிருப்பவர்களாயிற்றே.

**(காமவேள் மன்னுஞ்சிலைவாய் மலர்வாளி கோத்தெய்யப் பொன்னெடு வீதி புகாதார்)** காமவேள் சிலைவாய்– காமனுடைய கரும்புச் சிலைக்கு. மன்னும் – பொருத்தமான. மலர்வாளி – புஷ்ப பாணங்களை. கோத்து எய்ய – தொகுத்து எய்தவுடன். பொன் நெடு வீதி புகாதார் – அழகியதாய் நீண்ட வீதியில் கையும் மடலுமாய்ப் புறப்படாதவர்கள். பின் என்ன செய்கிறார்கள். ஸ்த்ரீத்வம் நோக்கிப் படி கிடந்து புறப்படாதே அடைத்துக் கொண்டு உள்ளே இருக்க வல்லவர்கள். பொன்வீதி – அழகிய வீதி. மடலெடுத்து வருவாரை வாவென்று அழகைக்காட்டி அழைக்கும் வீதி. நெடுவீதி – கல்ப காலமெல்லாம் மடலூரும்படி நீண்டிருக்கும் வீதி. புகாதார் – உள்ளேயுள்ள வரையில் காமபாணங்கள் மேன்மேலும் விழுந்து துன்புறுத்திக் கொண்டேயிருக்கும். காமபாணங்கள் வாய் மடியும்படி கல்மதிளுக்குள்ளே புகமாட்டாத அறிவிலிகள்.

**(தும்பூவணைமேல் சின்ன மலர்க்குழலும் அல்குலும்மென் முலையும் இன்னிளவாடை தடவத்தாம் கண்துயிலும் பொன்னனையார்**

பின்னுந் திருவுறுக). 'காந்த கரஸ்பர்ஶம் போலே தென்றல் ஸ்பர்ஶிக்கப் படுக்கைப் பொருந்தி கிடக்க வல்லவர்கள். இருவருக்கு ஏற்பட்ட படுக்கையில் தாம் ஒருவரே கிடக்கவல்லவர்கள். தம் பூவணை– காதலனைப் பிரிந்த நிலையில் 'மென்மலர்ப் பள்ளி வெம்பள்ளி யாலோ' (திருவாய். 9–9–4) என்றிருக்க வேண்டியவர்கள். நெருப்பை உருக்கி வார்த்தாற் போலே இருக்க வேண்டாவோ. பிரிந்தபோது தரையிலே கிடக்க வேண்டியவர்கள் தாமே பூப்படுக்கையை ஸித்தப்படுத்தி அதிலே கிடக்கிறவர்கள். சின்ன மலர்க்குழலும் – விரிந்த பூவையுடைய குழலையும். சின்னம் – விரிகை. 'மலரிட்டு நாம் முடியோம்' (திருப்பாவை – 2) என்றபடி அவன் மலரிட்டு முடிய வேண்டியிருக்க இவர்கள் தாங்களாகவே மலர்சூடுவதே. குழலும் அல்குலும் மென்முலையும் – நாயகன் ஒவ்வொரு அவயவத்தையும் தடவிக் கொடுக்கும் போது பெறும் இன்பத்தை இவ்வாடையின் ஸ்பர்ஶத்தில் பெறுகிற இவர்களை என் சொல்வது ? இன்னிள வாடை தடவ – நஞ்சு தடவின அம்பு போன்றது. இளவாடை – பிறரை நலிய நலிய இளமை மிகுகின்ற வாடை. தாம் கண்துயிலும் – காதலனைப் பிரிந்தவர்களா கண் உறங்குவர் ? 'பொன்னடி காண்பதோராசையினாலென் பொருகயற் கண்ணிணைதுஞ்சா' (நாச்.திரு. 5–5) என்பதல்லவோ அவர்கள் நிலை. ஒரு வேளை இவர்கள் இரவல் கண்கள் பெற்றார்களோ. பொன்னனையார் – பொன் போன்றவர்கள். அதாவது நெருப்பிலே கிடந்து நிறம் பெறுபவர்கள். அல்லது ஸௌபாக்யவதிகள். இவர்களல்லவோ ஸௌபாக்யவதிகள் என்று பரிஹஸிக்கிறார். பின்னும் திருவுறுக – அவர்களுடைய இந்த ஸௌபாக்யம் நித்யமாகச் செல்லட்டும்.

வேண்டாதார் என்று தொடங்கி இதுவரையில் வரம்பு மீறாமல் தென்னெறியைப் பின்பற்றுபவர்களைப் பற்றிக் கூறினாள். அவர்கள் எப்படி இருப்பர் எனில் 1) சந்தனத்தின் தன்மை அறியாதவர். 2)

இடையர்களின் குழல் ஓசைக்கு இரங்காதவர். 3) மால்விடையின் மன்னுமணி புலம்ப வாடாதவர். 4) அன்றிலின் குரலுக்கு உன்னி உடலுருகி நையாதவர். 5) தூநிலா நீள் நெருப்பில் தம் உடலம் வேவத்தளராதவர். 6) காமவேள் வாளி கோத்து எய்யப் பொன்னெடு வீதி புகாதவர். 7) தம்பூவணைமேல் வாடைதடவக் கண்துயிலும் பொன்னனையார்.

மேலே வடநெறியை வேண்டி மடலெடுக்கப் புகுந்த தனக்கும் ஶிஷ்டாசாரம் உண்டு என சொல்லப்புக்கு, முதலில் தான் சிரமப்பட்டாவது கணவனுடன் சென்ற பிராட்டியை உதாஹரணமாகக் காட்டுகிறாள்.

**போர்வேந்தன் தன்னுடைய தாதை பணியாலரசொழிந்து பொன்னகரம் பின்னே புலம்ப வலங்கொண்டு மன்னும் வளநாடு கைவிட்டு மாதிரங்கள் மின்னுருவில் வெண்டேர் திரிந்து வெளிப்பட்டு கல் நிறைந்து தீய்ந்து கழையுடைந்து கால் சுழன்று பின்னும் திரை வயிற்றுப் பேயே திரிந்துலவா கொன்னவிலும் வெங்கானத்தூடு கொடுங்கதிரோன் துன்னுவெயில் வறுத்த வெம்பரல் மேல் பஞ்சடியால் மன்னனிராமன் பின் வைதேவியென்றுரைக்கும் அன்னநடைய அணங்கு நடந்திலளே**

**(போர் வேந்தன்)** போரிலே ஆண்மை மிக்கு புலிபோல் இருப்பவன். ரணமுகன் என்ற பெயருடையவன். **(தன்னுடைய தாதை பணியால்)** பணித்தல் – சொல்லுதல். தன்னுடைய தந்தை பணித்தபடி காடு புகுந்தார். **(அரசொழிந்து)** வாடல் மாலையைக் கழற்றி எறிவாரைப் போல தலைச்சுமை என்று கிரீடத்தைக் கழற்றினார். **(பொன்னகரம்)** 'பொன்னுலகு' (திருவாய். 6–9–1) எனப்படும் அப்ராக்ருத ஸ்ரீவைகுண்டத்தை ஒத்திருக்கும் திருவயோத்தி. அதற்குக்

காரணம், நித்ய முக்தர்களைப் போல ராமனோடு கலந்திருப்பதையே இன்பமாகக் கொண்டிருப்பர் அயோத்தி மக்கள். **अपि वृक्षाः परिम्लानाः सपुष्पाङ्कुर कोरकाः** (பூ, முளை, மொட்டு ஆகியவற்றோடு கூடிய மரங்களும் வாடின. ரா.அயோ.59–9) தாவரங்களும் ராமகுணங்களைக் கொண்டே உயிர் தரித்தன. **(பொன்னகரம் பின்னே புலம்ப)** அயோத்தி மக்கள் ராமனைப் பிரிய மாட்டாதே அவர் பின்னே தொடர்ந்து அழுது கூப்பிட. 'சுற்றமெலாம் பின்தொடரத் தொல்கானம் அடைந்தவனே' (பெருமாள் திரு.8–6) என்றார் குலசேகரரும். **(வலம் கொண்டு)** ஸௌலப்ய மார்த்தவாதி குணங்களை வெளிப்படுத்தவே பிறந்த பெருமாள் பலத்தைக் கைக் கொண்டார். தனக்கு இனியவர்களைப் பிரிந்து போகவல்ல மனவுறுதியைப் பெற்றார். **(மன்னும் வளநாடு கைவிட்டு)** முடி துறந்தால் நாட்டையுமா துறக்க வேண்டும். அரச நீதிப்படி தனக்கே உரியதான வளம்பொருந்திய கோசலநாடு. கைவிட்டு – இவன் நாட்டைத் துறந்த போது வருந்தினார் யார் யார்? **मम त्वश्वा निवृत्तस्य न प्रावर्तन्त वर्त्मनि ॥ उष्णमश्रु प्रमुञ्चन्तो रामे संप्रस्थिते वनम्** । (திரும்பி வந்த என் குதிரைகள் வழியில் செல்ல மாட்டாதவையாயின. ராமன் வனம் சென்றவளவில், அவையும் துன்பக் கண்ணீர் சொரிந்தன. ரா.அயோ.59–5,6) என்ற ஸுமந்த்ரன் கூற்றுப்படி குதிரைகளும் வருந்தின. 'திரிந்தது வெஞ்சமத்துத் தேர் கடவி அன்று பிரிந்தது சீதையை மான்பின் போய் புரிந்ததுவும் கண் பள்ளி கொள்ள அழகியதே நாகத்தின் தண்பள்ளி கொள்வான் தனக்கு' (இரண்டாந்திரு. 15) என்று பூதத்தாரும், 'எவ்வாறு நடந்தனையெம்மிராமாவோ', 'வியன்கான மரத்தின் நீழல் கல்லணைமேல் கண்துயிலக் கற்றனையோ' (பெருமாள் திரு. 9–2,3) என்று குலசேகரரும் போன்ற அன்புடையாரும் வயிறு எரியும்படியான காரியத்தை அன்றோ செய்தது.



நான் வணங்கும் கண்ணன் - கண்ணபுரத்தான்

ராமன் புகுந்த காட்டை விசேஷிக்கிறார். **(மாதிரங்கள்)** திக்குகளில். **(மின்னுருவில் வெண்தேர் திரிந்து)** – மின்னல் போன்ற கானல்நீர். கானல் நீருக்கு வெண்தேர் என்றும் பேய்த்தேர் என்றும் பெயர். **(வெளிப்பட்டு)** 'கண்ணுக்கிட ஒரு பூண்டில்லாமை', ஒரே வெளிநிலமாயிருக்கிறது. **(கல் நிறைந்து)** தரையெல்லாம் இடைவெளியில்லாமல் கல் நிறைந்து கிடக்கிறது. **(கழையுடைந்து)** மூங்கில்கள் வெப்பத்தாலே உடைந்து கிடக்கின்றன. **(கால் சுழன்று)** சுழற்காற்று வீசுகிறது. **(பின்னும்)** முன்பு சொன்னதற்கு மேலே. **(திரை வயிற்றுப் பேயே திரிந்து)** உலர்ந்த வயிற்றை உடைய பேயே திரிந்து கொண்டிருக்கும். ஆஹாரமில்லாமையாலே வயிறு உலர்ந்து கிடக்கிறது. பேயே என்றதால் வேறு ஜந்துவில்லை. **(உலவா கொல் நவிலும்)** ஓயாமல் இன்னான் முடிந்தான் இன்னான் உயிர் துடித்துக் கொண்டிருக்கிறான் என்னும் பேச்சேயாயிருக்கிறது. உலவா வெங்கானம் என்றுமாம். ஓயாமல் நீளும் கொடுங்காடு. **ते वनेन वनं गत्वा** (அவர்கள் காடு காடாகச்சென்று. ரா.பா.1–30) என்றார் வால்மீகி. **(வெங்கானத்தூடு)** மிகவும் கொடிய கானத்தின் நடுவே. காட்டிலே பெருமாளும் பிராட்டியும் பட்ட கொடுமைகளைக் கூறுகிறார்.

**(கொடுங்கதிரோன்)** இவனும் கைகேயி பக்ஷத்திலே சேர்ந்தவனானான். ராமனைத் துன்புறுத்தவே படைத்த கொடுங்கிரணங்களையுடையவனானான். **(துன்னு வெயில்)** நிறைந்த வெயில். **(வெயில் வறுத்த வெம்பரல்மேல்)** வெயில் பரல்கற்களை வறுக்கிறது. வறுக்க வறுக்க அது வெம்பரலாகி எதிரிட்டு வெயிலை வறுக்க வல்லதாகிறது. ஸூர்யனைக்கூட எதிரிட்டுக் கொளுத்தும் தன்மையுடையதாகிறது. அப்படிப்பட்ட வெம்பரல் மேல். **(பஞ்சடியால்)** பஞ்சுபோலே மெத்தென்றிருக்கும் அடியாலே. **(மன்னன்)** நாடாகிய பூமிதேவியை ஆள்வதற்காகச் சூட இருந்த முடியைத்தவிர்த்து, ஸ்ரீ தேவியாகிய இவளையே ஆளக்காடு சென்றபடியாலே இவளுக்கு மன்னனானான். **दीयमानां न तु तदा प्रतिजग्राह**

**राघव:। अविज्ञाय पितृश्छन्दं अयोध्याधिपते: प्रभो:॥** (நீர் வார்த்துக் கொடுக்கவிருந்த என்னை, தந்தையின் கருத்தறியாமல் ஏற்றுக் கொள்ளவில்லை ராமபிரான். ரா.அயோ.118–51) என்று ராமனின் பித்ருபாரவஶ்யத்தைக்குத் தோற்றாற்போலே, ராஜ்யத்தைக் கைவிட்ட பெருமைக்குத் தோற்றபடியைச் சொல்லுகிறது. **(இராமன் பின்)** அனைவரையும் ரமிக்கச் செய்பவன். இவன் பின்னே போவதாகில் எங்கும் போகலாமே. நரகத்திற்குக் கூடச் செல்லலாமே. **यस्त्वया सह स स्वर्गो निरयो यस्त्वया विना** (உன்னோடு கூடியிருக்குமிருப்பே ஸ்வர்கமாகும். உன்னைப் பிரிந்திருப்பதே நரகமாகும். ரா.அயோ.30–18) என்று சொன்னவளன்றோ.

**(வைதேவி) मिथिलायां प्रदीप्तायां न मे किंचित् प्रदह्यते** (எரியும் மிதிலையில் என்னதொன்றுமில்லை) என்று சொல்லவல்ல விதேஹருடைய மகளாகையாலே நாடுவிட்டுக் காடுசெல்லவல்ல பெருமையுடைவள். **(என்றுரைக்கும்)** ஸ்ரீமத்ராமாயணம் இவளைப் பற்றி எல்லாமுரைக்கும். **सीताया : चरितं महत्** (ஸீதையின் மகத்தான சரிதம். ரா.பா. 4–7) என்றாரன்றோ வால்மீகி. அல்லது பெண்களுக்குத் திலகமாய் உலகமெல்லாம் உரைக்கும்படி நின்றவள். **(அன்ன நடைய)** இவளுடைய அன்ன நடையைக் கண்டால் ராமனும் இவளைப்பெற மடலூரும்படி இருக்கும். **(அணங்கு)** தெய்வப்பெண். **तस्य भूयो विशेषेण मैथिली जनकात्मजा। देवताभि: समा** (ஜநகபுத்ரியான மைதிலி ராமபிரானுக்கும் விஶேஷமாக தேவதைகளோடு ஒத்திருந்தாள். ரா.பா.77–30) என்றும் **त्रयाणां भरतादीनां भ्रातृणां देवता च या** (பரதன் முதலாகிய மூன்று ப்ராதாக்களுக்கும் எவள் தெய்வமோ. ரா–ஸு. 55–26) என்றும் 'சீதையென்பதோர் தெய்வம்' (பெரியதிரு. 10–2–5) என்றும் சொல்லும்படி ராமபிரானோடு வாசியில்லாமல் அனைவருக்கும் தெய்வமாயிருப்பவள். **(நடந்திலளே)** அப்படிப்பட்ட பெருமையுடையவளுமன்றோ நடந்து சென்றாள். லோகமாதாவான அவள் தன் ஸ்வரூபத்தை நோக்காமல் அவனை நிர்பந்தித்துச்

சென்றாள் எனில் நம்போல்வார் அவனைப் பெறாதபோது மடலெடுப்பதில் என்ன தவறு.

மேலே ஒரு கந்தர்வஸ்த்ரீயின் சரிதத்தைச் சொல்லுகிறாள். ஒரு கந்தர்வஸ்த்ரீயை ஒரு கந்தர்வன் விவாஹம் பண்ணிக் கொண்டு போக அவளுடைய உடன் பிறந்தவன் வந்து யுத்தம் பண்ணி மீட்கப் பார்க்க அவனுக்கு மீளாதே அந்த கந்தர்வனோடே போய்த் தானும் அவனுமாக அநுபவித்தாள் என்று மஹாபாரதத்திலே ஒரு கதை உண்டு. அதைச் சொல்லுகிறது என்று அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் கூறுகிறார்.

**பின்னும் கருநெடுங்கண் செவ்வாய்ப் பிணைநோக்கின்**
**மின்னனைய நுண்மருங்குல் வேகவதியென்றுரைக்கும்**
**கன்னி தன் இன்னுயிராம் காதலனைக் காணாது**
**தன்னுடைய முன்தோன்றல் கொண்டேகத் தான் சென்றங்கு**
**அன்னவனை நோக்காது அழித்துரப்பி வாளமருள்**
**கன்னவில் தோள் காளையைக் கைப் பிடித்து மீண்டும்**
**போய்ப் பொன்னவிலும் ஆகம் புணர்ந்திலளே**

**(பின்னும்)** பிராட்டியைப் பேசின வாயாலே மறுபடியும் பேசத்தக்க பெருமையுடையாள் ஒருத்தி. **(கருநெடுங்கண்)** அஸிதேக்ஷணா (கருங்கண்ணையுடையவள். ரா.ஸு. 16–5) என்றும் 'மையார் கருங்கண்ணி கமலமலர்மேல் செய்யாள்' (திருவாய். 9–4–1) என்றும் கருங்கண்ணையுடையவள் என்பதாலே பிராட்டிக்கு ஏற்றம். அவளைக் காட்டிலும் இவளுக்குக் கண்ணில் பரப்பு ஏற்றமாயிருக்கும். **(செவ்வாய்)** 'சுரிகுழல் கனிவாய்த்திரு' (பெரியதிரு. 5–7–7) என்று சொல்லப்பட்ட அவளுடைய புன்சிரிப்புக்குப் போலியாயிருக்கை. **(பிணைநோக்கின்)** பிணைக்கப் பண்ணும் நோக்கு. **ந ஜீவேயம் க்ஷணமபி** (ஒரு கணமும் உயிர் தரியேன். ரா.ஸு.66–10) என்று சொல்லப்பண்ணும். 'மானமரும் மென் நோக்கி'

(பெரியதிரு. 11–5–1)யின் நோக்கை ஒத்திருக்கை. **(மின்னனைய நுண்மருங்குல்)** 'மின்னனைய நுண்மருங்குல் மெல்லியல்' (பெரியதிரு. 3–9–5) என்றும் **सुमध्यमा** (அழகிய இடையுடையவள். ரா.ஆ.11–1) என்றும் பேசப்படும் அவளைப் போல நாயகனுக்கு பயஸ்தானமாயிருக்கும் இடையை உடையவள். **(வேகவதி என்றுரைக்கும்)** வேகவதி என்று சொல்லுகிற. **(கன்னி)** பன்னிரண்டாண்டுகள் பெருமாளோடே இன்புற்றிருந்த பிராட்டி பின்தொடர்ந்தது பெரிதல்ல. நாயகனோடு கூடியறியாத இவள் தமையனையும் எதிரிட்டு நாயகன் பின் சென்றது அருஞ்செயல். **समा द्वादश तत्राहं राघवस्य निवेशने । भुंजाना मानुषान् भोगान् सर्वकामसमृद्धिनी ॥** (மானிடர்க்குரிய இன்பங்களைத்துய்த்துக் கொண்டு நானும் பெருமாளும் பன்னிரண்டு வருடங்கள் தஶரதருடைய மாளிகையில் இருந்தோம். ரா.ஸு. 33–17, 18) என்று பிராட்டி வார்த்தை. எல்லாக் காமங்களும் ஈடேரப்பெற்றவள் அவள். கலவியின்பத்தைப் பெற்றிராத கன்னி இவள். **(தன் இன்னுயிராம் காதலனைக்காணாது)** தனக்கு உயிரைக்காட்டிலும் இனியவனாய் காதலே வடிவான அவனைக் காணாதபடி. **(தன்னுடைய முன்தோன்றல் கொண்டேக)** தன்னோடு ஒரு வயிற்றிலே பிறந்த தமையன் காதலனிடமிருந்து இவளைப் பிரித்துச் செல்ல. **(தான் சென்று)** தானே போய். **(அங்கு அன்னவனை நோக்காது)** ஸஹோதர பாசமுடைய அவனையும் பாராமல். **(அழித்து உரப்பி)** கடுஞ்சொற்களைப் பேசி அவன் ஸ்வரூபத்தையழித்து. **(வாளமருள்)** காதலனுக்கும் தமையனுக்கும் நடந்த பெரும் போரிலே. **(கன்னவில்தோள் காளையைக் கைப்பிடித்து)** தமையன் கையை உதறித் தன் காதலனைக் கைப்பிடித்தாள். எல்லோரையும் விட்டுப் பற்றலாம் படியான கல் போன்ற உறுதியான தோள். தோள் பலமில்லாது போனாலும் பருவமே போதுமானதாயிருக்கும். கைப் பிடித்து – தனக்காக யுத்தத்திலே அம்பெடுத்தவன் கையை

அனைவரும் காணப் பிடித்து. **(மீண்டும் போய்)** தமையனிடமிருந்து மீண்டு சென்று, தன்னிருப்பிடம் சென்று. **(பொன்னவிலும் ஆகம் புணர்ந்திலளே) भर्तारं परिषस्वजे** (கணவனைத் தழுவினாள். ரா.ஆ.30–40) என்று பிராட்டி திருமுலைத் தடங்களாலே ராமனது வீர வ்ரணத்திற்கு ஒத்தடம் கொடுத்தாற் போலே, தனக்காக அம்பேற்று பொன்போலே சிவந்திருக்கும் நாயகனுடைய மார்பிலே விழுந்து தழுவிப் புண்களுக்கு ஒத்தடம் கொடுத்தாள்.

இனி மஹாபாரதத்தில் கூறப்பட்டுள்ள மற்றொரு இதிஹாஸத்தைக் கூறுகிறாள். கங்கையில் நீராடிக்கொண்டிருந்த உலூபி என்னும் நாககன்னிகை தீர்த்த யாத்திரையாக அங்கு வந்த அர்ஜுனனைக் கண்டு காமுற்றாள். அவனிடம் தன் விருப்பத்தைத் தெரிவித்து நிர்பந்தித்து அழைத்துச் சென்று அநுபவித்தாள் என்ற அவ்விதிஹாஸத்தைக் கூறுகிறாள்.

**பூங்கங்கை முன்னம் புனல்பரக்கும் நல்நாடன் மின்னாடும் கொன்னவிலும் நீள்வேல் குருக்கள் குலமதலை தன்னிகரொன்றில்லாத வென்றித் தனஞ்சயனைப் பன்னாகராயன் மடப்பாவை பாவை தன் மன்னிய நாணச்சம் மடமென்றிவையகலத் தன்னுடைய கொங்கை முகம்நெரியத் தான் அவன்தன் பொன்வரையாகம் தழீஇக்கொண்டு போய் தனது நன்னகரம் புக்கு நயந்தினிது வாழ்ந்ததுவும் முன்னுரையில் கேட்டறிவதில்லையே**

அப்ரஸித்தனான ஒருவனுக்கோ இவள் மடலெடுத்தாள். ஸுப்ரஸித்த ராஜகுலத் தோன்றலான அர்ஜுனனுக்காகவன்றோ இவள் மடலெடுத்தது. **(பூங்கங்கை)** இரண்டு கரைகளிலும் சோலைகளாய் பூக்கள் உதிர்ந்து கிடக்கும் கங்கை. 'கான்தடம் பொழில்சூழ் கங்கை', 'கரைமரம் சாடிக் கடலினை கலங்கக் கடுத்திழி கங்கை', 'நலந்திகழ் சடையான் முடிக்கொன்றை மலரும்

நாரணன் பாதத்துழாயும் கலந்திழி புனலால் புகர்படு கங்கை', 'கற்பகமலரும் கலந்திழி கங்கை' (பெரியாழ். திரு. 4–7) என்றவாறே. **(முன்னம் புனல் பரக்கும்)** இமயத்திலே சிறிது ஜலமுண்டானாலும் அது முதலில் பாய்வது இவன் நாட்டிலே. தலைமடையாயிருக்கை. இத்தாலே நீர்வளம் சொல்லிற்று. **(நல்நாடன்)** நிலவளம் சொல்லுகிறது. இனி கோன்வளம் சொல்லுகிறது. **(மின் ஆடும் கொல்நவிலும் நீள்வேல்)** மின்னல் போலே ஒளியை உடையதாய், மிக விரைவில் ஸஞ்சரிப்பதாய், எதிரிகள் பார்க்கும் போதே வயிறழுகிப் போகும் படியாகக் கொலையைக் கோட்சொல்லுவதாய், எதிரிகள் எங்கிருந்தாலும் அழிக்கலாம்படியான நீளத்தையுடைய வேல். **(குருக்கள் குலமதலை)** குருராஜகுலத்தோன்றல். உலகுக்கெல்லாம் குருவாயிருப்பவர் அவர்கள். அவர்களுள் முக்கியமாயிருப்பன் இவன். **(தன்னிகரொன்றில்லாத)** வீரத்துக்குக் கண்ணனும் எதிரன்று என்னும்படியாய் இருக்கை. **(வென்றி)** வெற்றியல்லது அறியாதவன். **(தனஞ்சயனை)** அர்த்த காமங்களை வென்றிருப்பவனை. தன்னை ஆசைப்பட்ட ஊர்வசியைத் தாய் என்று கருதினவன். **(பன்னாகராயன் மடப்பாவை)** பாம்புகளுக்கு அரசனுடைய பெண்மை மிக்க பெண்பிள்ளை. மடப்பாவை – பெண்மையில் இவளைவிடச் சிறந்தவள் இல்லை என்னும்படி இருப்பவள். **(பாவைதன் மன்னிய நாணச்சம் மடமென்றிவை அகல)** பிறந்த பின்பு உண்டானதன்றிக்கே இயற்கையிலேயே உள்ள நாணம், மடம், அச்சம், பயிர்ப்பு என்பவை கடல் வற்றினாற்போலே அழிந்து போக. நாணம் – பெண்மைக்குத் தகாத செயலில் மனம் ஒடுங்கி நிற்பது. அச்சம் – அச்செயலை நினைத்தாலும் மனம் நடுங்குவது. மடம் – எல்லாம் அறிந்தும் அறியாது போல் இருத்தல். பயிர்ப்பு – பிற புருஷர்களின் ஆடை முதலியன தன் மேல் பட்டாலும் அருவருப்புக் கொள்ளுதல்.

**(தன்னுடைய கொங்கை முகம் நெரிய)** தன்னுடைய முலைமுகம் நெரியும்படி, ஒருதலைக்காமமாக. **(தான் அவன்தன் பொன்வரையாகம் தழீஇக்கொண்டு போய்)** அவனுடைய பொன்மலை போன்ற மார்பை அவன் இசையாத போதும் தான் தழுவிக்கொண்டு போய். பொன்வரையாகம் – உலகிலுள்ளார் ஊர்வசியை அடைய நோன்பு நூற்க அவள்தான் இதைத்தழுவ ஆசைப்பட்டாளன்றோ. **(தனது நல்நகரம்)** மடலெடுப்பாரைத் தடுக்கும் இவ்வூரைப் போலன்றிக்கே அவர்களைக் கொண்டாடும் ஊர். **(புக்கு)** புகுந்து. **(நயந்து)** கொண்டாடி. **(இனிது வாழ்ந்ததுவும்)** உங்களைப் போல் தடை செய்வார் ஒருவருமில்லாமல் தோழிகள் எல்லாரும் அவனையடைய வழிசொல்லுவாரும் புகழுவாரும் ஆகையாலே, இனிமை தவிர வேறில்லாமல் வாழப் பெற்றதையும். **(முன்னுரையில் கேட்டறிவதில்லையே)** காம ஶாஸ்த்ரம் கற்காவிடிலும் போகிறது. புண்ணியத்திற்காக இதிஹாஸமான மஹாபாரதம் கூடக் கேட்டதில்லையோ? அது கேட்டிருந்தாலும் மடலெடுப்பதின் பெருமையை அறிந்திருக்கலாமே.

மேலே பாணாஸுரனுடைய மகள் உஷை என்பவள் கண்ணனின் பேரனான அநிருத்தனைக் கவர்ந்து சென்று அநுபவித்த படியைப் பேசுகிறாள்.

**சூழ்கடலுள் பொன்னகரஞ் செற்ற புரந்தரனோடேரொக்கும் மன்னவன் வாணன் அவுணர்க்கு வாள்வேந்தன் தன்னுடைய பாவையுலகத்துத் தன்னொக்குங் கன்னியரையில்லாத காட்சியாள் தன்னுடைய இன்னுயிர்த்தோழியா லெம்பெருமானீன் துழாய் மன்னுமணிவரைத்தோள் மாயவன் பாவியேன் என்னையிது விளைத்த ஈரிரண்டு மால் வரைத் தோள் மன்னவன்றன் காதலனை மாயத்தால் கொண்டு போய்க் கன்னிதன் பால் வைக்க மற்றவனோடெத்தனையோ மன்னிய பேரின்பமெய்தினாள்**

**(சூழ்கடலுள் பொன்னகரம் செற்றபுரந்தரன்)** கடலுக்குள்ளே பொன்னாலே நகரம் அமைத்து வாழ்ந்த அஸுரர்களை அழித்தமையால் புரந்தரன் என்று பெயர் பெற்ற இந்த்ரன். **(புரந்தரனோடு ஏர் ஒக்கும் மன்னவன் வாணன்)** அப்படிப்பட்ட இந்த்ரனையொத்த பெருமையுடைய பேரரசன் பாணன். **(அவுணர்க்கு வாள்வேந்தன்)** அஸுரகுலத்தலைவன். **(தன்னுடைய பாவை)** அவனுடைய புத்ரி. **(உலகத்துத் தன்னொக்கும் கன்னியரை இல்லாத காட்சியாள்)** உலகில் தன்னைப் போன்ற பருவமுடைய பெண்களில் தனக்கு ஒப்பாரில்லாத அழகையுடையவள். **(தன்னுடைய இன்னுயிர்த் தோழியால்)** தன்னுடைய வலது கை போன்றவளாய் உயிரில் இனியவளான சித்ரலேகை என்னும் தோழியாலே. **(எம்பெருமான்)** கையும் மடலுமாகப் புறப்படும்படி என்னை ஈடுபடுத்தி எழுதிக் கொண்டவனுடைய. **(ஈன்துழாய் மன்னு மணி வரைத்தோள் மாயவன்)** மிகவும் இனிய திருத்துழாய் பொருந்தி இருக்கப் பெற்றதால், நீல ரத்னமலை போன்ற தோளையுடைய ஆஸ்சர்யபூதன். மாயவன் – வெறுத்திருக்கும் போதும், ப்ராஸங்கிகமாக நினைத்தவுடன் ஈடுபடுத்துகையாலே ஆஸ்சர்யபூதன். மடலும் கையுமாயிருக்கும் போது ஈடுபடுத்துவதே! இது என்னமாயம்! **(பாவியேன்)** தன்னை அணைத்த தோளை நினைத்துக் கிடைக்கப் பெறாமையாலே பாவியேன் என்று நொந்து கொள்கிறாள். ஈடுபட்ட உடனே காதலனைக் கண்டுவந்த தோழியையுடைய உஷையன்றோ பாக்யவதி. மடலெடுக்கும் போதும் விலக்கும் தோழிகளைப் பெற என்ன பாவம் செய்தேனோ. நெடுந்தெருவில் போவோரெல்லாம் என்னை விலக்கும்படி பாவம் செய்தவள். **(என்னை இது விளைத்த)** இப்படி கையும் மடலுமாக என்னைப் புறப்படும்படி செய்த. **(ஈரிரண்டு மால்வரைத்தோள்)** நான் படும் பாட்டைக்காண அவன் தோள்கள் பணைக்கின்றன. **(மன்னவன்)** 'நாகணை மிசை நம்பரர் செல்வர் பெரியர் சிறுமானிடவர் நாம்' (நாச்.திரு. 10–10). **(மன்னவன்தன் காதலனை)** புத்திரனிடத்து அன்பைவிட பேரனிடத்து அதிகம் அன்பு.

எம்பெருமானுடைய அன்பே வடிவெடுத்தவன் என்று நினைக்கும்படியான அநிருத்தனை. **(மாயத்தால் கொண்டு போய்)** சித்ரலேகை கொண்டு வந்த சரிதை. **(கன்னிதன் பால் வைக்க)** கனவில் கண்டவனையே நினைந்துருகும் கன்னியிடம், அவளுமறியாமல் அவனைக் கொண்டு வந்து வைக்க. **(மற்றவனோடு)** இவளுக்குக் காதல் பிறந்தது கனவிலே. அவனுக்கு நேரிலே இவளைக்கண்டதும் பிறந்தது. **(எத்தனையோ மன்னிய பேரின்பம் எய்தினாள்)** அளவற்றதாய், ஒப்பற்றதாய், இயற்கையாய், பெரிதான இன்பத்தை அடைந்தாள். விலங்கிட்டு வைத்த போதும் கூடி அநுபவித்தாள். மேலும் சொல்லுகிறாள்.

**மற்றிவைதான் என்னாலே கேட்டீரே ஏழைகாள் என்னுரைக்கேன்**

**(மற்றிவைதான் என்னாலே கேட்டீரே)** மடலூர முயன்று ஶக்தியில்லாமல் நிற்கும் என்னிடமிருந்தா இவை போன்ற கதைகளைக் கேட்க நினைத்திருக்கிறீர்கள்.

**(ஏழைகாள்)** அறிவிலிகளே! இவளால் இதைச் சொல்லமுடியாதென்பதையும் நீங்கள் அறியவில்லையே.

**(என்னுரைக்கேன்)** மடலெடுத்ததற்கு உதாஹரணங்களை என்னால் சொல்லி முடியுமோ ? எவ்வளவு தான் சொல்லுவேன் ? இருப்பினும் கடைசியாக ஓர் உதாஹரணம் சொல்லுவேன். கேளுங்கள்.

மேலே பார்வதியின் வ்ருத்தாந்தம் கூறுகிறார்.

> **மன்னு மலையரையன் பொற்பாவை வாள்நிலா மின்னு மணி முறுவல் செவ்வாயுமையென்னும் அன்னநடைய அணங்கு நுடங்கிடைசேர் பொன்னுடம்பு வாடப் புலனைந்தும் நொந்தகல தன்னுடைய கூழைச் சடாபாரந்தான் தரித்து ஆங்கு அன்ன அருந்தவத்தினூடு போய் ஆயிரந்தோள்**

மன்னு கரதலங்கள் மட்டித்து மாதிரங்கள் மின்னியெரி வீச மேலெடுத்த சூழ்கழற்கால் பொன்னுலக மேழுங் கடந்துஉம்பர் மேல்சிலும்ப மன்னு குலவரையும் மாருதமும் தாரகையும் தன்னினுடனே சுழலச் சுழன்றாடும் கொன்னவிலும் மூவிலைவேல் கூத்தன் பொடியாடி அன்னவன் தன் பொன்னகலம் சென்றாங் கணைந்திலளே

**(மன்னு மலையரையன்)** பொன்னின் மாற்றை அறிய எடுத்து வைக்கப்படும் மச்சப்பொன் போல் உலகில் பெண்களுக்கெல்லாம் உதாஹரணமாய்த் திகழும் பெண்ணைப் பெற்ற பாக்யஶாலி. மடலூரும் பெண்களுக்கெல்லாம் உதாஹரணமாகத்திகழும் பெண்ணைப் பெற்ற பாக்யஶாலி. **(மன்னுமலையரையன் பொற்பாவை)** ஊர்பேர் தாய் தந்தை தெரியாதவளோ மடலூர்ந்தாள். உலகெல்லாம் அறியும்படியான ஹிமவன் பெண்ணல்லவோ. அரையன் – ராஜகுலத்தில் பிறந்தவள். பொற்பாவை – மிகச் சிறந்தவளாய் பெண்மை நிரம்பியிருப்பவள். **(வாணிலா மின்னு மணி முறுவல்)** வடிவழகில்லாதவள் அல்ல. ஒளிபொருந்திய நிலவைப்போல் மின்னும் அழகிய முறுவலையுடையவள். நிலவைப் போலும், மின்னல் போலும், மணிபோலும் உள்ள பல் வரிசையை உடையவள். **(செவ்வாய்)** பல்வரிசைக்குப் பரபாகமான சிவந்த வாயையுடையவள். **(உமை என்னும்)** இப்பெயராலே உலகெங்கும் ப்ரஸித்தி பெற்றவள். **उमां हैमवतीं** (இமவானின் புத்ரியான உமையை. கேநோபநிஷித்–12) என்னும் பெருமையுடையவள். பரப்ரஹ்ம ஸாக்ஷாத்காரம் பெற்றவளாக ஓதப்படுபவள். **उमेति मात्रा तपसो निषिद्धा पश्चादुमाख्यां सुमुखी जगाम** என்றான் காளிதாஸன். **(அன்னநடைய)** முன்னிலையில் நாலடி நடந்தால் நாயகனுடைய தாபமெல்லாம் தீரும். **(அணங்கு)** தேவஸ்த்ரீயன்றோ இப்பாடுபட்டது.

**(நுடங்கிடைசேர் உடம்பு)** துவண்ட இடையையுடைய உடம்பையுடையவள். நாயகனுக்கு 'ஒடிந்து விழுந்துவிடுமோ'

என்னும் பயத்தை விளைவிக்கும் இடையழகுடையவள். **(பொன்னுடம்பு வாட)** அவனும் தன் உடம்பில் பாதியாக்கிக் கொள்ள வேண்டும்படியான பெருமையுடைய அழகிய உடம்பு. அவனைப் பெறாததாலே மரத்தைப் பிரிந்த தளிர்போல வாட. **(புலன் ஐந்தும் நொந்து அகல)** அவளுடைய புலன்கள் கடுந்தவம் புரியும் இவளுடம்பில் நம்மால் இருக்க முடியாது என்று எண்ணி அகல. மற்றவர்கள் இந்த்ரியங்களை தரிக்கைக்காக சருகிலை முதலியவற்றைத் தின்பர். இவள் அதையும் ஒதுக்கித் தள்ளி அபர்ணா என்று பெயர் பெற்றாள். **स्वयं विशीर्ण द्रुमपर्णवृत्तिता परा हि काष्ठा तपसः तया पुनः । तदप्यपाकीर्णमतः प्रियंवदां वदन्त्यपर्णेति च तां पुराविदः ॥** (தானாக விழும் சருகிலைகளைத் தின்று தவம் செய்வதே கடுந்தவமாகிறது. பார்வதியோவெனில் அதையும் வேண்டாதவளானாள். ஆகையினால் முன்னோர்கள் அந்த இன்மொழியாளை 'அபர்ணா' என்று கூறுகின்றனர். குமாரஸம்பவம் 5–28) என்றானன்றோ காளிதாஸன். **(தன்னுடைய கூழைச்சடாபாரம் தான்தரித்து)** கூழை – மயிர்முடி. தன் மயிர் முடியைத் தானே சடையாகத் தரித்தாள். **(ஆங்கு அன்ன அருந்தவம்)** அப்படிப்பட்டதென்று சொல்லுவதைத்தவிர வேறு சொல்லக்கூடியது ஒன்றுமில்லை. அப்படியும் த்ருப்தி பிறவாமையால் அருந்தவம் என்கிறாள். இத்தவத்தின் தன்மை சொல்ல ஆரம்பித்தால் வாய் வெந்து விடும். நினைத்தால் நெஞ்சு எரியும். **(தவத்தினூடு போய்)** நடுவே நாயகனைப் பெற்று தவத்தை நிறுத்த முடிந்ததோ? தவத்தை முழுவதுமாக நடத்தினாள். இவள் இத்தனை பாடுபட அவன் இருந்த நிலை சொல்லுகிறார் மேலே.

**(ஆயிரந்தோள்)** இவள் படப்பட அவன் பெருகி வளர்ந்தான். **नैव दंशान् न मशकान् न कीटान् न सरीसृपान् । राघवोऽपनयेत् गात्रात्त्वद्गतेनान्तरात्मना ॥** (ஸீதையினிடம் நெஞ்சு செலுத்தியிருக்கையாலே ராமபிரான்

பை-6

ஈக்களையும், கொசுக்களையும், புழுக்களையும் பாம்புகளையுங்கூடத் தன் திருமேனியிலிருந்து அகற்றுவதில்லை. ரா.ஸ.36–42) என்றபடி அவனைப் போன்றவனல்லன்.

**(மன்னு கரதலங்கள் மட்டித்து)** இவன் ஆடுகிறபோது கைகள் ஆயிரமும் சென்று திக்குகளிலே மோதின. **(மாதிரங்கள் மின்னி எரிவீச)** திக்குகள் எங்கும் தீப்பொறியும் புகையும் எழுந்து நெருப்பை வெளிவிடுகின்றன. **(மேலெடுத்த சூழ்கழல்கால்)** மேலே தூக்கப்பட்டதும் வீரக்கழலால் சூழப்பட்டதுமான கால். நாயகி தன்னைப் பிரிந்து நோவுபட காலிலிருந்து தலைவரை ஆபரணமணிந்து ஆனந்தக் கூத்தாடுகிறபடி. சூழ்கழற்கால் – உலகெங்கும் சுற்றி வரும் கால் என்னவுமாம். **(பொன்னுலகம் ஏழும் கடந்து)** த்ரிவிக்ரமன் திருவுலகளந்தருளிய தேசமனைத்தும் கடந்து. **(உம்பர்மேல் சிலும்ப)** உம்பர் – தேவருலகம். ஓரிடத்தில் நில்லாமல் தேவருலகில் இங்குமங்கும் சுழன்று ஆடிவருகை. 'மேலுள்ள தேவஜாதி என்னாய் விளைகிறதோ என்று அஞ்சுகிறபடி' என்பது நாயனார் உரை. **(மன்னுகுலவரையும்)** பூமிக்கு ஆணியடித்தாற் போலுள்ள குலபர்வதங்களும். **(மாருதமும்)** சுழல்காற்றும். **(தாரகையும்)** அளவிறந்த நக்ஷத்ரகணங்களும். **(தன்னினுடனே சுழலச் சுழன்றாடும்)** தானாடும் போது மேலே தரித்துள்ள புன்னைப் பூமாலை சுழன்று வருவது போல் இவையும் சுழன்று வரும்படி கூத்தாடுகிறபடி. **(கொல் நவிலும்)** கொலையைச் சொல்லும். ஸம்ஹார கர்த்தாவான அவனுக்கும் ஸம்ஹாரத்தையே எப்பொழுதும் உபதேஶித்து வரும் ஆயுதம். 'அருளார் திருச்சக்கரம்'(திருவிருத். 33) 'அறமுயலாழி' (திருவாய். 2–10–5) என்று சொல்லப்பட்ட திருவாழி போன்றதன்று. ஆசைப்பட்டவர்களும் இதைக் கண்டால் பயத்தாலே வயிறு பிடிக்க வேண்டியிருக்கும். **(மூவிலை வேல்)** விரூபாக்ஷன்

எனப்பட்டவனுக்குக் கண்மூன்றானாப் போலே இதுவும் விரூபமாயிருக்கும். **(கூத்தன்)** 'தூய நடம்பயிலும் சுந்தர என் சிறுவா' (பெரியாழ்.திரு. 1–6–6) அன்று. பேய்க்கூத்தாடுபவன். **(பொடியாடி)** அவனைப் பெற்றுத்தான் இவள் அடையப் போகும் போகம் இருந்தபடி காணீர். சாம்பலைச் சந்தனமாகப் பூசி இருக்கிறபடி. இதை அடையவன்றோ இப்பாடுபட்டாள். **(அன்னவன்)** அப்படிப் பட்டவன். சுடலைச்சாம்பல் மட்டுமின்றி இது போன்ற ஊமத்தை, எருக்கு, எலும்பு, புலித்தோல் போன்றவை இவனுக்கு அலங்காரங்கள். அவற்றைத் தன் வாயால் சொல்லமாட்டாமல், காணவும் மாட்டாமல் முகத்தைத் திருப்பிக் கொண்டு அன்னவன் என்கிறாள். **(தன் பொன்னகலம்)** இவற்றையுடைய அவன் மார்பையே போக்யமாக எண்ணி இருக்கிறாள் ஸதியாகையாலே. **(சென்றாங்கு அணைந்திலளே)** இவ்வளவு தவம் செய்தும் வந்தானோ. ஒருதலைக்காமமாய் தானே சென்று அவனை அடையப் பெற்றாள். ஓர் அஞ்ஜலி செய்தவுடன் நீர்ப்பண்டமாயுருகி மேல் விழும் அகார வாச்யனல்லவே அவன். அவனையடைய அவள் அப்பாடுபட்டாள் எனில் இவனையடைய நான் மடலெடுப்பதில் என்ன ஆஶ்சர்யம்!

**பன்னியுரைக்குங்கால் பாரதமாம் பாவியேற்கு என்னுறு நோய் யானுரைப்பக் கேண்மின்**

**(பன்னியுரைக்குங்கால் பாரதமாம்)** இப்பரப்பு என்னால் பேசிமுடியாது. வ்யாஸர் முதலானவரே சொல்லவேண்டும். அவர்கள் சொன்னாலும் சுருங்கச் சொல்லமுடியாது. பாரதமாய் விரியும். **(பாவியேற்கு)** வ்யாஸர் முதலானவர்களைப் போலே விரிவாகச் சொல்லவும் ஶக்தியில்லாத மஹாபாவியான எனக்கு. **(என்னுறு நோய் யானுரைப்பக் கேண்மின்)** சொல்ல முடியாதென்பது ஒரு பக்கம் இருக்கட்டும். அவர்கள் பட்ட கஷ்டத்தை விரிவாகச் சொல்ல வேண்டிய அவஶ்யம் எனக்கில்லை. நான்படும் கஷ்டங்களைச்

சொன்னாலே அவை எல்லாவற்றையும் சொன்னதாக ஆகும். அவர்கள் பட்டது எனக்கு பரோக்ஷமாகக் கேட்டுத் தெரிந்தது. அது கிடக்கட்டும். ப்ரத்யக்ஷமாக நான்படுவதைத் கேளுங்கள். என் உறுநோய் – என்னை நன்கு உற்றடைந்த நோய். என்னை ஊடுருவி நிற்கும் நோய். 'சீராயின தெய்வ நன்னோய்' (திருவிருத். 53) என்றாற்போல எனக்கு உறுதுணையாய் உத்தேச்யமாயிருக்கும் நோய். யானுரைப்பக் கேண்மின் – நோய் கொண்ட நானே சொல்லுகிறேன். கேளுங்கள். மற்றவர்களால் சொல்ல இயலாது. ஆகையால் நானே சொல்லுகிறேன். தயவு செய்து கேளுங்கள். என் உயிர் தரிப்பதற்காகவாவது கேளுங்கள். பூரோத்பீடே தடாகஸ்ய பரீவாஹ: ப்ரதிக்ரியா। ஶோகக்ஷோபே ச ஹ்ருதயம் ப்ரலாபைரேவ தார்யதே ॥ (குளம் நீர்நிரம்பினால் வடிகாலை வெட்டிவிடுவதே கரைஉடையாமல் தடுக்கவழியாகும். அவ்வண்ணமே துன்பத்தால் கலங்கினபோது வாய்விட்டு அழுவதாலேயே நெஞ்சு தரித்து நிற்கிறது – உத்தாராம சரிதம்) கேண்மின் – செவி படைத்த பயன்பெறக் கேளுங்கள்.

**இரும்பொழில்சூழ் மன்னு மறையோர் திருநறையூர் மாமலை போல் பொன்னியலும் மாடக்கவாடம் கடந்துபுக்கு என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்**

**(இரும்பொழில் சூழ்)** விசாலமான சிறந்த சோலைகளாலே சூழப்பட்ட திருநறையூர். என்னைப் போல பிரிந்து வருந்துபவர்களுக்கு மடலெடுக்கலாம்படி பனை மரங்கள் சூழ்ந்த பொழில்கள். **(மறையோர் மன்னும் திருநறையூர்)** மடலெடுக்கை சாஸ்த்ரார்த்தம் என்று உபபாதிக்குமவர்கள் மன்னும் தேசம். **(மாமலைபோல் மாடம்)** பெரிய மலைபோல் உயர்ந்துள்ள கோயில். பக்தியின் உயர்த்தியால் மாமலையாய்த் தோற்றுகிறது. **(பொன்னியலும் மாடம்)** பொன் போலே சிறந்தது. ஆசைப்படத்தக்கது. **(கவாடம் கடந்து புக்கு)** கதவை ஒருவாறு

தாண்டி உள்புகுந்து கடந்து – சிரமப்பட்டுத் தாண்டி கதவின் அழகு வழிபறிப்பாரைப் போலே கண்களைக் கொள்ளை கொள்ளுகையாலே அதைத் தாண்டிப் போவது ச்ரமம். **(கடந்து புக்கு நோக்கினேன்)** அவனைக் காண்பதற்கு முன்னமே கடந்து புகுந்தேன். அவ்வாறின்றி முதலிலே அவனைக் கண்டிருந்தால் 'காலாழும் நெஞ்சழியும் கண்சுழலும்' (பெரியதிருவந். 34) என்றபடி பலக்குறைவு ஏற்பட்டிருக்கும். கடப்பதும் புகுவதும் இயலாததாகிவிடும். **(என்னுடைய கண்களிப்ப நோக்கினேன்)** என்னுடைய படபாமுகாக்நி குளிர. அவனைப் பெறாமையாலே வருந்தி கடல் நீரையும் வற்றச்செய்யும் படபாமுகாக்நி போலே என் கண்ணீரையும் வற்றடித்துக் கொண்டு எரியும் கண்கள் குளிரும்படி. களிப்ப – 'கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே' (பெரியதிரு. 7–10–9) என்னும்படி நெடுங்காலம் பட்டினி கிடந்த கண்களின் வயிறு நிரம்பும்படி நோக்கினேன்.

> **நோக்குதலும் மன்னன் திருமார்பும் வாயும் அடியிணையும்**
> **பன்னுகரதலமும் கண்களும் பங்கயத்தின் பொன்னியல்**
> **காடோர் மணிவரைமேல் பூத்தது போல் மின்னியொளி**
> **படைப்ப வீழ்நாணும் தோள்வளையும் மன்னிய குண்டலமும்**
> **ஆரமும் நீண்முடியும் துன்னுவெயில் விரித்த**
> **சூளாமணியிமைப்ப மன்னு மரதகக்குன்றின் மருங்கே ஓர்**
> **இன்னிள வஞ்சிக் கொடியொன்று நின்றதுதான்**

**(நோக்குதலும் மன்னன்)** நான் கண்டவுடன் எனக்கு மன்னனானான். என்னையடிமை ஓலை எழுதிக்கொண்டான். வாளும் கேடயமும் கொண்டு கொள்ளையடிக்கும் திருமங்கை மன்னனான என்னை, அந்நிலை கழிந்து பரகால நாயகியாக மடலெடுக்கப் பண்ணினான். **राजाधिराजः सर्वेषां** (அனைவர்க்கும் அரசனாயிருப்பவன். பார.ஆச்வ) என்றபடி பார்த்தபோதே

ஸர்வலோகேஶ்வரன் என்று தோன்றும்படி இருக்கை. **(மன்னன் திருமார்பும்)** புருஷகாரபூதையான பிராட்டி இருக்குமிடம் ஆகையாலே இவளுக்கும் பற்றுமிடம். ஆகையால் முதலில் முகம் காணாமல் மார்பைக் காண்கிறாள். வெட்கத்தாலே தலைகுனிய முகத்தைப் பார்க்கவில்லை. अपांगो भूयांसो यदुपरि परं ब्रह्म तदभूत् (பிராட்டியின் திருக்கடைக்கண் நோக்குகள் அதிகமாக விழுந்தவிடம் பரம்பொருளாயிற்று. ஸ்ரீகுணரத்நகோஶம்–30) அவள் ஸம்பந்தத்தால் அவன் மன்னனானான். **(வாயும்)** மார்பிலுள்ள பிராட்டிபக்கல் அன்பினால் அவளைப் பார்த்து முறுவல் செய்து கொண்டிருப்பன். அவ்வழியாலே மார்பிலிருந்து வாயைக் காண்கிறாள். வாய் என்பது முறுவலைச் சொல்லுகிறது. அவளை முன்னிட்டு ஶரணடைந்தவர்களை मा शुच: (வருந்தாதே. கீதை 18–66) என்று சொல்லுவதாகையாலே வாயைச் சொல்லுகிறார். **(அடியிணையும்)** இவற்றுக்கெல்லாம் தோற்றுவிழும் திருவடி. **(பன்னுகரதலமும்)** திருவடிகளில் விழுந்தாரை எடுத்து அணைக்கும் கையாகையாலே அடியார்கள் வாய் வெருவும் கை. அல்லது இவளை அணைக்கையாலே ஒன்று பத்து நூறாயிரமாகப் பணைத்த கைகள். 'தோள்களாயிரத்தாய்' (திருவாய். 8–1–10) என்றபடியே. **(கண்களும்)** அணைப்பில் ஈடுபட்டவர்களைக் குளிர நோக்கும் கண்கள். உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண்தாமரைக்கண்ணன். கைநீண்டுவந்து தொட வேண்டும். இது இருந்தவிடத்திலிருந்தே ஸ்பர்ஸிக்கும். ஒருகால் நோக்கினால் ஆலங்கட்டி எறிந்தார்போல ஆளை வீழ்த்தும்படி இருக்கும். **(பங்கயத்தின் பொன்னியல் காடோர் மணிவரைமேல் பூத்தது போல்)** பொற்றாமரைக்காடு நீலமலையிலே எங்கும் பூத்தது போல் திருமேனியிலுள்ள திருமார்பு, திருவாய், திருவடி, திருக்கை, திருக்கண்களுள்ளன. அல்லது மேலே சொல்லப் போகும் ஆபரணச்சேர்த்தி. **(மின்னியொளி படைப்ப)** பளபளக்க. 'மின் செய்பூண் மார்வினன்' (திருவாய். 4–2–10) என்றபடி மின்னல் ஒளியே திருவாபரணமாயிற்றோ என்னும்படி.

**(வீழ்நாணும்)** விரும்பத்தக்க திருவரை நாணும். ஹிரண்யப்ராகாரா (பொன்மதில்) எனப்பட்ட பிராட்டிக்கு பொன்மதில் போலே இருக்கிறது. பகவானுடைய அழகுக்கடல் அலையெறிவது போல இருக்கை. **(தோள்வளையும்)** திருவடிக்கு வீரக்கழல் போல, தோளழகைக்கண்டு த்ருஷ்டி படாதபடி மறைக்க தோள்வளை. **(மன்னிய குண்டலமும்)** இயற்கையாகவே பூத்தாற்போன்ற மகரகுண்டலங்களும். **(ஆரமும்)** மார்பில் ஆரமும். **(நீண்முடியும்)** திருநறையூருக்குச் சூட்டின முடி உபய விபூதிக்கும் சூட்டிய நீண்முடியாயிற்று. 'விண்முதல் நாயகன் நீண்முடி' (திருவிருத். 50) என்றபடி. **(துன்னுவெயில் விரித்த சூளாமணி இமைப்ப)** துன்னுகை – விஞ்சியிருத்தல். சூளாமணியின் ஒளி எல்லாவற்றையும் விஞ்சி இருக்கிறது. த்ருஷ்டி படாமல் இளவெயில் போல் மறைக்கிறது. **(மன்னு மரதகக்குன்றின் மருங்கே)** தன்னைப் பற்றி நின்று உலகெல்லாம் நிலைநிற்கும் நீலமலையான எம்பெருமானுடைய அருகிலே. நேருக்குநேர் நோக்கமாட்டாமையாலும் நோக்காவிடில் தரிக்கமாட்டாமையாலும், கடைக்கண்ணால் நோக்கும்படி அருகே நிற்கிறாள். **(ஓர் இன்னிள வஞ்சிக் கொடியொன்று நின்றது தான்)** ஒப்பற்றதாய், இனியதாய், இளையதாயிருக்கிற ஓர் வஞ்சிக்கொடி நின்றது. பெண்கொடி என்றது, அல்லாத பெண்களை पुंस्त्वगंधि (ஆண்வாடை வீசுமவர்கள்) என்னும்படியான ஸ்த்ரீத்வம். साक्षात् मन्मथ मन्मथः (பகவான் அழகில் மன்மதனுக்கும் மன்மதனாயிருப்பவன். பாகவ. 10–32–2) என்ற அவனைப் போலே नारीणां उत्तमा वधू (பெண்களுக்குள் உயர்ந்தவள்) வாயிருக்கை. இப்படிப்பட்ட உபமானம் ஒன்றில்லாமையாலே உருவகமாகவே சொல்லுகிறார். ரூபகாதிஶயோக்தி (ரூபக அதிஶய உக்தி) என்பர்.

**அன்னமாய் மானாய் அணி மயிலாய் ஆங்கிடையே**
**மின்னாயிளவே யிரண்டாயிணைச் செப்பாய் முன்னாய**
**தொண்டையாய்க் கெண்டைக் குலமிரண்டாய்**

அன்னதிருவுருவம் நின்றதறியாதே என்னுடைய நெஞ்சும் அறிவும் இனவளையும் பொன்னியலும் மேகலையும் ஆங்கொழியப் போந்தேற்கு

இன்னிளவஞ்சிக்கொடி என்று ஸமுதாய ஶோபையைச் சொல்லி அவயவஶோபையைப் பேசுகிறார். **(அன்னமாய்)** நடையழகு. **(மானாய்)** நோக்கு. **(அணிமயிலாய்)** கேஶம். **(ஆங்கு இடையே மின்னாய்)** மேகத்தினிடையே மின்னல் போலே கேஶபாரத்தினிடையே இடை. மேலும் கீழும் இருக்கையாலே அனுமானத்தாலே அறியுமித்தனை. (ப்ரத்யக்ஷமாகக் காணமுடியாத ஸந்தேஹஸ்தானம்). **(இளவேயிரண்டாய்)** இளமூங்கில்கள் இரண்டாய், உருண்டு நீண்டு நேராய்ப் பசுமையாயிருத்தலால். **(இணைச் செப்பாய்)** மார்பகங்கள் ஒன்றுக்கு மற்றொன்றே உபமானமாயிருக்கும்படி நாயக ரத்னத்தைப் பாதுகாத்து வைக்கும் செப்பு. 'மலராள் தனத்துள்ளான்' (மூன்றாந்திரு. 3), 'சங்குதங்கு முன்கை நங்கை கொங்கை தங்க' (திருச்சந்த விரு.57), **श्रीस्तनाभरणं तेज:** (ரங்க.ஸ்த–8) என்றிறே. **(முன்னாய தொண்டையாய்)** அழகுப் போட்டியில் முன்னிற்கும் செங்கனிவாயழகு. **(கெண்டைக்குல மிரண்டாய்)** மௌக்த்யத்தாலும் மதமதப்பாலும் இரண்டு கெண்டை மீன்கள் போலே இருக்கும் திருக்கண்கள். **(அன்ன)** அப்படிப்பட்டதென்று சொல்லலாமேயொழிய அந்த அழகுக்கு வாசக ஶப்தமில்லை. **(திருவுருவம் நின்றதறியாதே)** அளவிடவொண்ணாத அத்திருவுருவம் அருகே நின்றதை அறியாமல். 'இன்னிளவஞ்சிக் கொடி' என்று பேசியிருக்கும் போது 'அறியாதே' என்று சொல்லலாமோவெனில், பெரியபெரிய உவமைகள் சிலவற்றைப் பேசி முழுதும் பேசமுடியாமையாலே சொல்லுகிறார். இருவரையும் பிரித்துத் தனித்தனியே பேசினாலும் ஒருவாறு பேசலாம். சேர்ந்திருக்கும் போது பேசவே முடியாது. கண்ணுக்கும் மனதுக்கும் அளக்கமுடியாத விஷயம். பார்த்தவரை ஆனந்தக்கடலில் மூழ்கி

அறிவிழக்கச் செய்யும் விஷயம். ஆகையாலே அறியாதே என்றார். அல்லது தேடிவரும்போது இப்பிராட்டி அருகிலிருப்பாள் என்பதை அறியாதே வந்துவிட்டேன். தெரிந்திருந்தால் விலகி நின்று இவ்வழகுக்கடலில் அகப்படாமல் தப்பியிருக்கலாம்.

கண்டதனால் தான் பறிகொடுத்தவை எவை என்று சொல்லுகிறார்.

**(என்னுடைய நெஞ்சும்)** ஒன்றுக்கும் அழியாத என் நெஞ்சும் அழிந்தது. **(நெஞ்சும் அறிவும்)** நெஞ்சு அறிவை இட்டுவைக்கும் செப்பு. செப்போடே தனத்தை இழந்தேன். **(இனவளையும்)** ஆபரணமான வளையும். **(பொன்னியலும் மேகலையும்)** சிறந்த ஒட்டியாணமும். **(ஆங்கொழியப் போந்தேற்கு)** வெறுந்தரையானேன். நெஞ்சும் அறிவும் ஒழிய, கண்ணிழந்தேன். இனவளையும் மேகலையும் ஒழிய, தனமிழந்தேன். வாழலாம் என்று போன விடத்திலே உள்ளதையும் இழந்தாரைப் போலே அனைத்தையும் இழந்து அழகுக்கடலில் துரும்பு போல அலைப்புண்டு மடலெடுக்கப் புறப்பட்டேன்.

**மன்னும் மறிகடலும் ஆர்க்கும் மதியுகுத்த இன்னிலா இன் கதிரும் என் தனக்கே வெய்தாகும் தன்னுடைய தன்மை தவிரத்தானென் கொலோ தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து மன்னிவ்வுலகை மணங்களிப்ப வந்தியங்கும் இன்னிளம் பூந் தென்றலும் வீசுமெரியெனக்கே முன்னிய பெண்ணைமேல் முள் முளரிக்கூட்டகத்து பின்னும் அவ்வன்றில் பேடைவாய்ச் சிறுகுரலும் என்னுடைய நெஞ்சுக்கு ஓரீர்வாளா மென் செய்கேன்**

**(மன்னும் மறிகடலும் ஆர்க்கும்)** மன்னும் – முன்பெல்லாம் அசையாதிருந்த கடல் இப்போது 'அறையோ' என ஈப்திக்கிறது. நொந்தவர்களைக் கண்டால் ஐயோ என இரங்கவேண்டியிருக்க

ராஜத்ரோஹிகளைக் கண்டாற்போல அறைகூவி அழைக்கிறது. **(மதியுகுத்த இன்னிலா இன் கதிரும் என் தனக்கே வெய்தாகும்)** சந்த்ரன் வெளிவிட்ட இனிய நிலவின் இனிய ஒளியும் என்னைச்சுடும். உலகிலுள்ளார் அனைவருக்கும் இனிதாயிருக்கும் நிலா எனக்கு மட்டும் சுடுகின்றது. மதி என்று சந்த்ரனையும், நிலா என்று கிரணத்தையும் சொன்ன பிறகு கதிர் என்பது ஒளியைச் சொல்லுகிறது என்று கொள்ள வேண்டும். 'இந்நிலா' என்று பாடங்கொண்ட நாயனார் இந்த நிலாவென்று ப்ரத்யக்ஷமாகவுமாம் என்று விவரித்தார். **(தன்னுடைய தன்மை தவிரத்தானென் கொலோ)** **शीतो भव हनूमतः** (ஹநுமனுக்குக் குளிர்ந்தவனாவாய். ரா.ஸு.53-29) என்று சுடும் அக்நியைக் குளிர்ந்திருக்கும்படி பிராட்டி ஸங்கல்பித்தது போல சந்த்ரனைச் சுடும்படி ஸங்கல்பித்தவர் உண்டோ. முன்னே சொன்ன கடலையும் மேலே கூறப் போகும் தென்றல் முதலானவற்றையும் தத்தம் தன்மை மாறும்படி ஸங்கல்பித்தாருண்டோ என்று சொல்வதாகவும் கொள்ளலாம். **(தென்னன் பொதியில் செழுஞ்சந்தின் தாதளைந்து மன்னிவ்வுலகை மனங்களிப்ப வந்தியங்கும் இன்னிளம் பூந் தென்றலும் வீசுமெரியெனக்கே)** தென்னன் பொதியில் – பாண்டியனுடைய பொதிகைமலை, மலய பர்வதம். செழுஞ்சந்தின தாதளைந்து – அதிலே பயிராகும் அழகிய சந்தன மரங்களின் தாதுக்களை அளைந்து கொண்டு வந்து. மன்னிவ்வுலகம் – ப்ரவாஹரூபேண நித்யமாயிருக்கும் இவ்வுலகம். மனம் களிப்ப வந்தியங்கும் – மனம் களிக்கும்படி உலாவுகின்ற. இன்னிளம் பூந்தென்றல் – இனிய இளைய மணம் மிக்க தென்றலும். எனக்கே எரிவீசும் – என் ஒருத்திக்கே நெருப்பை வீசா நின்றது. 'மன்னியிவ்வுலகம்' என்பது இடைக்குறையாயிருப்பதாகக் கொண்டு 'லோகத்தை வாழ்விக்கை நித்யமானாற்போலே, என்னைச்சுடுகை நித்யமாயிற்று' என்பது ஆச்சான்பிள்ளையின்

விவரணம். வீசும் எரி – என்னுடைய விரஹாக்நி தன் மேல் படாமல் தூர நின்று என் மீது நெருப்பை வீசா நின்றது. **(முன்னிய பெண்ணைமேல் முள் முளரிக்கூட்டகத்து பின்னும் அவ்வன்றில் பேடைவாய்ச் சிறுகுரலும் என்னுடைய நெஞ்சுக்கு ஓரீர்வாளா மென் செய்கேன்)** முன்னிய பெண்ணை மேல் – முன்னே நிற்கும் பனைமரத்தின் மேல். முள் முளரிக் கூட்டகத்து – முள்ளையுடைய தாமரைத் தண்டாலே செய்த கூட்டினுள். முள்ளையுடைய கூட்டினில் இருப்பதாலே பிறரைத் துன்புறுத்தும் ஸ்வபாவம் வந்ததோ என்று தாத்பர்யம். பின்னும் – ஆண்பறவையும் பேடையும் ஒன்றுக்கொன்று வாயலகு பின்னிக் கொண்டிருப்பதைச் சொல்வது. அவைகளுடைய கலவியின்பம் இவளுடைய துன்பத்தை வளர்க்கிறது. அவ்வன்றில் பேடைவாய்ச் சிறு குரலும் – கலவியின்பத்தாலே ஆனந்தம் மிக வெளிவரும் சிறுகுரலும். என்னுடைய – முன்பே அழிந்து கிடக்கும் என்னுடைய. நெஞ்சுக்கு ஓர் ஈர்வாளாம் – முன் சொன்னவையெல்லாம் உடலை வருத்தின. இது நெஞ்சையே வாள் கொண்டு அறுப்பது போல் இருக்கிறது. 'நெஞ்சுக்குப் புறம்பு நலிகை தவிர்ந்து நெஞ்சை ஈரா நின்றது.' என் செய்கேன் – தப்பிப் பிழைக்க என்ன உபாயம் செய்வேன்.

> **கல் நவில் தோள் காமன் கருப்புச்சிலை வளைய கொல் நவிலும் பூங்கணைகள் கோத்துப் பொத வணைந்து தன்னுடைய தோள்கழிய வாங்கி தமியேன் மேல் என்னுடைய நெஞ்சேயிலக்காக எய்கின்றான் பின்னிதனைக் காப்பீர் தாமில்லையே**

**(கல்நவில் தோள் காமன்)** 'பெண்களை நலிய நலியப் பூண்கட்டும் தோள்'. பெண்களைத் துன்புறுத்தத் துன்புறுத்தக் கல்லைப் போல் உறுதியடையும் தோள்களையுடைய காமன். **(கருப்புச் சிலை வளைய)** கரும்பாய் இனித்தாலும் கடுமையிலே குறையில்லை. **(கொன்னவிலும் பூங்கணைகள் கோத்து)** பூங்கணைகளாயினும்

கொலை செய்வதில் தவறாது. **(பொத அணைந்து)** அம்பு ஊடுருவிச் செல்லும்படி அருகே நின்று. **(தன்னுடைய தோள் கழிய வாங்கி)** அம்பு எய்யும் போது மார்பை மிகவும் வளைக்கையால் இவனுடைய தோள் மிகவும் விலகிப்போகிறது. அல்லது நாணைத் தோள்வரையிலிழுப்பதைச் சொல்லுவதாகவுமாம். **(தமியேன் மேல்)** துணையற்ற என்மீது. 'இவனம்புக்கு இலக்கான மூலபலம் இருந்தபடி காணீர். அபலையை வருத்தும் வீரன்கிடீர்'. **(என்னுடைய நெஞ்சேயிலக்காக)** தனிவீரனான ராமனையும் விஞ்சி விடுகிறான் இவன். உருவமுள்ளவற்றையே அவன் குறிதவறாமல் அடிப்பான். இவன் உருவற்ற என் நெஞ்சையே குறிதப்புவதில்லை. **(எய்கின்றான்)** நிகழ்காலம். எய்து கொண்டே இருக்கிறான் என்ற பொருள் தருகிறது. ஓயவில்லை. மூல பலத்தைக் கண்ட வாறே வீரங்காட்டின ராமனை शरवर्षं ववर्ष ह (ஶரமழை பொழிந்தான். ரா.யு.94–18) என்றார் வால்மீகி. இவனும் தமியேன் நெஞ்சாகிற மூலபலத்தைக் கண்டவாறே வீரம் காட்டுகிறான். என்னுடைய நெஞ்சே இலக்காக எய்கின்றான். இவ்வம்புகளில் ஒன்றாகிலும் அவன் நெஞ்சில் பட்டிருந்தால் அவனுக்கு இவ்வருத்தம் தெரியும். அவ்வாறு இல்லாமையால் இக்கொடுந்தொழில் புரிகிறான்.

**(பின்னிதனைக் காப்பீர்தாமில்லையே)** பிராட்டியைக் காணாத கோபத்தில் जगत् सशैलं परिवर्तयाम्यहं (மலைகளோடு கூடிய உலகையே தலைகீழாக்கிவிடுவேன். ரா.ஆ.64–78) என்றான் ராமன். இளைய பெருமாள் ராமனுக்கு ஆறுதல் சொல்லி அவ்வாறு செய்யாமல் தடுத்தார். ராமனுக்கு ஒரு தம்பி பக்கத்திலிருந்து வில்லாலே எய்வதைத் தடுத்தது போலே இந்த காமனுக்கு ஒரு தம்பி இல்லையே என்கிறாள். 'பெருமாள் கையில் வில்லை வாங்கினாற்போலே காமன் கையில் வில்லை வாங்குவான் ஒரு தம்பி இல்லையே. கடகிட்டுக் காப்பாரில்லையே என்று'. என்பது ஆச்சான் பிள்ளையின் ஸ்ரீ ஸூக்தி. கடகிட்டு – புருஷகாரம் செய்து.

பேதையேன் கன்னவிலும் காட்டகத்தோர் வல்லிக்கடிமலரின் நன்னறு வாசம் மற்று ஆரானும்எய்தாமே மன்னும் வறுநிலத்து வாளாங்கு உகுத்தது போல் என்னுடைய பெண்மையும் என் நலனுமென் முலையும் மன்னு மலர்மங்கை மைந்தன் கணபுரத்துப் பொன்மலைபோல் நின்றவன் தன் பொன்னகலம் தோயாவேல் என்னிவைதான் வாளா வெனக்கே பொறையாகி முன்னிருந்து மூக்கின்று மூவாமைக் காப்பதோர் மன்னு மருந்தறிவீரில்லையே

**(பேதையேன்)** இவ்வாபத்துக் கென்றே இட்டுப் பிறந்த அபலை. காணலாமோ என்ற சாபல்யத்தை உடைய நான். **(கன்னவிலும் காட்டகத்து)** கற்கள் நெருங்கின காட்டினுள்ளே. **(ஓர் வல்லி)** ஒப்பற்ற கொடி. **(கடிமலரின்)** அக்கொடியிலே மதுமிக்க ஒருமலர். **(நன்னறு வாசம்)** அம்மலரின் மிகச் சிறந்த மணம். **(மற்று ஆரானும் எய்தாமே)** தனக்காக அல்லாமல் பிறர்க்காகவே ஏற்பட்ட இந்த மணத்தைப் பெறவேண்டியவர்கள் பெறாமல். **(மன்னும் வறுநிலத்து வாளா ஆங்கு உகுத்தது போல்)** வெறுந்தரையில் வீணாக விழுந்தது போல்.

கல்நவிலும்காடு என்றது ஸம்ஸாரமாகிற துன்பம் நிறைந்த காட்டை. அதிலே ஒப்பற்ற கொடி ஜீவன். அவனுடைய ஞானமே மதுமிக்க மலர். அந்த ஞானத்திலே பிறந்த பக்தி முதலியவை அதன் சிறந்த மணம். அந்த பக்தி முதலியவை ஸர்வேஶ்வரன் விஷயமாக ஆகாமல் போவதை மற்றாரானும் எய்தாமே என்றார். பரமபுருஷனுக்கு உரிய பக்தி முதலானவற்றை க்ஷுத்ரர்களுக்கு உரியதாக்குவதை வறுநிலத்து வாளாங்குகுத்தது போல் என்றார்.

**(என்னுடைய பெண்மையும் என் நலனும் என் முலையும்)** பெண்மை – ஸ்வரூபமான பாரதந்த்ரியம். நலன் – விஶேஷணமான ஆத்மகுணங்கள். முலை – போக்யமான பக்தி. **(மன்னு மலர்மங்கை**

**மைந்தன்)** மலர்மங்கை மன்னும் மைந்தன். பிராட்டி நித்யவாஸம் செய்யும் நித்யயுவா. **युवाऽकुमारः, युवा सुवासाः** என்று சொல்லுகிறபடியே பிராட்டி வாஸம் பண்ணுகையாலே என்றும் யுவாவாயிருப்பவன். **(கணபுரத்துப் பொன்மலை போல் நின்றவன்)** திருக்கண்ணபுரத்திலே மேருமலை போல சிறந்த வடிவோடு நிலையாக நின்றவன். கணபுரத்து – மேருவைப் போல செல்ல அரிதானதில்லை. எல்லார் கண்ணுக்கும் இலக்காகி நிற்கும் மலை. **(தன் பொன் அகலம்)** பிராட்டியும் ஆசைப்பட்டு இதையே நினைத்திருக்கும்படியான மார்பு. **(தோயாவேல்)** ஏல், வருத்தத்தைக் குறிக்கும் அசை. தோயவில்லையே. அல்லது தோயாவிடில் எனக்கு என்னபயன் என்று மேலோடு கூட்டியும் பொருள் கொள்ளலாம். தோய்தல் என்பது முழுகுதல் என்ற பொருளையுடையது. எம்பெருமானை 'மரகத மணித் தடம்' என்றும் 'வாசத்தடம்' என்றும் நம்மாழ்வார் சொன்னார். **एष ब्रह्म प्रविष्टोऽस्मि ग्रीष्मे शीतमिव ह्रदं** (பாரதம், மோக்ஷ தர்மம்– 4–50) என்று அவனைக் குளிர்ந்த மடுவுக்கு ஒப்பாகச் சொல்லியது. ஆகையால் அவனுடைய மார்பாகிற குளிர்ந்த மடுவில் என்னுடைய விரஹதாபமெல்லாம் போகும்படி மூழ்கவில்லையே என்று வருந்துகிறாள். அவனும் இவள் தோளாகிற தடாகத்தில் தோய்வன் என்கிறார் கலியன். 'வில்லிறுத்து மெல்லியல்தோள் தோய்ந்தாய்' (திருநெடுந்தாண். 13)

**(என்னிவைதான் வாளா)** வீணான இந்த வஸ்துக்கள் எதற்கு. பிராட்டியைப் பிரிந்த நிலையில் பெருமாள் **पश्य लक्ष्मण पुष्पाणि निष्फलानि भवन्ति मे** (லக்ஷ்மணா! எனக்குப் பயனற்றுப் போகும் பூக்களைப்பார். ரா.கி.1–44) என்றார். பிராட்டி அநுபவிக்காத பூக்களால் தனக்குப் பயனில்லை என்றார். அதுபோல எம்பெருமான் அநுபவிக்காத என் பெண்மையும் என் நலனும் என் முலையும் எனக்கு என்ன பயன் என்கிறாள். **(எனக்கே பொறையாகி)** என் ஒருத்திக்கே வீண்

பாரமாகி. ஆண்டாளும் 'கொள்ளும் பயனொன்றில்லாத கொங்கை தன்னைக் கிழங்கோடும் அள்ளிப் பறித்திட்டு அவன் மார்வில் எறிந்து என் அழலை தீர்வேனே' (நாச். திரு. 13–8) என்றாள். **(முன்னிருந்து மூக்கின்று)** கண்காண மூப்பையடைகின்றது. ராமனும் **न मे दुःखं प्रिया दूरे न मे दुःखं हतेति वा । एतदेवानुशोचामि वयोऽस्या ह्यतिवर्तते ॥** (என் கருத்துக்கினியவள் தூரத்திலிருக்கிறாளென்றோ அபஹறிக்கப்பட்டாளென்றோ நான் வருந்தவில்லை. இவள் வயது கடந்து செல்கின்றதே என்றே நான் வருந்துகிறேன். ரா.யு.5–5) என்றான். அது போலவே இவளும் சொல்லுகிறாள். மூக்கின்று என்பதற்கு வளர்கிறது என்றும் பொருள். 'உன்னித்தெழுந்த என் தடமுலைகள்'(நாச்.திரு.1–5) என்ற நாச்சியாரைப் போல. **(மூவாமை காப்பதோர் மன்னு மருந்தறிவீரில்லையே)** அப்படி மூப்படையாமல் தடுக்கக்கூடிய சிறந்த மருந்தை அறிந்தவர் இல்லையே. அதாவது அவனைக் கொண்டு தந்தால் மூப்படையாமல் காக்கலாம். மன்னுமருந்து – **भेषजं** (விஷ்ணு ஸஹஸ்ர நாமம்) என்று பெயர் பெற்றவன். **समुद्रं राघवो राजा शरणं गन्तुमर्हति** (அரசரான ராகவர் கடலரசனை ஶரணடைய வேண்டும். ரா.யு.19–31) என்று விபீஷணன் கடலை ஶரணமடையச் சொன்னது போல் மடலை ஶரணம் புகு என்று சொல்வாரில்லையே. இங்கு நாயனார் வ்யாக்யானத்தில் ஒரு ஐதிஹ்யம் கூறப்படுகிறது. ஜகத்திலே ஓராந்தராளிகளைக் கிடையாதோ என்று பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று நம்பிள்ளை அருளிச்செய்தார் என்பது. நாயக நாயகிகள் இடையே ஏற்படும் ஊடலைத் தீர்த்து வைப்பவர் ஆந்தராளிகர்.

**மால்விடையின் துன்னுபிடரெருத்துத் தூக்குண்டு வன்**
**தொடரால் கன்னியர் கண் மிளிரக் கட்டுண்டு மாலைவாய்த்**
**தன்னுடைய நாவொழியா தாடும் தனி மணியின்**
**இன்னிசையோசையும் வந்தென் செவிதனக்கே**

**கொல்நவிலும் எஃகின் கொடிதாய் நெடிதாகும்**
**என்னிதனைக் காக்குமா ? சொல்லீர்**

மேலும் நோயை வளர்க்கும் ஸம்பவங்கள் நிகழ்ந்ததைக் கூறுகிறாள். **(மால்விடையின்)** நாகின் மேல் பித்தேறின் விடையின். பசுவின் மேல் காதலால் மயங்கிய எருதினுடைய. **(துன்னுபிடர் எருத்துத்தூக்குண்டு)** நெருங்கிய கழுத்திலே உள்ள முசுப்பிலே தூக்கப்பெற்றதாய். **(வன்தொடரால்)** வலிய சங்கிலியால். **(கன்னியர் கண் மிளிரக்கட்டுண்டு)** காதல் என்பதையறியாத கன்னிப் பெண்களும் இவ்வொலியைக் கேட்டு பயந்து தூக்கத்திலிருந்து விழிக்கும்படி கட்டுண்டதாய். **(மாலைவாய்)** பசுவுக்கும் எருதுக்கும் ஊடல் தீர்ந்து கூடல் நடைபெறும் காலம். என்னோடு நாயகன் கூடவில்லையே என்று எனக்கு வருத்தத்தை விளைவிக்கும் காலம். **(தன்னுடைய நாவொழியாதாடும்)** பசு இசையாத போதும் அதன்பின் ஆசையால் எருது தொடர்ந்து ஓடுவதால் அதன் கழுத்திலே கட்டியுள்ள மணியின் நா ஓயாமல் ஆடுகிறது. அதன் கழுத்திலுள்ள மணி ஒலிக்கிறது. இது தலைவிக்குத் தலைவனின் கலவியின்பத்தை நினைவுறுத்தித் துன்பம் தருகிறது.

**(தனிமணியின்)** துன்புறுத்துவதில் தனக்கு இணை வேறு ஒன்று இல்லாத மணி. **(இன்னிசை ஓசையும்)** இனிய இசையைக் கேட்பார் உருகுவது போல என்னைஉருகவைக்கும் ஓசை. மற்றவர்களுக்கு இவ்வோசை இனிய இசையாகத் தோன்றலாம். **(வந்து என் செவி தனக்கே)** என்ஒருத்திக்கே கொடியதாய் இருக்கிறது. நெஞ்சில் படுவதற்கு முன் காதிலேயே சுட்டுக்கொண்டு வருகிறது. **(கொன்னவிலும் எஃகில் கொடிதாய்)** பார்க்கும்போதே கொலையைக் கோட்சொல்லும் ஈட்டியைக் காட்டிலும் கொடியதாய். **(நெடிதாகும்)** ஈட்டி ஒருகுத்திலே முடித்துவிடும். துன்பமும் அதோடு தொலையும். ஆனால் இதுவோ நீண்ட நேரம் சித்ரவதம் செய்கிறது.

**(இதனைக் காக்கும் ஆ என்)** இதிலிருந்து தப்பிப் பிழைக்கும் வழி என்ன. என்னிதனை – என் பெண்மையை எவ்வாறு காத்துக் கொள்வேன். **(சொல்லீர்)** நீங்களே சொல்லுங்கள். பெண்மையை ரக்ஷிக்கப் பார்த்தால் சித்ரவதம் நடக்கிறது. அதைத் தவிர்க்க வேண்டுமானால் பெண்மையை அழித்துக் கொண்டு மடலெடுக்க வேண்டும். நீங்களே சொல்லுங்கள்.

மடலெடுத்து அவனைப் பழித்துப் படாதபாடு படுத்தியாவது அவனைப் பெறாமல் இருக்கமாட்டேன் என்கிறாள்மேலே.

> **இது விளைத்த மன்னன் நறுந்துழாய் வாழ்மார்பன் மாமதி கோள் முன்னம் விடுத்த முகில்வண்ணன் காயாவின் சின்ன நறும்பூந் திகழ்வண்ணன் வண்ணம் போல் அன்ன கடலை மலையிட்டணைகட்டி மன்னனிராவணனை மாமண்டு வெஞ்சமத்து பொன்முடிகள் பத்தும் புரளச்சரம் துரந்து தென்னுலகமேற்றுவித்த சேவகனை**

**(இது விளைத்த மன்னன்)** தென்றல், அன்றில் குரலோசை, விடைமணியோசை, நிலா முதலானவற்றை அபலையான என்மேல் படையெடுத்துவரும்படி செய்த தனிவீரன். அல்லது கையும் மடலுமாக என்னை வரும்படி செய்தவன். இப்படி நான் ஆவதற்குக் காரணமாகக் காதலை விளைவித்து என்னை எழுதிக் கொண்டவன். மன்னன் – காண்பவர்களை மடலெடுக்கச் செய்கைக்கு முடி சூடினவன். நாயகி நலிய நலியத் தான் விளங்கி நிற்பவன். **(நறுந்துழாய்)** என்னை இப்பாடு படுத்துவதற்கு அவன் கைக்கொண்ட ப்ரஹ்மாஸ்திரம். மார்பில் தரித்தவுடன் மணம் அதிகமாகிறது ஸர்வகந்தனானபடியாலே. **(வாழ்மார்பன்)** துளஸிதான் வாழ வேணுமோ நான் வாழலாகாதோ. மார்பில் பட்டவுடன் முன்னிலும் தளிர்க்கிறது துழாய். தோளும் தோள்மாலையும் கண்டால் எப்படி மடலெடுக்காமலிருப்பது. இவளை

மடலெடுக்கச் செய்து விட்ட வெற்றி தோன்ற மாலையணிந்திருப்பவன். இவளுக்குக் கையும் மடலும் போலே அவனுக்கு முடியும் மாலையும். **(முன்னம் மாமதி கோள்விடுத்த முகில் வண்ணன்)** முன்பொரு கால் சந்த்ரனுடைய துன்பத்தைப் போக்கின கார்மேக வண்ணன். கீழே 'இது விளைத்த மன்னன்' என்ற விடத்தில் தென்றல், அன்றில், போன்ற விரோதிகளை விளைத்தவன் என்றார். அதற்கு உதாஹரணம் காட்டுகிறார். மாமதி – அபலைகளைப் பாதிப்பதில் மிகப் பெரியவன். அவனுக்கு ஏற்பட்ட துயரைப் போக்காவிட்டாலும் எங்களை நலியக் கூடியவன். அப்படிப்பட்டவன் துன்பத்தையும் தீர்த்துவிட்டால் கேட்கவும் வேண்டுமோ. மாமதிகோள் முன்னம் விடுத்த முகில்வண்ணன் – சந்த்ரனுக்கு ராகுவால் துன்பம் நேர்வதற்கு முன்னமே அதைத் தீர்த்தவன். முன்பொரு காலத்தில் என்றும் சொல்லலாம். ரக்ஷகனாயிருந்தவன் இப்போது பாதகன் ஆனான். ப்ரயோஜனாந்தரபரரை ரக்ஷித்தவன் அநந்ய ப்ரயோஜனரை துன்புறுத்துகிறான் பாருங்கள். முகில் வண்ணன் – மேக ஸ்வபாவன். ஜலத்தில் பொழிந்து தரையைக்காயவிடும் மேகம் போலே ப்ரயோஜனாந்தரபரரை ரக்ஷித்து அநந்ய ப்ரயோஜனரை நலிபவன். எங்கே பொழிந்தால் பயனுண்டு என்ற பகுத்தறிவில்லாமல் பொழிபவன். முன்பு கைம்மாறு கருதாது சந்த்ரனை ரக்ஷித்த மேகஸ்வபாவன் என்னை இன்று நலிகின்றான் என்றுமாம். **(காயாவின் சின்னநறும் பூந்திகழ்வண்ணன்)** சிறியதாய் மணம் திகழும் காயாவின் பூப்போன்ற நிறமுடையவன். விடவொண்ணாத வடிவையுடையவன். சின்னப்பூ – இவன் பெரியவனானாலும் யாரும் அணுகும்படியான ஸௌலப்யமுடைய சிறியவன். சின்னம்– சுண்ணம், தாது, மகரந்தத்தையுடைய பூவென்றுமாம். சின்ன நறும்பூ – வடிவில் சிறியதாயினும் மணத்தில் மிக்க பூ. அது போலவே இவன் புகழ்.

**(வண்ணம் போல் அன்ன கடலை)** எதிரியாகையாலே ராவணனைக் கொன்றான் என்பது பொருத்த முடையதே. ஆனால் கடலையும் அல்லவோ கலக்கினான். காம்பீர்யம், எல்லாப் பொருள்களுக்கும் இடமாயிருத்தல், பெருமை, நிறம் ஆகியவற்றால் தன்னையொத்த கடலைக் கூடவா கலக்க வேண்டும். **(மலையிட்டணைகட்டி)** கண்டகற்களையெல்லாம் எடுத்துப் போட்டு, குரங்குகள் நடந்து செல்லும்படி அணைகட்டி கடலின் காம்பீர்யத்தை அழித்தவன். என்னுடைய காம்பீர்யத்தையும் அழித்து மடலெடுக்கச் செய்தவன். **(மன்னனிராவணனை)** 'அரக்கர்கோன்' என்ற அபிமானத்தை உடைய ராவணனை. **(மாமண்டு வெஞ்சமத்து)** மா என்பது நாலு கால் பிராணிகளைச் சொல்லும். யானை, குதிரை போன்றவை. இங்கு உபலக்ஷணமாக நால்வகைச் சேனையைக் குறிக்கும். நால்வகைச்சேனையும் நெருங்கி இருக்கும்படியான கொடிய யுத்தத்தில். வெஞ்சமத்து – திறந்து கிடந்த வாசலிலே நாய் நுழைவது போல் நுழைந்து அறியாமற் கிடந்த ராவணனைக் கொல்லவில்லை. **रामरावणयोर्युद्धं रामरावणयोरिव** (ரா.யு.100–24) என்று பேசும்படி தனக்குத்தானே ஒப்பான நிகரற்ற யுத்தத்தில் நேருக்கு நேர் நின்று ராவணனைக் கொன்றான். கொன்றது எப்படி என்கிறார் மேலே. **(பொன்முடிகள்)** இவன் கேவலம் மனிதன் தானே என்று ராமபிரானை மதியாமல் முடிபுனைந்து களம் புகுந்தான். **(பத்தும்புரள)** பத்துத் தலைகளோடு உயிரையும் உடம்பைவிட்டுப் பிரித்தான். 'உம்மை' சொல்லப்படாத உயிரைக் குறிக்கிறது. அல்லது பத்து தலைகளில் ஒன்றையும் விடாமல் மண் கவ்வ வைத்தான். **(சரம் துரந்து)** வரபலத்தாலே அறுத்த தலை முளைக்க முளைக்க அவற்றை அறுக்கும்படி அம்பு மழை பொழிந்தான். **(தென்னுலகம் ஏற்றுவித்த சேவகனை)** யமலோகத்தை அழகிய உலகமாக்கிய வீரனை. யமலோகத்தில் உள்ளவர்கள் இவனுக்குப் பணி செய்ய இங்கே வந்து அந்த லோகம் பாழாகிக் கிடந்தது. இப்போது ராவணன் மற்ற

அரக்கரோடு அங்கு சென்றதால் யமலோகம் நிறைந்து ஆழகியதாயிற்று. சேவகனை – அப்படிப்பட்ட வீரன் என் கையில் படப் போவதை காணப் போகிறீர்கள்.

**ஆயிரக்கண் மன்னவன் வானமும் வானவர்தம் பொன்னுலகும் தன்னுடைய தோள் வலியால் கைக்கொண்டதானவனை பின்னோரரியுருவ மாகி எரி விழித்து கொன்னவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே வல்லாளன் மன்னு மணிக்குஞ்சி பற்றிவரவீர்த்து தன்னுடைய தாள் மேல் கிடாத்தி அவனுடைய பொன்னகலம் வள்ளுகிரால் போழ்ந்து புகழ் படைத்த மின்னிலங்கும் ஆழிப் படைத் தடக்கை வீரனை**

ஹிரண்யனைக் கொன்று படைத்த புகழை அழிக்கிறேன் என்கிறாள்.

**(ஆயிரக்கண் மன்னவன் வானமும்)** ஸ்வர்கம் பெரியதாகையால் அதை ரக்ஷிப்பதற்குப் பாங்காக ஆயிரங்கண்களைப் படைத்தவன். ஆயிரம் கண்களையுடைய இந்த்ரனுடைய ஸ்வர்கத்தையும். வானமும் என்ற சொல்லிலுள்ள 'உம்மை' பூமி அந்தரிக்ஷம் என்றவற்றைக் குறிக்கிறது. ஆக மூவுலகங்களையும். **(வானவர் தம் பொன்னுலகும்)** பற்றுமுள்ள ஸூர்யன், யமன் முதலிய தேவர்களின் உலகங்களையும். **(தன்னுடைய தோள்வலியால்)** ஒருவன் தானமாகக் கொடுத்தோ, வரத்தாலோ, தவத்தாலோ பெற்றதில்லை. தன் புஜ பலத்தாலே வென்றான். இது என்னுடையது என்று இவன் எல்லை வகுத்தால் இவன் தோள்வலி கண்டு நடுங்கும் தேவர்கள் தாமாகவே விட்டுப் போந்தது. **(கைக்கொண்ட தானவனை)** ஆஸுர ஸ்வபாவமுள்ளவனாகையாலே பிறர் பொருளை அபஹரிப்பதே இவன் காரியம்.

**(பின்)** சில காலம் சென்றபின். ஒருவேளை இவன் திருந்துவானோ என்று பார்த்திருந்தான். **(ஓர் அரியுருவமாகி)** ஒப்பற்ற சிங்கமானான். அரியுருவும் ஆளுருவும் ஆனான். எம்பெருமானுடைய திருமேனியிலே இப்படியொரு விலக்ஷணமான மாறுபாடு ஏற்படக்காரணம் என்ன? ஹிரண்யன் பண்ணின அபசாரங்கள் என்பர். அவன் பெற்ற வரங்கள் என்பர். ஆராய்ந்து பார்க்கையில் அதுவல்ல காரணம் என்பது தெளியும். ஹிரண்யன் ஒரு முறையா அபசாரப்பட்டான்? அப்போதெல்லாம் சிங்கப் பிரான் தோன்றவில்லையே. ப்ரஹ்லாதனைக் கடிந்தபோது தானே தோன்றினான். பிள்ளையைச். சீறி வெகுண்டு தூண்புடைத்தபோதல்லவோ வெளிப்பட்டான். ஆகையால் எம்பெருமானுடைய திருமேனியில் மாறுபாடு உண்டாகக் காரணம் ப்ரஹ்லாதனுக்குக் கொடுத்த தொல்லையே. ஹிரண்யன் தன்னிடம் பட்ட அபசாரங்களையெல்லாம் பொறுத்துக் கொண்ட எம்பெருமான், ப்ரஹ்லாதனுக்குத் தொல்லை கொடுத்தபோது அரியுருவும் ஆளுருவுமானான். இதனை ஸ்ரீவரதராஜ ஸ்தவத்தில் (68) **यदपराधसहस्रमजस्रजं त्वयि शरण्य हिरण्य! उपावहत्। वरद! तेन चिरं त्वमविक्रिय: विकृतिमर्भक निर्भजनादगा:।।** என்று ஆழ்வான் அனுபவிக்கிறார். **(ஓரரி)** ஸத்யஸங்கல்பனே தானே நினைத்தாலும் இன்னொரு முறை இப்படிப்பட்ட உருவத்தைக் கொள்ள முடியாது. ஆகி – மனிதனாலும் ம்ருகத்தாலும் சாவில்லை என்று வரம் வாங்கி அதனாலே கர்வத்தோடு இருந்த ஹிரண்யனை அழிக்க இப்படி சேராச் சேர்த்தியான உருவம் கொண்டான் 'வரங்கருதித் தன்னை வணங்காத வன்மை' (இரண்டாந்திரு.84) என்றார் ஆழ்வார். **(எரிவிழித்து)** இது இவனுடைய ஸ்வபாவமில்லை. உயிர்க்கெல்லாம் தாயாயளிக்கின்ற தண் தாமரைக் கண்ணன் அவன். ஆனால் பாகவதாபசாரத்தைக் கண்டு அது பொறுக்காமல் கோப வசப்பட்டு எரிவிழித்தான். இவ்வாழ்வாரே சிங்கவேள் குன்றப் பாசுரத்தில்

எப்படிப்பேசுகிறார். 'எரிந்த பைங்கண் இலங்கு பேழ்வாய் எயிற்றொடு இது எவ்வுருவென்று இரிந்து வானோர் கலங்கியோட இருந்தவம்மான்' (பெரியதிரு. 1-7-6). வானோர் கலங்கி ஓடினாலும் ப்ரஹ்லாதன் பயந்து ஓடவில்லை. ஏன் ? அவன் சீற்றத்தோடு அருள் பெற்றவன். எதிரியிடத்து சீற்றங்கொண்டு போரிடும் போதும் சிங்கம் தன் குட்டிக்கு முலை தருவதுபோல. இந்த பயங்கரமான தோற்றம் ஆழ்வாரின் கண்களுக்குப் பெரு விருந்தாய் அமைகிறது. அரியாய் பொங்கி எழுந்த எம்பெருமான் ஆழ்வாருக்கு அந்த நிலையிலும் தன் அழகைத்தான் காட்டினான். ஆழ்வார் பேசுகிறார். 'இவையாபிலவாய் திறந்து எரிகான்ற இவையா எரிவட்டக் கண்கள் இவையா எரிபொங்கிக் காட்டும் இமையோர் பெருமான் அரிபொங்கிக் காட்டும் அழகு', 'அழகியான் தானே அரியுருவந்தானே' (நான்முகன். 21, 22) என்பது திருமழிசைப் பிரான் பேச்சு. **(கொல் நவிலும் வெஞ்சமத்துக் கொல்லாதே)** கொலை நடக்கும் போர்க்களத்தில் இவனைக் கொல்லவில்லை. யுத்தத்தில் ஓர் அம்பை எய்து இவன் தலையைக் கொய்தால் அது அவனுக்கு முடிசூட்டியதற்கு ஒப்பாகும். அவ்வாறு செய்யாமல் அவனைச் சித்ரவதம் பண்ணினான். **(வல்லாளன்)** வலிமையுடையவன். நெஞ்சிலும் உடலிலும் பலமிகுந்தவன். தன் மகனின் பெருமையைக் கூடப் பொறாத வலிமை அவன் நெஞ்சுக்கு. நரசிங்கனும் எளிதில் வீழ்த்த முடியாத தேஹபலம். **(மன்னு மணிக்குஞ்சி பற்றி)** ஏகசத்ராதிபத்யம் செலுத்தினமுடி. அனைவரும் இவனுக்குப் பயந்து 'ஹிரண்யாய நம:' என்றே சொன்னார்கள். அப்படிப்பட்ட மணி முடியைப் பற்றினான் முதலில். **(வரவீர்த்து)** தன்னிடம் வரும்படி ஈர்த்தான். அவனுடைய எதிர்ப்பு இல்லையோ எனில் பிறந்ததுமுதல் எவரிடமும் அவமானப்பட்டதில்லையாகையால் மணி முடியைப் பற்றியபோதே அவமானத்தால் உயிர்போயிற்று. பிணத்தை இழுப்பது போல் இழுத்தான். **(தன்னுடைய தாள் மேல் கிடாத்தி)** 'தன்னுடைய

பிராட்டி சாயக்கடவ மடியிலே என்னைப் போலன்றிக்கே முரட்டுப் பையபலையோ மடியிலேற்றுவது என்கிறாள்' என்பது பெரியவாச்சான் பிள்ளை ஸூக்தி. அவன் மடியிலே பிராட்டி சாய்ந்திருப்பது பொருத்தமுடையது. இந்த மடியிலே சாயவேண்டும் என்று ஆசைப்பட்டிருக்கும் என்னைச் சாய விட்டாலும் பொருத்தமே. அவ்வாறில்லாமல் முரடனான ஹிரண்யனையோ சாயவிடுவது என்கிறாள். இங்கு நாயனார் வ்யாக்யானத்தில் ஒரு ஐதிஹ்யம் காணப்படுகிறது. 'என்போல்வாரையிறே மடியிலே எடுத்துக் கொள்ளவடுப்பது. ஆஶ்ரிதருக்குப் பரமப்ராப்யமான திருவடிகளிலே ஆஸுரப்ரக்ருதியானவனை ஏறிட்டுக் கொள்ளுவதே! என்கிறாள்' என்று பட்டர் அருளிச் செய்ய நான் கேட்டேன் என்று நம்பிள்ளை அருளிச் செய்தார் என்பதாம்.

**(அவனுடைய பொன்னகலம்)** ஹிரண்யன் – பொன்னன் என்ற பெயரை உடையவன். அவன் மார்பு. அல்லது பலியிடக்கிடாவை ஊட்டி வளர்ப்பது போல் நரசிங்கனுடைய நகங்களுக்கு இரைபோரும்படி வார்க்கப்பட்ட அழகிய மார்பு. **(வள்ளுகிரால் போழ்ந்து)** பொன்னகலமாகையாலே எரிவிழிகளின் வெம்மையாலே உருகிற்று. பிறகு எளிதாக வாழைநாரைக்கிழிப்பது போல் கிழித்தான். **(புகழ்படைத்த)** தகப்பனும் பகைவனான போது உபகரித்த நிருபாதிக பிதாவென்றும் ஆஶ்ரிதனுக்காகத் தன்னை அழிய மாறியாகிலும் உதவினான் என்றும் புகழ் படைக்கை. **(மின்னிலங்கும் ஆழி)** திருவுகிருக்கு இரை போந்ததத்தனை. திருவாழி தனக்கு இரை போராமையாலே சீறி நாக்கு நீட்டுகிறபடி. 'கிளரொளியால் குறைவில்லா அரியுருவாய்க் கிளர்ந்தெழுந்து கிளரொளிய இரணியனதகல் மார்பம் கிழித்துகந்த வளரொளிய கனலாழி வலம்புரியன்' (திருவாய். 4–8–7) என்றார் நம்மாழ்வார். **(ஆழிப்படைத்தடக்கை)** சக்ராயுதத்தைப் பெரிய திருக்கையிலே

உடைய. **(வீரனை)** ந்ருஸிம்ஹ அநுஷ்டுப் மந்திரத்தின் இரண்டாவது சொல்லை நினைப்பூட்டுகிறது.

அறிவும் உறுதியுமுள்ள ப்ரஹ்லாதனை ரக்ஷித்ததைக் கூறினாள் கீழே. இனி தங்களுடைய துன்பத்தையும் அறியாமல் கிடந்த சேதநங்களைப் ப்ரளயாபத்திலே ரக்ஷித்த புகழையும் அழிப்பேன் என்கிறாள்.

**மன்னிவ்வகலிடத்தை மாமுதுநீர் தான்விழுங்க பின்னுமோ ரேனமாய் புக்கு வளை மருப்பில் கொல் நவிலும் கூர்நுதிமேல் வைத்தெடுத்த கூத்தனை**

**(மன்னிவ்வகலிடத்தை)** வாமனன் மண் இது என்று சொல்லும்படி நெடு நாட்களாக அவனுடையதாக இருக்கும் பூமியை. அல்லது எல்லோரும் நிலை பெற்றிருக்கும் பூமியை. **(மாமுதுநீர்தான் விழுங்க)** மஹா ப்ரளய ஜலம் விழுங்க. **अद्भ्य: पृथिवी** (நீரிலிருந்து பூமியுண்டாயிற்று. தைத்.ஆன.) என்றபடி ப்ருதிவிக்குக் காரணமான நீரே தான் உண்டாக்கின பூமியை விழுங்க. பூமிக்கு ரக்ஷகமாக வைக்கப்பட்ட கடலே அதனை விழுங்கப்புக. **(பின்னும்)** ரக்ஷணத்திற்கு ஒரு முடிவில்லை. **(ஓர் ஏனமாய்)** ஒப்பற்ற வராஹமாய். நீரிலும் சேற்றிலும் அளையத்தக்க 'மானமிலாப் பன்றி'யுருவம். **(புக்கு)** ப்ரவேஶித்து. **(வளை மருப்பில்)** வளைந்த தந்தத்தினுடைய. **(கொல் நவிலும் கூர்நுதி மேல்)** எதிரிட்டவர்களைக் கொலை செய்யவல்ல கூர்மையுடைய கோரைப் பற்களின் நுனிமேல். **(வைத்தெடுத்த கூத்தனை)** வைத்துக் கொணர்ந்த அழகிய செயலையுடையவனை.

**மன்னும் வடமலையை மத்தாக மாசுணத்தால் மின்னுமிருசுடரும் விண்ணும் பிறங்கொளியும் தன்னினுடனே சுழல மலைதிரித்து ஆங்கின்னமுதம் வானவரை யூட்டி அவருடைய மன்னும் துயர் கடிந்த வள்ளலை**

பூமியிலுள்ளாரை ரக்ஷித்தது கூறிய பின் ईश्वरोऽहं என்று இருக்கும் துரபிமானிகளான தேவர்களுக்காகத் தன் உடம்பு நோவக் காரியம் செய்து படைத்த புகழையும் அழிப்பேன் என்கிறாள். **(மன்னும் வடமலையை மத்தாக)** பூமிக்கு ஆணியடித்தாற் போல் நிலையாய் இருக்கும் மந்தரமலையை மத்தாகக் கொண்டு. கடையச் சிதறா மலை என்றும் பொருள். **(மாசுணத்தால்)** வாஸுகியைக் கயிறாகக் கொண்டு. **(மின்னும் இரு சுடரும் விண்ணும்)** பிரகாசிக்கிற சந்த்ர ஸூர்யர்களும், அவர்களுக்கு ஆதாரமான ஆகாசமும். **(பிறங்கொளியும்)** மற்றும் பல தேஜ: பதார்த்தங்களும். **(தன்னினுடனே சுழல)** கடைகிற வேகத்தாலே தன்னோடு கூடவே சுழன்று வரும்படியாகக் கடைந்து. **(மலைதிரித்து ஆங்கு இன்னமுதம் வானவரை யூட்டி அவருடைய மன்னும் துயர் கடிந்த வள்ளலை)** வெகுநேரம் கடைந்து தேவர்கள் களைப்படைந்தபோது தானே அவர்களோடு நின்று ஆயிரந்தோளால் அலைகடல் கடைந்து, அவர்களுடைய ஶத்ருக்களான அஸுரர்களை அழியச் செய்து தேவர்களுக்கு அமுதினைக் கொடுத்து அவர்களுடைய நீண்ட நாளைய துன்பத்தைப் போக்கின பரமோதாரனை. மன்னும் துயர் – ஸம்ஸார மண்டலத்தில் உள்ளவரையில் உள்ளதான மரணபயம். அதைப் போக்கினவன். அல்லது துர்வாஸரின் ஶாபத்தால் அவர்களுக்கு நிலையாய் நின்ற வறுமையைப் போக்கினான். வள்ளலை – தன்னையே கேட்டாலும் தரக் காத்திருக்கும் எம்பெருமானிடம் க்ஷுத்ர புருஷார்த்தங்களை யாசித்துப் பெற்றாலும் அவர்களை उदारा: (உதாரர்கள். கீதை 7–18) என்று கூறும் உதாரன். 'உள்ள நோய்கள் தீர்மருந்து வானவர்க்களித்த எம் வள்ளலார்' (திருச்சந்த விரு. 88) என்றார் திருமழிசைப்பிரான்.

**மற்றன்றியும் தன்னுருவமாரு மறியாமல் தானங்கோர் மன்னும் குறளுருவின் மாணியாய் மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண் புக்கிருந்து போர் வேந்தர் மன்னை**

**மனங்கொள்ள வஞ்சித்து நெஞ்சுருக்கி என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடிமண் மன்னா! தருகென்று வாய்திறப்ப மற்றவனும் என்னால் தரப்பட்டது என்றலுமே அத்துணைக்கண் மின்னார் மணிமுடி போய் விண்தடவ மேலெடுத்த பொன்னார் கனைகழற்கால் ஏழுலகும் போய்க் கடந்து அங்கு ஒன்னா அசுரர் துளங்கச் செலநீட்டி மன்னிவ்வகலிடத்தை மாவலியை வஞ்சித்து தன்னுலகமாக்குவித்த தாளானை**

**(மற்றன்றியும்)** அதற்கும் மேலே, முன் சொன்ன பரத்வத்திற்கு எதிர்தட்டான நீர்மையைச் சொல்லுகிறது. **(தன்னுருவம் யாரும் அறியாமல்)** கண்டவர்கள் இவன் என்றுமே யாசகனாயிருந்தவன் என்று நினைக்கும்படி. நான்கு புருஷார்த்தங்களையும் தரவல்ல நான்கு திருக்கைகளையுடையவன் என்று அறியாதபடி. யாரும் அறியாமல் – பெரிய பிராட்டியாரும் நித்தியஸூரிகளும் கூட அறிய முடியாதபடி. **(தானங்குபுக்கு)** எல்லாரும் வந்து அடையத் தக்கவனான தான் மாவலியின் ய்ஜ்ஞ சாலையில் புகுந்து. **(ஓர் மன்னும் குறளுருவில்)** வைத்த கண் வாங்கமுடியாதபடி ஒப்பற்ற அழகிய வாமன வேஷத்தையுடைய. **(மாணியாய்)** ப்ரஹ்மசாரியாய். உண்டு என்று இட்டபோதோடு இல்லையென்று கதவடைத்த போதோடு வாசியற முகம் மலர்ந்திருக்கும்படி யாசகத்தில் தகணேறிய வடிவையுடைய ப்ரஹ்மசாரியாய். **(மாவலிதன் பொன்னியலும் வேள்விக்கண்)** மாவலியின் அழகிய வேள்வியிலே. வேள்விக்கு அழகாவது, அவனைப்பெற நான் மடலெடுக்கவேண்டியிருக்கிறது. அவ்வாறு இல்லாமல் யஜ்ஞ பலனான அவனையே வரவழைக்கும் பெருமையுடைய யாகம். இப்படி மடலெடுக்காமல் நானும் ஒரு யாகம் செய்தால் தானே வருவன் என்று கருத்து. பொன் இயலும் – பொன் வழங்கும் வேள்வி.

கேட்டவர் கேட்டதெல்லாம் வழங்கிய வேள்வி. **(புக்கு)** இட்ட அடிகள் தோறும் பூமி நெளியும்படியாகப் போய். **(இருந்து)** அவன் கொடேன் என்றாலும் பெறாமல் போகமாட்டேன் என்று ஸ்திர ப்ரதிஷ்டனாய் இருந்து.

**(போர்வேந்தர் மன்னை)** யுத்த வீரர்களான அரசர்களுக்கெல்லாம் அரசனான மாவலியை. **(மனங்கொள்ள வஞ்சித்து)** ஶுக்ரன் முதலானவர்கள் தடுத்தபோதிலும் தன் அழகாலே மாவலியை வஞ்சித்து அல்லது இவன் யாசிக்கவந்த ப்ரஹ்மசாரியே என்று அவன் நம்பும்படி வஞ்சித்து. **(நெஞ்சுருக்கி)** 'புலன் கொள் மாணாய்' (திருவாய். 1–8–6) என்கிறபடியே ஶுக்ரனால் கலக்கப்பட்ட அவன் நெஞ்சைக் கரைத்து. மேலே தன் பேச்சாலே நெஞ்சையுருக்கினபடியைச் சொல்லுகிறாள்.

**(என்னுடைய பாதத்தால் யானளப்ப மூவடி மண் மன்னா தருகென்று வாய் திறப்ப மற்றவனும்)** மன்னா என்றது வாமனக்குழந்தை. ஏறிட்டுப் பார்த்தான் மாவலி. மூவடி என்றது குழந்தை. என்ன வேண்டுமென்றான். மண் என்றது. யார் காலாலே என்றான். என்னுடைய பாதத்தால் என்றது. பெரியதொரு காலாலே கொள்ளக் கூடாதோ என்றான். யானளப்ப – என் விருப்பப்படி செய்வதன்றோ உன் கடமை என்றான் வாமனன். இவன் பேச்சை இன்னும் சிறிது நேரம் கேட்கவேண்டுமென்று பேசாதிருந்தான் மாவலி. தருக – இப்போதே தரவேண்டும் என்று அமுதொழுகப் பேசிற்று குழந்தை. தருக என்று வாய்திறப்ப – இவன் வாய்திறந்த அழகிலே மயங்கியேவிட்டான். இங்கேயுள்ள வ்யாக்யான பங்க்திகள். 'ராஜாவே என்ன, திரியப்பார்க்க, மூவடி என்ன, என்னன்புது என்ன, மண்ணென்ன, ஆர்காலாலே என்ன, என் காலாலே என்ன, பெரியதொரு காலாலே கொண்டாலோ என்ன, என்னபேக்ஷையன்றோ நீ செய்யக் கடவது என்ன பேசாதிருந்தான்

**(தென்னன் குறுங்குடியுள் செம்பவளக்குன்றினை)** தெற்கு திக்கிலுள்ளதாய் அழகியதான குறுங்குடி. பாண்டியனுடைய குறுங்குடி. செம்பவளக்குன்று – மடலெடுத்தாவது பெறவேண்டிய அழகையுடையவன்.

**(மன்னிய தண்சேறை வள்ளலை)** குளிர்ந்திருக்கும் சேறையில் ப்ரதிகூலரான ஸம்ஸாரிகளுக்கும் தன்னைக் கொடுத்துக் கொண்டிருக்கும் பரமஉதாரனை.

> **மாமலர்மேல் அன்னம் துயிலும் அணிநீர் வயலாலி என்னுடைய இன்னமுதை எவ்வுள் பெருமலையை கன்னிமதிள்சூழ் கணமங்கைக் கற்பகத்தை மின்னை இருசுடரை வெள்ளறையுள் கல்லறைமேல் பொன்னை மரதகத்தைப் புட்குழி எம்போரேற்றை மன்னுமரங்கத்து எம்மாமணியை**

**(மாமலர்மேல் அன்னம் துயிலும் அணிநீர் வயலாலி என்னுடைய இன்னமுதை)** பெரிய தாமரை மலர்களிலே அன்னங்கள் உறங்குகின்றன. இதைச் சொல்லுவானேன். அன்னமும்பேடையும் ஊடல் கொண்டு ப்ரணய கலஹம் செய்யவேண்டுமென்று தாமரை மலரிலே இழிந்தன. இவைகளின் ஊடலுக்கு இடமுடையதாய் அம்மலரும் மாமலராயிருந்தது. மலரிலே இழிந்தபின் அதனுடைய மென்மை குளிர்த்தி நாற்றம் முதலியவற்றாலே அது மென்மலர்ப் பள்ளியாயிருந்தமையாலே ஊடலை மறந்து உறங்கி விடுகின்றன. அணிநீர் வயலாலி – அழகிய ஜலம் நிரம்பிய திருவாலி. **(என்னுடைய இன்னமுதை)** இங்குள்ள வ்யாக்யான பங்க்தி 'இரண்டு தலைவாரமும் தம்மது'. நிலத்தில் விளையும் தானியங்களை இரண்டு வாரமாகப் பங்கிடுவர். ஒன்று மேல் வாரம். நிலச் சொந்தக்காரனுடைய பங்கு. மற்றொன்று குடிவாரம். பயிரிட்டவனின் பங்கு. திருவாலி எம்பெருமானைப் பற்றிப் பேசும் இவள்

'என்னுடைய' என்றாள். அது இவளுக்கு பிறந்த வீடும், 'அரங்கத் துறையும் இன்துணைவனொடும் போய் எழிலாலி புகுவர் கொலோ'(பெரியதிரு. 3–7–6) 'தாய் மனம் நின்றிரங்கத் தனியே நெடுமால் துணையா போயின பூங்கொடியாள் புனலாலி புகுவரென்று' (பெரியதிரு. 3–7–10) என்ற தாய்ப்பாசுரங்கள்படி புகுந்தவீடுமாகிறபடியால், இருதலை வாரத்திலும் தனக்கே முழு உரிமையுண்டு என்கிறாள்.

**(எவ்வுள் பெருமலையை)** அநுபவித்து முடிக்க ஒண்ணாமை. திரு எவ்வுள் என்கிற திவ்ய தேசத்திலே தன் இனிமையை எவரும் அநுபவித்து முடிக்க முடியாதபடி சாய்ந்தருளி பெருமலை போன்றிருப்பவன்.

**(கன்னிமதிள்சூழ் கணமங்கைக் கற்பகத்தை மின்னை இருசுடரை)** எப்போதும் புதியதாயிருக்கும் மதிளாலே சூழப்பட்ட திருக்கண்ணமங்கையுள் எனக்கே தன்னைத்தந்த கற்பகத்தை. 'கண்களாரளவும் நின்று கண்ணமங்கையுள் கண்டு கொண்டேனே' (பெரியதிரு. 7–10–9) என்றார் அன்றோ. மதிள்சூழ் – மடலெடுக்கும் போதும் காவலுண்டென்று ஆஶ்வாஸம் (ஆறுதல்) அடைகிறாள் மங்களாஶாஸனபரர் ஆகையாலே. அங்கு நிற்பது எப்படி எனில் மார்பிலே பிராட்டி மின்னல்போலவும் கையிலே ஆழியும் சங்கும் இருசுடர்கள் போலவும் உள்ளன.

**(வெள்ளறையுள் கல்லறைமேல் பொன்னை)** திருவெள்ளறையில் கல்லாலான அறைமேல் பொன்போல் ஆசைப்படத்தக்கவனாக இருப்பவனை. பொன்னை – பொன்னையும் ரத்நங்களையும் கொண்டு மணிஆரம் செய்வது போல் அர்ச்சாவதார ஸ்தலங்களைத் தொகுத்துத் தருகிறார்.

**(மரதகத்தைப் புட்குழி எம்போரேற்றை)** மரதகத்தை – காண்பவர் கண்குளிரும்படி பச்சை நிறக்கல் போன்ற மேனியையுடையவனாய், புட்குழி எம்போரேற்றை – திருப்புட்குழியில் போர் செய்ய முன்னிற்கும் ருஷபம் போன்றவனை. கலியனுடைய இந்த ஓரடியை மனத்திற்கொண்டு ஸ்வாமி தேஶிகன் **रणपुंगव**ன், **आहवपुंगव**ன் முதலிய சொற்களாலே பரமார்த்தஸ்துதியில் இந்த திவ்யதேஶத்து எம்பிரானைக் குறிக்கிறார்.

**(மன்னுமரங்கத்து எம்மாமணியை)** 'கண்டார் விடாத தேஶம்'. தொண்டரடிப்பொடி போன்றவர்கள் மற்ற திவ்ய தேஶங்களைக் கைவிட்டு இங்கே நிலைநின்றார்கள். அப்படிப்பட்ட அரங்கம். காஞ்சியிலே அவதரித்த ஸ்வாமி தேஶிகனும் ஸ்ரீரங்க வாஸத்தையன்றோ உகந்திருந்தது. இதை குமாரர் நயினாச்சார்யர் **कांचीपुरी यस्य हि जन्मभूमि: विहारभू: वेङ्कटभूधरेन्द्र: । वासस्थली रंगपुरी तमीड्यं श्रीवेङ्कटेशं गुरू माश्रयाम:॥** (காஞ்சீபுரம் எவருடைய பிறப்பிடமோ, திருவேங்கடம் விளையாடுமிடமோ, திருவரங்கம் வாழுமிடமோ, அந்த துதிக்கத் தகுந்த திருவேங்கடநாதனென்னும் குருவை ஆஶ்ரயிக்கிறோம்– தேஶிக தினசர்யா) என்று சொல்லுகிறார். 'பற்றற்றார்கள் பயிலரங்கம்' (பெருமாள் திரு. 1–4) என்று குலஶேகரப் பெருமாளும் 'அற்றபற்றர் சுற்றிவாழும் அந்தணீர் அரங்கம்' (திருச்சந்த விரு.52) என்று திருமழிசைப் பிரானும் 'நல்லார்கள் வாழும் நளிரரங்க நாகணையான்' (நாச். திரு. 11–5) என்று நாச்சியாரும் அருளிச்செய்தபடி பாகவதர்கள் மன்னி வாழும் அரங்கம். 'திருநாள் ஸேவிக்க வென்று வந்து பின்பழகும் பிறகு வாளியுமழகும், கொக்கு வாயும், கடைப்பணிக் கூட்டமும் இருக்கிறபடியைக் கண்டு க்ஷேத்ர ஸந்யாஸம் பண்ணி வர்த்திக்கும்படிக்கு ஈடாகவாயிற்று கோயிலிலே கண் வளர்ந்தருளும்படி' என்பது நாயனார் வ்யாக்யானம். மன்னுமரங்கம் – பரமபதம், திருப்பாற்கடல் மற்றுமுள்ள திவ்ய தேஶங்களிலே நிலை கொள்ளாமல் இங்கு வந்து

ஸ்திரப்ரதிஷ்டனானான் என்றுமாம். மாமணி – முந்தானையிலே முடிந்தாளலாம்படி ஸௌலப்யம். நிறத்தாலும் ஒளியாலும் நீலமணி போன்றிருப்பவன். அரங்கத்து எம்மாமணியை – **अखिलजगत् स्वामि**யாயும், **अस्मत् स्वामि**யாயும் இருப்பவன். மாமணியை – பெரிய மணி, கருமணி. 'அருவரையனைய கோயில் மணியனார்' (திருமாலை– 21) என்றார் தொண்டரடிப்பொடிகள். 'தெண்ணீர்ப்பொன்னி திரைக்கையால் அடிவருடப் பள்ளி கொள்ளும் கருமணி' (பெருமாள் திரு.1–1) என்பது குலஶேகரப் பெருமாள் வார்த்தை. 'அணியார் பொழில்சூழ் அரங்க நகரப்பா துணியேனினி நின்னருளல்ல தெனக்கு மணியே மணிமாணிக்கமே மதுசூதா' (பெரிய திரு. 11–8–8) என்றார் இவரும் திருமொழியில்.

> **வல்லவாழ்ப் பின்னை மணாளனை பேரில் பிறப்பிலியை**
> **தொன்னீர்க் கடல் கிடந்த தோளா மணிச்சுடரை என் மனத்து**
> **மாலை இடவெந்தை ஈசனை மன்னும் கடல் மல்லை**
> **மாயவனை**

**(வல்லவாழ்ப் பின்னை மணாளனை)** நப்பின்னைப் பிராட்டியை மணம் புணர்ந்த செவ்வி தோற்றும்படி திருவல்லவாழில் நின்றவனை.

**(பேரில் பிறப்பிலியை)** எம்பெருமான் எத்தனையோ அவதாரங்கள் செய்திருக்க பிறப்பிலி என்பானேன் என்னில், அடியார்களுக்காக எத்தனை அவதாரங்களைச் செய்யினும் ஒன்றும் செய்திலோம் என்று அவன் திருவுள்ளம். இன்னும் எத்தனை பிறவிகள் வேண்டுமானாலும் எடுப்பதற்காகத் திருப்பேர் நகரில் எழுந்தருளி இருப்பவனை.

**(தொன்னீர்க் கடல் கிடந்த தோளா மணிச்சுடரை)** திருப்பாற்கடலிலே கிடந்து துளையிடப்படாத மணியின் சுடர் போலே ஒளி விஞ்சி நின்றவனை. பரமபதத்தில் நித்யஸூரிகளோடே

இருந்தும் சேதனர்களை உய்விப்பதற்காகத் திருப்பாற்கடலிலே சாய்ந்தருளினபோது அவனுடைய சுடர் விஞ்சி நின்றது. தொல்நீர் – விபவார்ச்சாவதாரங்களுக்கு நாற்றங்கால்.

**(என் மனத்து மாலை)** என் நெஞ்சிலே உறைய ஆசை கொண்டு இங்கே வந்தபின்பே அவனது ஒளி விஞ்சிநின்றது. ஸர்வேஶ்வரனுக்கு பரமபதமும் பாற்கடலும் பாலாலயமாயிருந்தது. நெஞ்சமே ப்ராப்யஸ்தலமாய் பெருங்கோயிலாய் இருந்தது. **हृदयं तद्विजानीयात् विश्वस्यायतनम् महत्** (ஸர்வேஶ்வரனுக்கு நெஞ்சமே பெருங்கோயில். தைத்.நாரா.26) என்றது உபநிஷத். "நெஞ்சமே நீள்நகராக இருந்த என் தஞ்சனே" (திருவாய். 3–8–2) என்றார் நம்மாழ்வார்.

**(இடவெந்தை ஈசனை)** திருவிடவெந்தையில் பூமிப் பிராட்டியின் நாயகனாய் தன் ஸர்வேஶ்வரத்வத்தை வெளிப்படுத்திக் கொண்டு நிற்பவனை.

**(மன்னும் கடல் மல்லை மாயவனை)** திருக்கடல் மல்லையில் ஆஶ்ரிதனான புண்டரீகருஷிக்கு உகந்த இடம் என்பதாலே என்றும் பிரியாத திருவனந்தாழ்வானையும் விட்டு தரையில் கண் வளர்ந்தருளுகிற ஆஶ்சர்ய பூதனை.

**வானவர்தம் சென்னிமணிச்சுடரை தண்கால் திறல்வலியை**
**தன்னைப் பிறரறியாத் தத்துவத்தை முத்தினை அன்னத்தை**
**மீனை அரியை அருமறையை முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை**

**(வானவர்தம் சென்னிமணிச்சுடரை)** இப்படி கடல் மல்லையில் வந்து பள்ளி கொண்டவன் தான் பரமபதத்தில் நித்ய ஸூரிகளுக்கு ஶிரோ பூஷணமானவன்.

**(தண்கால் திறல்வலியை)** திருத்தண்காலிலே எல்லாரையும் வெல்லும் மிடுக்கையுடையவனாய் நிற்பவனை.

**(தன்னைப் பிறரறியாத் தத்துவத்தை)** 'பத்துடை அடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய வித்தகன்' (திருவாய். 1–3–1) என்று ஆழ்வார் அருளிச் செய்தபடி அவனிடத்தில் அத்யந்த பக்தி உடையவர்களுக்கல்லது மற்றவர்களுக்கு அவனுடைய மேன்மையையும் கல்யாண குணங்களையும் அறிந்து கொள்ள முடியாமல் இருப்பவன். **अवजानन्ति मां मूढा: मानुषीं तनुमाश्रितम् । परं भावमजानन्तो मम भूतमहेश्वरम् ॥** (என் பெருமையை அறியாமல் மூடர்கள் என்னை அவமதிக்கின்றனர். கீதை 9–11) என்று அவனே கூறியபடி ஶிஶுபாலாதிகள் அவனுடைய ஸௌலப்யத்தை அறியாது ஏச நிற்பவன்.

**(முத்தினை)** அடியார் அணியலாம்படி குளிர்ந்த அழகுள்ளவனை.

**(அன்னத்தை மீனை அரியை)** ஹம்ஸ, மத்ஸ்ய, ஹயக்ரீவாவதாரங்களைச் சொல்லுகிறது. அரி–குதிரை. ஹயக்ரீவனாக அவதரித்து வேதங்களைப் பிரமனிடமிருந்து கவர்ந்து சென்ற மது கைடபர்களை ஸம்ஹரித்து, மத்ஸ்யமாய் அவற்றை மீட்டு, ஹம்ஸமாய் அவ்வேதங்களை மீண்டும் பிரமனுக்கு உபதேஶித்தவனை.

**(அருமறையை)** அவ்வேதங்கள் தானாய் – அவ்வேதங்களால் ப்ரதிபாத்யனாய் இருப்பவனை **वेदैश्च सर्वै: अहमेव वेद्य:** (எல்லா வேதங்களாலும் நானே அறியப்படுபவன். கீதை 15–15) என்று அவனே சொன்னான்.

**(முன்னிவ்வுலகுண்ட மூர்த்தியை)** ப்ரளய காலத்தில் ஸர்வ வஸ்துக்களையும் தன் திருவயிற்றிலேயடக்கி அவை இருப்புக் குலையாமல், நோவுபடாமல் ரக்ஷித்தவனை.

**கோவலூர் மன்னுமிடைகழி யெம் மாயவனை பேயலறப்**
**பின்னும் முலையுண்ட பிள்ளையை**

**(கோவலூர் மன்னுமிடைகழி யெம் மாயவனை)** திருக்கோவலூரிலே நித்யவாஸம் செய்யும் ஆச்சர்ய பூதனை. **भक्तोपमर्दरसिक :** (ஸ்ரீதேஹளீச ஸ்துதி: 24) என்று ஸ்வாமி தேசிகன் அனுபவித்தபடி, பக்தர்களான முதலாழ்வார்கள் மூவராலும் ஓர் இடைகழியில் நெருக்குண்டு அதையே போக்யமாக நினைத்து **वामकन् कामिनि**யாலே புடைபட்டாலும் வெளியில் போகமாட்டாமல் தூணைப் பிடித்துக்கொண்டு அங்கேயே சுற்றுமாப் போலே அவ்வூரிலேயே நித்ய வாஸம் செய்பவன்.

**(பேயலறப் பின்னும் முலையுண்ட பிள்ளையை)** யசோதைப் பிராட்டியின் ஸ்தோத்ரத்துக்கும், பேய்ச்சி (பூதனை)யின் அலறலுக்கும் வாசியறியாத பருவம். 'பேய்ச்சி முலையூடு அவளை உயிருண்டான்' (திருவாய். 5–8–11) என்றபடி முலைப்பாலோடு அவள் உயிரையும் ஒருசேர உண்டவனை.

**அள்ளல் வாய் அன்னம் இரை தேர் அழுந்தூர் எழும் சுடரை**
**தென்தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை**

**(அள்ளல் வாய் அன்னம் இரை தேர் அழுந்தூர் எழும் சுடரை)** கலங்கின நீரிலும் கூட இறங்காத அன்னப் பறவைகளும் தயங்காது இறங்கி இரையைத் தேடுகின்ற இனிய சேற்றையுடைய திருவழுந்தூரில் நித்யவாஸம் பண்ணுகிற தேஜோமயமானவனை.

**(தென்தில்லைச் சித்திர கூடத்தென் செல்வனை)** 'சீரார் பொழில் சூழ்ந்து அழகாய தில்லைத் திருச்சித்ரகூடத்து உறை செங்கண் மாலை'(பெரியதிரு. 3–2–10). 'பருவக் கருமுகில் ஒத்து, முத்துடைமா கடல் ஒத்து, அருவித் திரள் திகழ்கின்ற ஆயிரம்

பொன்மலை ஒத்து' (பெரியதிரு. 3-3-5) என்றபடி அழகுச் செல்வத்தையுடையவன்.

**மின்னிமழை தவழும் வேங்கடத்தெம் வித்தகனை மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை கொன்னவிலும் ஆழிப்படையானை**

**(மின்னிமழை தவழும் வேங்கடத்தெம் வித்தகனை)** மழை என்பது ஆகுபெயராய் மழைக்குக் காரணமான கறுத்த மேகத்தைக் குறிக்கும். 'அகலகில்லேன்இறையுமென்று அலர்மேல் மங்கை உறை மார்ப'(திருவாய். 6-10-10)னான அவனுடைய கறுத்த திருமேனியை கறுத்த மேகமாகவும், ஹிரண்ய வர்ணையான பிராட்டியை மின்னலாகவும் உருவகிக்கிறார். பிராட்டியோடு திருமலையிலே எழுந்தருளியிருக்கும் ஆஶ்சர்யகரமான குண சேஷ்டிதங்களை உடையவனை.

**(மன்னனை மாலிருஞ்சோலை மணாளனை)** அவன் நாட்டுக்கு மன்னன். ஆனால் திருமாலிருஞ்சோலைமலையிலே சுந்தரத் தோளுடையனாய் நின்று எனக்கு மணாளனானவன். என்சொற்படி கேட்டு அந்த சுந்தரத் தோள்களை அணைக்க எனக்குத் தரவில்லையே என்கிறாள்.

**(கொன்னவிலும் ஆழிப்படையானை)** ஆஶ்ரித விரோதி நிரஸநத்துக்காக ஆயுதமேந்தியவனை. திருவாழியாழ்வான் 'நமுசி' முதலான அஸுரர்களையும் பிற ஆஶ்ரித விரோதிகளையும் ஸம்ஹரிக்க வல்லவன்.

**கோட்டியூர் அன்ன உருவில் அரியை திருமெய்யத்து இன்னமுத வெள்ளத்தை இந்தளூர் அந்தணனை மன்னும் மதிட்கச்சி வேளுக்கை ஆளரியை மன்னிய பாடகத்தெம் மைந்தனை**

**(கோட்டியூர் அன்ன உருவில் அரியை)** திருக்கோஷ்டியூரிலே நரஸிம்ஹ ரூபியாய் எழுந்தருளியிருப்பவனை. 'முரியும் வெண்திரை முதுகயம் தீப்பட முழங்கழல் எரியம்பின்வரிகொள் வெஞ்சிலை வளைவித்த மைந்தனும்'(பெரியதிரு. 8–5–6), 'நெல்லில் குவளை கண்காட்ட நீரில் குமுதம் வாய்காட்ட அல்லிக் கமலம் முகம்காட்டும் கழனி யழுந்தூர் நின்றானை' (பெரியதிரு. 7–5–10) என்றெல்லாம் அற்புதக் கவிபாடவல்ல இவராலும் பேச முடியாத வடிவழகை உடையவனானமையின் 'அன்னஉரு' – அப்படிப்பட்ட உருவம் என்றார் போலும்.

**(திருமெய்யத்து இன்னமுத வெள்ளத்தை)** திருமெய்யத்திலே தேக்கி வைத்த அமுதக் கடல் போலே இருப்பவனை. அவனை நினைத்தாலே போதும் ஸம்ஸார தாபமெல்லாம் போவதற்கு.

**(இந்தளூர் அந்தணனை)** திருவிந்தளூரிலே எழுந்தருளியிருக்கும் பரமகாருணிகனை. தன்னை நாடி வந்தவர்களுடைய ஸம்ஸார துக்கத்தைப் போக்குபவனை, 'அந்தணர் என்பர் அறவோர் மற்றெவ்வுயிர்க்கும் செந்தண்மை பூண்டொழுகலான்' என்றது திருக்குறளும்.

**(மன்னும் மதிட்கச்சி வேளுக்கை ஆளரியை)** திருவேளுக்கையிலே எழுந்தருளியிருக்கும் ந்ருஸிம்ஹனை. வேள் என்ற சொல்லுக்கு பேரழகன் என்று பொருள். வேள் இருக்கும் இடம் – வேளிருக்கை – வேளுக்கை ஆயிற்று. ஹிரண்ய ஸம்ஹாரத்திற்காக அவதாரம் செய்த போது அந்தக் கோபத்தினால் சிவந்த முகத்தையும் உருவத்தையும் கண்ட அனைவரும் பயந்து நின்றனர். அவனுடைய மந்த்ரமும் 'உக்ரம், வீரம்' என்று கோபத்தையும் வீரத்தையுமே சொல்கிறது. ஆனால் இந்த திவ்ய தேஶத்தில் அவனுடைய வீரம்

தோற்றாமல் **साक्षात् मन्मथ मन्मथः** என்று பேசப்பட்ட அழகு மட்டுமே தோற்ற நிற்கின்றான். எனவே அடியார்கள் அவ்வழகைப் பாதுகாக்க மன்னும்மதிள் – திடமான மதிள் எடுத்தனர் போலும். 'அழகியான் தானே அரியுருவன்தானே' (நான்முகன். 22) என்றார் திருமழிசைப்பிரானும். **नारसिंह वपुः श्रीमान्** என்றது ஸஹஸ்ர நாமம்.

**(மன்னிய பாடகத்தெம் மைந்தனை)** திருப்பாடகத்திலே பாண்டவ தூதனாய் அடியார்களுக்குக் குற்றேவல் செய்யும் தன்னுடைய ஸௌலப்ய, ஸௌசீல்யாதி குணங்களைப் ப்ரகாசிப்பித்துக் கொண்டு நிற்பவனை. மைந்தன் – அப்பொழுதே யௌவனப் பருவம் ஆரம்பித்தவன்.

**வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை ஊரகத்துள்**
**அன்னவனை அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை என்னை**
**மனங்கவர்ந்த ஈசனை**

**(வெஃகாவில் உன்னிய யோகத்துறக்கத்தை)** விழிப்புடனே யோகநித்திரை செய்பவனை. 'ஆச்ரிதரிட்ட வழக்காயிருப்பவனை' என்பர் பெரியவாச்சான் பிள்ளை. திருமழிசைப்பிரான் சொற்படி நடந்தவன்.

**(ஊரகத்துள் அன்னவனை)** திருவூரகத்திலே உலகளந்த பெருமாளாய் நமக்கும் மேலே நோக்கி முழுதும் பார்க்க முடியாத பெரிய திருமேனியோடே இருப்பவனை.

**(அட்டபுயகரத்து எம்மான் ஏற்றை)** திருஅட்டபுயகரத்திலே மேன்மைதோற்ற நிற்பவனை. கஜேந்த்ரனுக்காக அரைகுலையத் தலைகுலைய ஓடிவந்து அருள் செய்தவனை. அதனால் எனக்கு ஸ்வாமி யானவனை.

**(என்னை மனங்கவர்ந்த ஈசனை)** என் மனம் உள்ளிட்ட அனைத்தையும் கவர்ந்து கொண்டு அத்தாலே தன்னை நிறைவுடையவனாக நினைத்திருப்பவனை.

**வானவர் தம் முன்னவனை மூழிக்களத்து விளக்கினை அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை நென்னலை இன்றினை நாளையை**

**(வானவர் தம் முன்னவனை)** நித்யஸூரிகளுக்கும் கூட அநுபவித்து முடிக்கவொண்ணாதபடி இருப்பவனை. **पूर्वो यो देवेभ्यो जातः** (எவன் நித்யஸூரிகளுக்கும் முன்னவனோ. புருஷஸூக்தம்)

**(மூழிக்களத்து விளக்கினை)** திருமூழிக்களத்தில் அவதரித்த உடன் முன்னைக் காட்டிலும் விளங்கி நிற்பவனை. **श्रेयान् भवति जायमानः** (பிறந்த பின்பே பெருமை பெறுகிறான்) என்றது பழமறை.

**(அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை)** வாய்விட்டுச் சொல்ல முடியாத அழகையுடையவனாயும், காலத்தை அளப்பவனாகவும் உள்ளவனை. ஆண்டு என்பது வருஷம். அதால் உபலக்ஷிக்கப்பட்ட காலத்தைச் சொல்லுகிறது. பொருள்களை காலம் அளவுபடுத்தும். இவன் காலத்தை அளவுபடுத்துவன். **कालं स पचते** (காலத்துக்கு அவன் வேறுபாடுகளை உண்டு பண்ணுகிறான். பார.சாந்.196–9). காலத்தை எப்படி அளவு படுத்துகிறான் என்று பேசுகிறார் மேலே.

**(நென்னலை இன்றினை நாளையை)** கழிந்த காலம், நடப்புக்காலம், வரும் காலம் என்று மூன்று பிரிவாக்கிக் காலத்தை நிர்வஹிப்பவனை. 'வருங்காலம் நிகழ்காலம் கழிகாலமாய் உலகை ஒருங்காக அளிப்பாய்' (திருவாய். 3–1–5) 'சென்று செல்லாதன

முன்னிலாம் காலமே' (திருவாய். 3–8–8) என்பன நம்மாழ்வாரின் திருவாக்குகள்.

**நீர்மலைமேல் மன்னு மறைநான்கு மானானை புல்லாணித்தென்னன் தமிழை வடமொழியை நாங்கூரில் மன்னு மணிமாடக் கோயில் மணாளனை நல்நீர் தலைச் சங்க நாண்மதியை**

**(நீர்மலைமேல் மன்னு மறைநான்கு மானானை)** திருநீர்மலைமேல் எழுந்தருளியிருப்பவனாய், நித்ய நிர்தோஷமான நான்கு வேதங்களாலும் அறியப்படுபவனை. **वेदैश्च सर्वैः अहमेव वेद्यः** (வேதங்களனைத்தினாலும் அறியப்படுமவன் நானே. கீதை 15–15)

**(புல்லாணித்தென்னன் தமிழை)** பாண்டியனுடைய திருப்புல்லாணியில் தமிழ் மறையாலே பாடப்படுமவனை, அகத்தியரின் தமிழால் பாடப்படுமவனை.

**(வடமொழியை)** ஸ்ரீமத்ராமாயணம் முதலிய வடமொழி நூல்களால் சொல்லப்படுமவனை.

**(நாங்கூரில் மன்னு மணிமாடக் கோயில் மணாளனை)** திருநாங்கூரில் மணிமாடக் கோயிலில் நிலையாக நின்று என்னை எழுதிக்கொண்ட மணவாளப் பிள்ளையை.

**(நல்நீர் தலைச் சங்க நாண்மதியை)** நல்ல நீர்ப் பெருக்கையுடைய தலைச்சங்காட்டிலே கடலில் பௌர்ணமியன்று உதித்த சந்த்ரன் போன்று அழகானவனை.

**நான் வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை தென்னறையூர் மன்னு மணிமாடக் கோயில் மணாளனை**

ஒப–ஒ

**(நான் வணங்கும் கண்ணனைக் கண்ணபுரத்தானை)** 'கண்ணபுரம் ஒன்றுடையானுக்கு அடியேன் ஒருவர்க் குரியேனோ' (பெரியதிரு.8–9–3) என்றபடி என்னை அனன்யார்ஹசேஷ மாக்கிக் கொண்ட கண்ணனை.

**(தென்னறையூர் மன்னு மணிமாடக் கோயில் மணாளனை)** அழகிய திருநறையூரில் விளங்கும் மணிமாடக் கோயிலில் என்னை மடலெடுக்கும்படி பண்ணின மணவாளப் பிள்ளையை. மணாளனை – நாச்சியார் கோயில் ஆதலால் தன் ஆணை செல்லாத மணவாளப் பிள்ளை. மேலே வேறு திவ்ய தேசத்தைச் சொல்லாமல் தன் உறுதியைக் கூறுகிறார்.

**கல்நவில் தோள் காளையைக் கண்டு ஆங்குக் கைதொழுது**
**என்னிலைமை எல்லாம் அறிவித்தால் எம்பெருமான்**
**தன்னருளும் ஆகமும் தாரானேல்**

**(கல்நவில் தோள் காளையை)** ஓர் அபலையை வென்றோமென்று கல் போல் இருப்பதாய் பூண் கட்டின தன் தோள்களின் வலிமையைக் கொண்டாடிக் கொண்டிருப்பவனை. காளையை – என்னை மடலெடுக்கப் பண்ணின தன் பருவத்தை மதித்திருப்பவனை.

**(கண்டு)** 'என்னுடைய கண்களிப்பநோக்கினேன்' என்று தொடங்கினபடியே முழுமையாகக் கண்டல்லது விடேன்.

**(ஆங்குக் கைதொழுது)** கண்டவிடத்தே அவனுக்கு ஓரஞ்ஜலிசெய்து. ஓரஞ்ஜலிக்கே நீர்ப்பண்டமாய் உருகுபவனாதலின் இதுவே தன் மனோரதத்தைப் பெற்றுக் கொடுக்கும் என்று நினைக்கிறாள்.

**(என்னிலைமை எல்லாம் அறிவித்தால்)** மடலெடுக்கும் அளவுக்குச் சென்ற என்னிலைமை எல்லாம் அறிவித்தால், 'உன்னைக் காண்பதோராசையினால் வேயேய் பூம்பொழில் சூழ் விரையார்

திருவேங்கடவா நாயேன் வந்தடைந்தேன்' (பெரியதிரு.1–9–1) என்று ஆசைப்பட்ட படியையும் 'ஆகிலும் ஆசை விடாளால்' (பெரியதிரு. 2–7–1) என்று தாய் சொல்லும்படி அவ்வாசை தொடர்ந்து வந்ததையும் 'என் சிந்தனைக் கினியாய்' (பெரியதிரு.3–5–1) 'புகுந்தாயைப் போகலொட்டேன்' (பெரியதிரு.3–5–6) என்று கால் கட்டிய நிலையையும் அடுத்த திருமொழியான 'தூவிரிய'வில் (3–6) வண்டு, குருகு முதலானவற்றைத் தூது விட்ட நிலையையும் 'கொல்லையானாள் பரிசழிந்தாள்' (4–8–4) என்று திருப்பார்த்தன்பள்ளியில் பரிசிழந்த படியையும் 'உம்மைக்காணும் ஆசையென்னும் கடலில் வீழ்ந்து'(4–9–3) என்றபடி திருவிந்தளூரில் ஆசைக்கடலில் வீழ்ந்த படியையும், 'வெருவாதாள்' என்ற பதிகத்தில் (5–5) 'வேங்கடமே வேங்கடமே' என்று வாய்வெருவியும், 'தாதாடு வனமாலை தாரானோ' என்று தளர்ந்து கதறினபடியையும், 'நானடியேன் நறையூர் நின்றநம்பியை கனவில் கண்டேன்' (7–3–1) என்றபடி கனாக் கண்டதையும், 'தந்தைகாலில்'என்ற திருவழுந்தூர் பதிகத்தில் (7–5) 'என்னைம் புலனும் எழிலுங்கொண்டிங்கே நெருநலெழுந்தருளி பொன்னங்கலைகள் மெலிவெய்த' (7–5–9) என்னும் நிலையை அடைந்ததையும், 'தெள்ளியீர்' என்ற பதிகத்தில் (8–2) கண்ணபுரமென்று பேசி உருகி உள்மெலிந்த படியையும், 'கரையெடுத்த' (8–3) என்ற அடுத்த பதிகத்தில் வளையிழந்ததையும், 'தந்தைகாலில்' (8–5) என்ற திருமொழியில் 'தாரினாசையில் போயின நெஞ்சமும் தாழ்ந்தது' (8–5–2) 'கரிய நாழிகை ஊழியில் பெரியன கழியுமாறறியேனே' (8–5–6) என்று நெஞ்சம் தாரினாசையால் போகப்பெற்று நாழிகை ஊழியில் பெரிதானபடியையும், 'காவார் மடல்' திருமொழியில் (9–4) 'புல்லாணி எம்பெருமான் பொய் கேட்டிருந்தேனே' (9–4–5) 'இழந்திருந்தேன் என் தன் எழில் நிறமும் சங்குமே' (9–4–6) 'ஓதமும் நானும் உறங்காதிருந்தேனே'(9–4–9) என்ற நிலைகளையடைந்து,

'தவள இளம்பிறை' என்ற திருமொழியில் (9–5) 'துயிலாதிருப்பேன்', 'உறங்கேன்' என்று தரையிலே கிடந்தபடியையும், 'மூவரில் முன் முதல்வன்' என்ற திருமொழியில் (9–9) தான் ஆசைப்பட்டும் திருமாலிருஞ்சோலையில் கூட அவன் கிடைக்காமையால் 'திருத்தாய் செம்போத்தே' என்ற திருமொழியில் (10–10) 'கொங்கார் சோலைக் குடந்தைக் கிடந்தமால் இங்கே போதுங்கொலோ' (10–10–8) என்று சகுனம் பார்த்தபடியையும், இப்போது மடலெடுக்க இருக்கிற இந்த நிலையையும் ஆக இவற்றையெல்லாம் அறிவித்தால்.

(எம்பெருமான்) எனக்கும் அவனுக்கும் உள்ள உறவு அவன் வரும்வரை காத்திருக்க விடவில்லையே.

(தன்னருளும்) தர்மத்துக்குத் தண்ணீர் வார்க்கை. தன் கருணைத் தண்ணீரை வார்த்து.

(ஆகமும்) என்மார்வோடு தன் நெஞ்சையணைத்து.

(தாரானேல்) என்னை உயிர்பெறச் செய்யாவிடில். உடலில் உயிர் நில்லாது என்று கருத்து.

**தன்னை நான் மின்னிடையார் சேரியிலும் வேதியர்கள்**
**வாழ்விடத்தும் தன்னடியார் முன்பும் தரணி முழுதாளும்**
**கொன்னவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்**
**தன்னிலைமை எல்லாம் அறிவிப்பன்**

(தன்னை) 'மெய் போலே பாவித்துப் பொரி புறந்தடவியிருக்கிற தன்னை' என்பது பெரியவாச்சான் பிள்ளை உபமானம். பொரிக்கு உண்மையில் இனிப்பு இல்லை. ஆனால் மேலே வெல்லம் தடவினால் அது இனிக்கிறது. இவனும் உண்மையாய் என்னிடம் அன்பு

இல்லாதிருந்தும் மேலுக்கு அன்புள்ளவன் போல் நடிக்கிறான். அப்படிப்பட்டவனை.

**(நான்)** அவன் பொய்களையெல்லாம் வெளியிடப் போகும் நான்.

**(மின்னிடையார் சேரியிலும்)** முதலில் பெண்கள் இருக்கும் திரளில் போவேன் என்கிறாள். அங்கு போய் சொல்வேன். உன்னைத் தவிர அறியேன் என்று சொல்லி என்னைக் காதல் செய்தான். மறந்தும் போனான். அது போல உங்களிடமும் காதல் கொண்டவன் போல் நடித்து உங்களுடைய மின்னிடையல்லது அறியேன் என்று கூறி ஏமாற்றுவன் என்பேன். மின்னிடையாராவது ஆண்டாள் குரவை கோத்த ஆயர்பாடி இளங்கன்னிமார்கள் போன்றவர்கள். இவர்கள் கோஷ்டியில் அழகை ரஸிக்கும் பரமரஸிகன் என்று பெயர் வாங்கியிருக்கிறான். என் நிலைமையைக் காட்டி என் அழகை அவன் ரஸித்தபடியைப் பாருங்கோள் என்று சொல்லி அவன் ரஸிகத்வத்தை அழிப்பேன் என்கிறாள்.

**(வேதியர்கள் வாழ்விடத்தும்)** வேதம் முதலான ப்ரமாணங்களை அறிந்து இவனே பரதேவதை என்று துணிந்து இவனுடைய ஆராதனமாக யஜ்ஞம் முதலானவை செய்யுமிடத்திற்குப் போவேன். இவனைப் பரமதயாளு என்று நம்பும் அவர்களுக்கு என் நிலைமையைக் காட்டி அவனுடைய இரக்கம் இருந்தபடியைப் பாருங்கள் என்பேன்.

**(தன்னடியார் முன்பும்)** இவனுடைய குணங்களுக்குத் தோற்று அடிமை பூண்டிருக்கும் இளைய பெருமாள், நம்மாழ்வார் போன்றவர்கள் கூட்டத்தில் சென்று இவனுடைய குணங்கள் இருந்தபடியைக் காணுங்கோள் என்பேன்.

**(தரணி முழுதாளும் கொன்னவிலும் வேல் வேந்தர் கூட்டத்தும் நாட்டகத்தும்)** பூமியிலுள்ள நாடுகள் பல. அவற்றை ஆளும் அரசர்களும் பலர். அவர்கள் குலஸேகரரையும் தொண்டைமானையும் போல நற்குடிப் பிறப்பும் வீரமும் மிக்கவர்கள். அவர்கள் எம்பெருமானுடைய வீரத்தையும் ரக்ஷகத்வத்தையும் கொண்டாடியிருப்பர். அவர்கள் கூட்டத்தில் சென்று இக்ஷ்வாகு குலத்தில் பிறந்து ஸூத்தவீரன் எனப்பட்ட இவன் அபலையான என்னிடம் காட்டிய வீரத்தைப் பாருங்கள். எல்லோரையும் ரக்ஷிப்பவனான இவன் என்னைக் காத்தபடியைப் பாருங்கள் என்பேன். நாட்டகத்தும் – இப்படி நாலைந்து இடங்களிலே மட்டுமோ சொல்லுவேன். அவனை ஸர்வேஶ்வரன் என்றும் ரக்ஷகனென்றும் சொல்லுவார் உள்ள இடமெங்கும் சென்று சொல்லுவேன்.

**(தன்னிலைமை எல்லாம் அறிவிப்பன்)** தன் வடிவைக்காட்டி என்னைத் தோற்பித்தான். பிறகு பிரிந்தான். ஆற்றாமையை உண்டாக்கினான். மடலெடுக்கச்செய்தான். அப்படியும் தன்னைக் காட்டாதே என்னை வருத்துகிறான். இதையெல்லாம் சொல்லுவேன்.

இனி தானும் மற்றைய ஆழ்வார்களும் மயங்கி ஈடுபடும் திவ்ய சேஷ்டிதங்களையெல்லாம் இழிதொழில்களாக நிரூபிப்பேன் என்கிறாள்.

> **தான் முனநாள் மின்னிடையாய்ச்சியர் தம் சேரிக்களவின்கண்துன்னுபடல் திறந்து புக்கு தயிர் வெண்ணெய் தன் வயிறார விழுங்க கொழுங்கயற்கண் மன்னுமடவோர்கள் பற்றி ஓர் வான்கயிற்றால் பின்னு முரலோடு கட்டுண்ட பெற்றிமையும்**

முன்பொரு நாள் இடைச் சேரியில் வெண்ணெய் திருடி உரலோடு கட்டுண்டு கிடந்த பெருமையை ஊரறியச் சொல்லுகிறேன். **(தான்)**

திருட்டுத் தொழிலைச் செய்து விட்டு தான் என்ற பெருமையோடு இருக்கிறானே. **(முன நாள்)** சிறு வயதிலேயே திருட ஆரம்பித்தான். **(மின்னிடை)** திருடின தன்னைப் பிடிக்க ஓடிவரும் போது ஆய்ச்சியருடைய மின்னிடை அசைவதைக் காணவன்றோ களவு செய்தது. **(மின்னிடை ஆய்ச்சியர்தம்)** என்னைப் போலே வீரபுருஷர்களிடமும் புருஷோத்தமனிடத்திலுமோ களவு செய்தான். அபலைகளான பெண்களிடமன்றோ இவன் களவு செய்தது. **(ஆய்ச்சியர்தம் சேரிக்களவின் கண்)** என்ன பட்டணத்தே புக்கான் ? இடைச்சேரியன்றோ. **(துன்னுபடல் திறந்து புக்கு)** என்ன மகுடபங்கம் பண்ணினான் ? துன்னுபடலன்றோ – நெருக்கமாகக்கட்டிய படல். **(தயிர்வெண்ணெய்)** என்ன ப்ரதிமை எடுத்தான் ? வெண்ணெயன்றோ. **(தன் வயிறார விழுங்க)** என்னதிருப்பணி செய்தான் ? தன் வயிறு வளர்த்தானத்தனையன்றோ. தாம் செய்த களவோடு ஒப்பிட்டால் கண்ணன் செய்தகளவும் ஒரு களவாமோ என்கிறார். இவர் களவு செய்தது பல தெருக்களும் கட்டுக் காவலும் மிகுந்த நாகப்பட்டினத்தில். இதுவோ ஆய்ச்சேரி. புத்தவிஹாரத்தின் உள்ளே புகுவதற்கு மேலே உள்ளதும் எப்போதும் சுழன்று கொண்டிருப்பதுமான ஒரு யந்திரத்தை நிறுத்த வேண்டியிருந்தது. இது அந்த விஹாரத்திற்கு மகுடபங்கம் போலேயாயிற்று. இங்கே ஆயர்கள் நெருக்கமாகக் கட்டிவைத்த படலைத்திறந்து கொண்டு புகுந்தான். களவுதான் செய்தானே. என்னைப் போலே பெருவிலை மதிப்புள்ள ஸ்வர்ண விக்ரஹத்தையா திருடினான் ? எளியதாய் இடைச்சேரியில் எங்கும் கிடைக்கக்கூடிய தயிர் வெண்ணெயை யன்றோ திருடியது. நான் திருடியது பரார்த்தமாக (பிறருக்காக, எம்பெருமானுக்காக) இவன் தன் வயிறு வளர்க்கவே திருடினான்.

**(கொழுங்கயல்கண்)** பலமுறை களவு செய்தும் கையில் அகப்படாமல் தப்பிப் போன கண்ணன் இம்முறை தங்கள் கையில் அகப்பட்டதாலுண்டான ஆநந்தம் கண்களிலே மிளிர்கிறது.

**(மன்னுமடவோர்கள் பற்றி)** அகப்பட்டவுடன் இவன் கையைப் பிடித்துக் கொண்டது ஒருவர் இருவரல்ல. பலப்பல பெண்கள். **(ஓர் வான் கயிற்றால்)** கைக்கு எட்டாத அவனைப் போலல்லாமல் நினைத்தவுடன் கைக்கெட்டிய அழகிய கயிறு. வான் என்பதற்கு பெரிய என்று பொருளல்ல, 'கண்ணிநுண்சிறுத்தாம்பினால்' (கண்ணி) என்றும் 'கண்ணிக் குறுங்கயிற்றால் கட்டுண்டான் காணேடீ' (பெரியதிரு. 11–5–5) என்றும் ஆழ்வார்கள் அநுஸந்தித்திருப்பதாலே. தீம்பு செய்த இவனைக் கட்டக் கூடிய நல்ல கயிறு.

**(பின்னும் உரலோடு கட்டுண்ட பெற்றிமையும்)** பெற்றிமை – பெருமை. விபரீத லக்ஷணையாலே சிறுமையைக் குறிக்கிறது.

இன்னொரு செயலையும் சொல்லுகிறேன் கேளுங்கள்.

> **அன்னதோர் பூதமாய் ஆயர்விழவின்கண் துன்னு சகடத்தால்**
> **புக்க பெருஞ்சோற்றை முன்னிருந்து முற்றத்தான் துற்றிய**
> **தெற்றெனவும்**

**(அன்னதோர்)** வாய்கொண்டு பேசவும் தகாத வெறுக்கத்தக்க வேஷத்தையல்லவோ கொண்டான். 'அம்மே அப்பூச்சி' என்று முகத்தைத் திருப்பிக் கொள்ளச் செய்யும் வடிவு. **(பூதமாய்)** மிகத் தாழ்ந்த பூத வடிவையோ கொள்ள வேண்டும். **(ஆயர் விழவின் கண்)** பெரும்பசியுள்ள பூதமாகையாலே சோறுகண்டவிடமெங்கும் திரியலாயிற்று. தன்னையே ஆஶ்ரயித்திருக்கும் ஆயருடைய சோற்றையும் விழுங்க ஆரம்பித்தது. **(துன்னு சகடத்தால் புக்க பெருஞ்சோற்றை)** ஒருவரிருவர் சுமந்து சென்ற சோறல்ல. வண்டி வண்டியாகக் குவித்த சோறு. 'அட்டுக்குவி சோற்றுப் பருப்பதமும் தயிர் வாவியும் நெய்யளறும் அடங்கப் பொட்டத்துற்றி'

(பெரியாழ்.திரு. 3–5–1) என்றபடி அன்னமலையையும் தயிர்க்கிணற்றையும் நெய்க்குட்டையையும் சேர்த்தல்லவோ விழுங்கியது. **(முன்னிருந்து)** பெருஞ்சோற்றைத் தின்னும் போது ஒரு திரையாவது போட்டுக் கொள்ளலாகாதோ. எல்லோர் எதிரிலும் வெட்கமில்லாமல் விழுங்கினான். **(முற்றத்தான் துற்றிய)** ஒரு பருக்கை கூட மற்றவருக்குத் தராமல் எல்லா வற்றையும் தானே உண்டான். **(தெற்றனவும்)** இப்படிச் செய்ததில் கொஞ்சமும் வெட்கமில்லையே. இதற்கு மேலும் ஒன்று சொல்லுகிறேன் கேளுங்கள்.

**மன்னர் பெருஞ்சவையுள் வாழ்வேந்தர் தூதனாய் தன்னை
இகழ்ந்துரைப்பத்தான் முனநாள் சென்றதுவும்**

**(மன்னர் பெருஞ்சவையுள்)** இவன் அவமானப்பட்டது ஒருவரும் அறியாத இடத்திலேயோ. பல மன்னர்கள் திரண்டிருந்த ஸபையிலன்றோ துரியோதனன் இவனை இகழ்ந்து உரைத்தான். **(வாழ்வேந்தர் தூதனாய்)** தூதுதான் சென்றானே. உலகையெல்லாம் ஆளும் சக்ரவர்த்தியின் தூதனாகவா சென்றான். வாழ்க்கையோடு போராடிக் கொண்டிருந்த பாண்டவர்களுக்காகவன்றோ சென்றது. 'நாழியரிசியேற ஜீவித்தார்க்குத் தூது போம் வேண்டப்பாடு'. **(தன்னை இகழ்ந்துரைப்ப)** **भीष्मद्रोणावतिक्रम्य मांचैव मधुसूदन। किमर्थं पुण्डरीकाक्ष भुक्तं वृषल भोजनम् ॥** (புண்டரீகாக்ஷ, பீஷ்மத்ரோணாதிகளையும் என்னையும் விட்டு ஏன் சூத்திரன் (விதுரன்) உணவையுண்டாய். பாரதஸாவித்ரீ – 13) என்று துர்யோதனன் இகழ்ந்து கூறும்படி. **(தான்)** இது செய்தவனுக்குத் தான் என்ற மதிப்பு எதற்கு ? **(முனநாள் சென்றதுவும்)** இது செய்து வெகுநாளாகிவிட்டது என்று ஆறியிருக்கிறானோ. எனக்கு நேற்று நடந்தது போல் காட்சியளிக்கிறது. இன்னுமொன்று சொல்லுகிறன் கேளுங்கள்.

**மன்னுபறை கறங்க மங்கையர்தம் கண்களிப்ப கொன்னவிலும் கூத்தனாய் பெயர்த்தும் குடமாடி என்னிவன் என்னப் படுகின்ற ஈடறவும்**

**(மன்னுபறைகறங்க)** இவனுடைய வெட்கங்கெட்ட செயலுக்குத் துணையாக யாரும் வாராமையாலே பறையைத் தன்னிடையிலே கட்டிக் கொண்டான். **(மங்கையர் தம் கண்களிப்ப)** பெண்கள் கொண்டாடும் கூத்தாடிச் செயல். மானிகளான பெரியவர்கள் இதைச் செய்ய நினைக்கவும் மாட்டார்கள். **(கொன்னவிலும் கூத்தனாய்)** கூத்தாடும்போது பார்த்த பெண்களைக் கொலைசெய்ய வல்ல அழகையுடையவனாய். **(பெயர்த்தும் குடமாடி)** அதற்கு மேலும் குடத்தை எடுத்தேறவிட்டுக் கூத்தாடி. **(என்னிவன் என்னப்படுகின்ற ஈடறவும்)** என்ன செய்வது. இப்படிக் கூத்தாடி நம்மைக் கொலை செய்யாமல் இவ்விடத்தை விட்டுப் போகமாட்டானோ என்று மங்கையர் கருதும்படியிருக்கும் எளிமையையும். முன்சொன்னதெல்லாம் கிடக்கட்டும். அவன் செய்த கொடுமையைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

**தென்னிலங்கையாட்டி அரக்கர் குலப்பாவை மன்னனிராவணன் தன் நல்தங்கை வாளெயிற்றுத் துன்னு சுடுசினத்துச் சூர்ப்பணகாசோர்வெய்தி பொன்னிறங் கொண்டு புலர்ந்தெழுந்த காமத்தால் தன்னை நயந்தாளைத் தான் முனிந்து மூக்கரிந்து மன்னிய திண்ணெனவும்**

**(தென்னிலங்கையாட்டி)** இவளைப் போல் பிறந்தவர் உண்டோ. ராவணனுக்கு இலங்கைக்கரசன் என்ற பெயர் மட்டுமே. உண்மையில் இலங்கையை நடத்தி வந்தவள் இவளே. **(அரக்கர் குலப்பாவை)** அரக்கர் குலத்துக்கு ஒரு மணியாகவே

பிறந்திருந்தாள். **(மன்னனிராவணன்)** அரசன் என்றால் அவனன்றோ அரசன். அவனைப் போல் வாழ்ந்தாருண்டோ. **(தன் நல்தங்கை)** அவனுக்கு உயிருக்குயிரானவள். உடன் பிறந்த தங்கை. **(வாளெயிற்று)** அவளுடைய பற்களின் ஒளிதான் எப்படிப்பட்டது. **(துன்னுசுடுசினத்து)** காதலின் தன்மையறியாத இவனிடம் அவள் கொண்டகோபம் அவளுடைய உள்ளத்தின் அழகையன்றோ காட்டுகிறது. **(சூர்ப்பணகா சோர்வெய்தி)** அவளும் என்னைப்போலே காதலால் உடல் சோர்வடைந்தாள். **(பொன்னிறங்கொண்டு)** காதல் ஈடேறாமையால் என்னைப் போலே உடம்பு வெளுத்தாள். **(புலர்ந்து)** மேனி துவண்டாள். **(எழுந்த காமத்தால்)** கடல் போலே கிளர்ந்து எழுந்த காதலாலே. **(தன்னை நயந்தாளை)** இவனை ஆசைப்பட்டது தான் அவள் செய்த குற்றம். **(தான் முனிந்து)** ஆசைப்பட்டவர்களைத் தானும் ஆசைப்பட வேண்டியிருக்க அது செய்யாமல் கோபம் கொண்டான். **(மூக்கரிந்து)** அது மட்டுமல்ல. மூக்கையும் அறுத்துவிட்டான். **(மன்னிய திண்ணெனவும்)** இப்படிச் செய்ததற்கு அநுதாபமாவது பட்டானா. மாறாக பெரிய வீரச் செயலைச் செய்தது போல திண்மையோடே இருந்தான்.

கடைசீயாக கொடுமைக் கெல்லாம் சிகரமாக அவன் செய்ததைச் சொல்லுகிறேன் கேளுங்கள்.

> **வாய்த்த மலை போலும் தன்னிகரொன்றில்லாத தாடகையை**
> **மாமுனிக்காத் தென்னுலகம் ஏற்றுவித்த திண்திறலும்**

**(வாய்த்த மலை போலும்)** என்ன உடம்பு படைத்திருந்தாள். **(தன்நிகர் ஒன்றில்லாத தாடகையை)** அவள்போனாலும் ஆறியிருக்கலாம் என்பதற்கு அவளைப் போல் இன்னொருவர் உண்டோ.

**(மாமுனிக்கா)** இக்கொடுமையைச் செய்தானே. எவ்வளவு தந்திரமாகச் செய்திருக்கிறான். 'ஸ்த்ரீவதம் செய்தாய்' என்று யாராவது தன்னைக் கேட்டால் 'ஒரு பார்ப்பான் சொல்லிச் செய்தேன்' என்று அவன்மேல் பழியேறும் படியல்லவோ இவன் தந்திரம் இருந்தது. இவ்வர்த்தத்தை பட்டர் அருளிச்செய்ய நான் கேட்டேன் என்று நம்பிள்ளை அருளிச் செய்வர் என்றார் நாயனார். இவனைப் பிராட்டியோடு கூட்டிவைக்க நினைத்த மஹா தபஸ்வியான விஶ்வாமித்ரருக்கன்றோ இந்த இழுக்கு வரும்படி செய்தான். **(தென்னுலகம் ஏற்றுவித்த)** சூர்ப்பணகையையாவது இவ்வுலகில் விட்டு வைத்தான். தாடகையை யமனுலகுக்கே அனுப்பி வைத்தான். **(திண் திறலும்)** அபலைகளான பெண்களிடம் இவன் காட்டிய பலத்தை என்னவென்று புகழ்வது.

**மற்றிவை தான் உன்னி உலவா உலகறிய ஊர்வன் நான் முன்னி முளைத்து எழுந்து ஓங்கி ஒளிபரந்த மன்னிய பூம்பெண்ணை மடல்**

**(மற்றிவை தான் உன்னி உலவா)** உலவு – முடிவு. உலவா – முடியா. மற்றிவைதான் – இவனைப் பற்றி இன்னும் பல தாழ்வுரைகளை நான் ஆபத்தனம்போலே தேடிவைத்திருக்கிறேன். அவைநினைத்து முடியா. இவற்றைச் சொன்னவளவில் அவன் அலறிக்கொண்டு வந்து என் காலில் விழுவான். ஆகையால் இவை எனக்கு ஆபத்தனம் போன்றவை.

**(உலகறிய ஊர்வன் நான்)** சேதனர் அனைவரும் அறியும்படி மடலூரக்கடவேன்.

**(முன்னி)** முன்னின்று. இனி அவன் வரப் பார்த்திருக்க முடியாது என்கை. எப்படிப்பட்ட மடல்?

**(முளைத்து எழுந்து ஓங்கி ஒளிபரந்த மன்னிய பூம்பெண்ணை மடல்)**

மண்ணிலே முளைத்து மிகவுயர்ந்து ஒளி வீசிநிற்கும் பனைமடலை ஊரக்கடவேன். நான் ஊர்வன். என் கையில் ப்ரஹ்மாஸ்திரம் இருக்கிறது. என் காரியம் ஈடேறத்தடையில்லை. விஶ்வாமித்ரனைப் போலே தன்னையும் அவனோடு இம்மடல் கூட்டி வைக்குமாகையால் மடலைக் கொண்டாடுகிறாள்.

கம்பர் பாடல்

**என்னிலைமையெல்லாம் மறிவித்தா லெம்பெருமான்**
**தன்னருளு மாகமும் தாரானேல் –பின்னைப் போய்**
**ஒண்துறை நீர் வேலை உலகறிய வூர்வன் நான்**
**வண்டறை பூம் பெண்ணை மடல்.**

என் அவஸ்தைகளை முழுவதும் தெரிவித்த பின்பும் என் ஸ்வாமியான ஸர்வேஶ்வரன் தன் க்ருபையையும் தன் திருமார்பையும் தரவில்லையாகில், ஒளிபொருந்திய துறைகளையுடைய நீர்நிரம்பிய கடல் சூழ்ந்த உலகினர் அறியும் படியாக நான் வண்டுகள் ஒலிக்கும் அழகிய பனைமடலை ஊரக்கடவேன்.

மற்றொரு பாடல்

**மண்ணில் பொடிப்பூசி வண்டிரைக்கும் பூச்சூடி**
**பெண்ணை மடல் பிடித்துப் பின்னே – அண்ணல்**
**திருநறையூர் நின்ற பிரான் தேர்போகும் வீதி**
**பொருமறையாய்ச் செல்வம் பொலிந்து.**

மடலூரும் போது தன் வேஷமிருக்கிறபடியையும் மடலெடுத்தால் வரும் பலனையும் சொல்கிறது.

உடலில் மண்தூளைப் பூசிக் கொண்டு வண்டுகள் ஒலிக்கும் பூக்களைச்சூடி பனைமடலைக் கையிலே எடுத்துக் கொண்டு அதற்கு மேல் ஸ்வாமியாய் திருநறையூரில் நின்ற உபகாரகனுடைய தேர் ஓடும் தெருவிலே அவனுடைய திவ்ய சேஷ்டிதங்களைக் கூவிக்கொண்டு செல்வாய். இப்படிச் செய்தால் அவனுடைய அருளும் கைங்கர்யச் செல்வமும் வந்து சேரும்.

இன்றும் திருத்தோன்று திருமடல் ஸேவிப்பது இப்பாடலை அடியொற்றியிருப்பதாகத் தோன்றுகிறது.

ஆழ்வார் திருவடிகளே ஶரணம்.

சீரார் தூப்புல் திருவேங்கடவன் திருவடிகளே ஶரணம்.

அறிவுதரும் பெரியதிருமொழி தப்பாமல்

ஆயிரத்தோடெண்பத்து நாலுபாட்டும்

குறியதொரு தாண்டகம் நாலைந்து ஆறைந்து

குலாநெடுந்தாண்டகமெழுகூற்றிருக்கையொன்றும்

சிறிய மடல் பாட்டு முப்பத்தெட்டிரண்டும்

சீர் பெரிய மடலதனில் பாட்டெழுபத்தெட்டும்

இறைவனே! கார்த்திகையில் கார்த்திகை நாள்

எழில் குறையல் வரும் கலியா! இரங்குநீயே.

– ஸ்வாமி தேஶிகன்

கார்த்திகையில் கார்த்திகைநாள் களிக்கவந்தோன் வாழியே

காசினியில் திருக்குறையல் அவதரித்தான் வாழியே

சார்த்த திருமொழிதன்னைச் சாதித்தான் வாழியே

தாண்டகமோரிரண் டெமக்குத் தந்தவள்ளல் வாழியே

ஏர்த்த எழுகூற்றிருக்கை இருமடலோன் வாழியே

இம்மூன்றில் நூற்றுப் பத்தொன்பதுளான் வாழியே

வார்த்த புகழ் குமுதவல்லி மணவாளன் வாழியே

மங்கையர்கோன் மலர்ப்பதங்கள் மாநிலத்து வாழியே.

– மூன்றாவது ப்ரஹ்மதந்த்ர ஸ்வதந்த்ர ஜீயர்

